# கூட்டுறவு

ஆசிரியர் :

அ. முத்தையா, எம். ஏ.,

பொருளாதார உதவிப் பேராசிரியர்

(*Assistant Professor of Economics*)

பச்சையப்பன் கல்லூரி,

சென்னை.

பதிப்பகம் :

**புத்தறிவுப் பதிப்பகம்**

தியாகராயநகர்

சென்னை.

சென்னை மாகாணக் கூட்டுறவு இலாக்காவின் தலைவராய்
இருந்தவரும் சென்னை மேல் சட்டசபையின் உறுப்பினருமான
திருவாளர்
**திவான்பகதூர் K. தேவசிகாமணி முதலியாரவர்கள், M.L.C.**
அன்புடன் அளித்த

# அணிந்துரை

---

"ஆயிர முகத்தான் அகன்ற தாயினும்
பாயிரம் இல்லது பனுவல் அன்றே"

என்னும் பவணந்தியார் வாக்கை உண்மையாக்கும் பொருட்டேபோலும் இந்நூலாசிரியர் யான் இதனை வரையுமாறு விரும்பினர். அவர் நூலை முழுவதும் படித்துப் பார்த்தபின் அவர் வேண்டுகோளை நிறைவேற்றுவதில் இழுக்கொன்றுமில்லையென்று துணிந்து இதை எழுதலானேன். தமிழ் நாட்டின்கண் கூட்டுறவு இயக்கத்தில் ஈடுபட்டிருப்பவர்களுக்கும் அதனை ஆராய்ந்து அறிய விரும்புகின்றவர்களுக்கும் இந்நூல் மிகவும் பயன்படுமென்று நினைக்கின்றேன். எளிய செந்தமிழ் நடையில் இந்நூல் எழுதப்பட்டிருப்பதால், ஆசிரியரின் கருத்துக்களை யாவரும் எளிதில் அறிந்துகொள்ளக்கூடும்.

கூட்டுறவுச் சங்கங்கள் பலவேறு வகையாகப் பிரிக்கப்பட்டிருந்தாலும், அவைகளின் அடிப்படையான கொள்கை ஒன்றுதான். இந்த அடிப்படையான கொள்கையைத் தம்மிடத்தில் கொண்டிருக்கிற ஸ்தாபனங்களெல்லாம் கூட்டுறவுச் சங்கங்களே. ஆனாலும், இவைகள் வெவ்

வேறான தொகுதிகளில் வகுத்துக் காட்டப்பட்டிருக்கின்றன. இந்நூலாசிரியர் இத்தொகுதிகளைச் சீர்தூக்கி ஆராய்ந்து இவைகளின் பகுப்பு, அமைப்பு, நோக்கம், செயல் முதலியவற்றைச் செவ்வனே விளக்கியிருக்கின்றார்; அன்றியும், ஏனைய நாடுகளின் கூட்டுறவின் சிறப்பினையும் வளர்ச்சியையும் எடுத்துக் காட்டியிருக்கின்றார்.

நம் நாட்டுக் கூட்டுறவியக்கத்தில் உள்ள குறைகளைத் திருத்தி வளர்ச்சி செய்வதில் என்ன செய்யவேண்டும் என்பதை ஆராய்ந்தவர்களின் கூற்றையும் ஆராய்ந்து இவர் தமது முடிவைத் தெரிவித்திருக்கிறார்.

புத்தறிவு நூல் ஒன்றை நந்தமிழ் மொழியில் இயற்ற முன் வந்த நமது இளைஞர் முத்தையரை நாம் பாராட்டாமல் இருக்க இயலாது. இவர் கூட்டுறவை யன்றி ஏனைய துறைகளிலும் புது நூல்கள் இயற்றுவா ரென நாம் நம்பலாம்.

அதுபற்றி தமிழ் நாட்டினர் பலர் இந்நூலை வாங்கி இவ்வாசிரியரை உற்சாகப்படுத்துவர் என நம்புகிறேன்.

சென்னை,
29—3—39

கீழச்சேரி தெய்வசிகாமணி

# முன்னுரை

தமிழ்மொழியைத் தாய்மொழியாகக்கொண்ட அனைவரும் தமிழுக்குப் பல்லாற்றானும் ஆக்கம் தேடவேண்டும்; தமிழை ஆவலுடன் படித்தல் வேண்டும்; தமிழில் புத்தம் புது விஷயங்களடங்கிய நூல்கள் பலவற்றை வெளியிடவேண்டும்; தமிழையன்றி வேறு மொழிகளை அறியாத எவரும், வேறுமொழியொன்றும் தெரியாததால் ஒரு விஷயத்தைத் தாம் அறிந்துகொள்ள முடியவில்லை என்ற மனக்குறை அடையாதவாறு, எல்லா அறிவு நூல்களும் தமிழிலேயே எழுதி வெளியிடப்படல் வேண்டும்.

இவ்வாறான மகத்தான சேவையில் தமியேனும் ஒரு சிறிதாவது பங்கு எடுத்துக்கொள்ள வேண்டுமென்ற ஒரே நோக்கத்துடன் இந்நூலை எழுதி வெளியிட்டிருக்கிறேன்.

நம் நாட்டினர் தம் வாழ்க்கையைச் சிறப்பினதாக நடத்த வேண்டுமானால், கூட்டுறவு முறைகளைக் கைக்கொள்ளவேண்டும். அக்கூட்டுறவு முறைகளை எளிய நடையில் விளங்கக் கூறுவதே இந்நூலின் நோக்கமாகும். கூட்டுறவு இயக்கம் பல நாடுகளிலும் தோன்றி வளர்ந்துள்ள முறை, கூட்டுறவின் பாகுபாடுகள், கூட்டுறவு இந்தியாவில் உண்டாகி, நடைபெறும் நிலை முதலிய விஷயங்கள் விவரமாக இந்நூலில் கூறப்பட்டுள்ளன.

இந்நூலைத் தமிழர்கள் அன்புடன் ஆதரிப்பார்களென எண்ணுகிறேன்.

தமிழன்னையின் அருமைப் புதல்வர்கட்கு ஒரு வார்த்தை கூற விரும்புகிறேன். தமிழ் நாட்டில் பல காலம் தமிழைக் காத்தும் வளர்த்தும் வந்தவை சைவ மடங்களே. அம்மடங்களுள் திருப்பனந்தாள் மடம் இன்னும் தமிழுக்குப்பேராதரவை அளித்து நிற்கின்றது. அம் மடத்துத் தலைவராய் இப்போது விளங்கும் ஸ்ரீலஸ்ரீ

காசிவாசி சுவாமிநாதத் தம்பிரான் சுவாமிகள் அநேக அரிய தமிழ் நூல்கள் வெளி வருவதற்குப் பேருதவி செய்து வருகின்றனர்.

அதைவிட அவர்கள் செய்துள்ள மற்றொரு காரியம் அநேகரைத் தமிழ் படிக்கும்படி செய்கிறது. அதையே நான் இங்கு விரிவாகவெளியிட விரும்புகிறேன். சென்னைச் சர்வகலாசாலையார் நடத்தும் வித்துவான் பரீக்ஷையில் முதல்வராகத் தேறுபவருக்கு ஆண்டுதோறும் ஆயிரம் ரூபாய் பரிசு கொடுப்பதற்கான திரண்ட நிதியொன்றை அவர்கள் ஏற்படுத்தி இருக்கிறார்கள்.

அப்பரிசின் விவரங்களை இந்நூலில் நான் வெளியிடுவதன் காரணங்கள் இரண்டு. ஒன்று, இந்நூலைக் கண்ணுறும் அனைவரும் அப்பரிசைப்பற்றித் தெரிந்துகொண்டு, அதைப் பெறுவதற்காகத் தமிழை நன்றாகப் படிக்கக் கூடும் என்பது. அதன்றி, நான் தமிழை ஓரளவாவது படித்ததற்கு அம்மடத்துத் தலைவர்களே காரணமாவார்கள். என்னுடைய விடுமுறை நாட்களில் தமிழ்ருசியை எனக்கு ஊட்டியது அம்மடமே. ஆதலால், எனக்கு ஓரளவு தமிழறிவை உண்டாக்கிய மடத்தார், அநேகர் தமிழில் பாண்டித்தியம் பெறத் தூண்டும் ஏற்பாட்டைச் செய்திருக்கின்றார்களென்றால், அந்நற்செய்தியைப் பல்லோரும் அறியச்செய்வதில் எனக்கு விசேஷ மகிழ்ச்சி உண்டாகும் அன்றோ?

இத்துடன் வெளியிடப்பட்டிருக்கும் விவரங்களைப் பார்த்து, ஒவ்வொருவரும் பரிசைப்பெற முயலுவாராக.

எவ்வகையிலாவது, தமிழர் ஒவ்வொருவரும் "தேமதுரத் தமிழோசை உலகமெலாம் பரவும் வகை செய்தல் வேண்டும்."

ஆசிரியன்.



காலஞ்சென்ற ஐந்தாம் ஜார்ஜ் மன்னர்

# ஐந்தாம் ஜார்ஜு மன்னர்

# ஞாபகார்த்தத் தமிழ்ப் பரிசு

## ரூபாய் ஆயிரம், (1,000).



நம்முடைய அன்பார்ந்த அரசரும், சக்கரவர்த்தியாருமான ஐந்தாம் ஜார்ஜு மன்னரவர்களுடைய உதார குணத்தையும், தயாள சிந்தையையும், அவர்களுக்கு இந்தியாவின்பாலிருந்த அன்பையும் கருதி அவர்களுடைய இனிய ஞாபகம் என்றும் குன்றாதிருந்து வரும்பொருட்டு இந்தப் பரிசு திருப்பனந்தாள் ஸ்ரீலஸ்ரீ காசி வாசி சாமிநாதத் தம்பிரான் ஸ்வாமிகளவர்களால் ஏற்படுத்தப் பெற்றது. இந்தப் பரிசின் நோக்கம் தமிழ் மொழிப் பயிற்சிக்கும் ஆராய்ச்சிக்கும் ஆதரவு அளிப்பதேயாகும். "ஐந்தாம் ஜார்ஜு மன்னர் ஞாபகார்த்தத் தமிழ்ப் பரிசு" என இது வழங்கப்பெறும்.

இந்தப் பரிசுக்குரிய மூல தனமாக இப்பொழுது உள்ள தொகை முப்பத்தையாயிர ரூபாய் (ரூ. 35,000). இத்தொகை நூற்றுக்கு வருஷத்துக்கு $3\frac{1}{2}$ வட்டியுள்ள, காலவரையறையில்லாத சர்க்கார் கடன் பத்திரமாக உள்ளது. இதிலிருந்து வருஷந்தோறும் கிடைக்கும் வட்டியிலிருந்து ரூபாய் ஆயிரம் (ரூ. 1,000) வருஷந்தோறும் ரொக்கப்பரிசாக அளிக்கப்பெறும். 1935-36-ஆம் வருஷத்துச் சென்னைச் சர்வகலாசாலைக் காலண்டர் தொகுதி 1, பகுதி 2ல் கண்ட 7-D விதிப்படியமைந்த

தனித் தமிழ் வித்துவான் பட்டத்துக்குரிய முடிவுப் பரீக்ஷையில் முதல் வகுப்பில் முதல்வராகத் தேர்ச்சிபெறு வோர் இப்பரிசைப் பெறும் தகுதியுடையோராவர். மூலதனத்தின் வட்டியில் இவ்வாறு செலவானது போக வருஷந்தோறும் எஞ்சுந் தொகை, மூல தனம் லக்ஷம் ரூபாய் (ரூ. 1,00,000) ஆகும் வரையில் அதனோடு சேர்க் கப்படும். அதன்பின் மூலதனத்திற்குக் கிடைக்கும் வட்டி முழுதும் வருஷந்தோறும் பரிசுத்தொகையாக உரியவ ருக்கு அளிக்கப்படும்.

பரிசளிப்பதற்குரிய விதிகளும், நிபந்தனைகளும் வரு மாறு :—

1. இப்பரிசு ஆண்பாலார் பெண்பாலாராகிய யாவ ருக்கும் ஜாதிமதவேறுபாடு கருதாமல் அளித்தற்குரியது.

2. ஓரியண்டல் பட்டப் பரீக்ஷைகளுள் தனித் தமிழ் வித்துவான் பரீக்ஷையில் தேர்ச்சி பெறுவோர்களுள் முடிவுப் பரீக்ஷையில் முதல்வகுப்பில் முதல்வராக வருப வர் முதல் முறையிலேயே தேறினவராயின் அவருக்கு இப் பரிசு அளிக்கப்பெறும்.

எந்த வருஷத்திலாயினும், இருவரேனும் இருவருக்கு மேற்பட்டவரேனும் பரிசுக்குரிய தகுதியைப் பெற்றால், பிரிலிமினரிப் பரீக்ஷையில் பெற்ற அம்சங்களையும் (**Marks**) சேர்த்துப்பார்த்து மொத்தத்தில் அதிக அம் சம் பெற்றவருக்கு இப்பரிசு அளிக்கப்படும். அவ்வாறு செய்வதிலும் சிக்கல் நேருமாயின், தேர்ச்சி பெற்றவர்க ளுடைய ஆங்கிலப் பயிற்சியையும் வயதையும் ஆராய்ந்து, அவர்களுள் அதிக ஆங்கிலப் பயிற்சியுடையவருக்கும், குறைந்த வயதுடையவருக்கும் பரிசைக் கொடுக்க ஸிண்டிகேட் சபையார் தீர்மானிப்பார்கள்.

3. ஸெனட் சபைக் கூட்டமொன்றில் இந்தப் பரிசு உரியவருக்கு வழங்கப்பெறும். எந்த வருஷத்திலேனும் பரிசுக்கு உரியவர் நேரில் வந்து பரிசைப் பெற்றுக் கொள்ள முடியாமற்போனால் ஸிண்டிகேட் சபையார் பரிசுத்தொகையை அவருக்கு அனுப்புவதற்குரிய ஏற்பாட்டைச் செய்வார்கள். பரிசு வழங்குவதற்கு முன் பரிசுக்குரியவர் இறக்கும்படி நேர்ந்தால் அத்தொகை சட்டப்படி அவருடைய வாரிசாக இருப்பவரிடம் சேர்ப்பிக்கப்படும்.

4. இப்பரிசுத்தொகை பணமாகவேனும் செக்காகவேனும் அளிக்கப்பெறும். இந்தப் பரிசுத்தொகை எந்தக் காரணத்தைக் கொண்டாவது பகுக்கவோ குறைக்கவோ படாது. எந்த ஒரு வருஷத்திலேனும் அல்லது தொடர்ந்து பல வருஷங்களிலேனும் பரிசு கொடுக்கப்படாமல் இருந்தால், அங்ஙனம் கொடுக்கப்படாமல் இருந்த பரிசுத்தொகை முழுவதும் சேர்த்து, எந்த வருஷத்தில் பரிசு வழங்கப்படுகிறதோ அவ் வருஷத்தின் பரிசுக்குரியவருக்கே அளிக்கப்பெறும். பரிசுத்தொகைக்கு மேலே கிடைக்கும் தொகைதான் மூலதனத்தோடு சேர்க்கப்படும்.

5. வருஷந்தோறும் பரிசளிப்பு விவரம், பரிசு பெறுபவரின் பெயர், விலாசம் ஆகியவற்றோடு திருப்பனந்தாள் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சாமிநாதத் தம்பிரான் ஸ்வாமிகளவர்களுக்கும், அவர்களுக்குப் பின் வரும் உரிமை உள்ளவர்களுக்கும் (**Successors in interest**) தெரிவிக்கப்படவேண்டும்.

6. பரிசு ஏற்படுத்தியவர்களுடைய நோக்கத்துக்கு வேறுபட்ட எந்தக் காரியத்துக்கும் இந்த நிதியை உப

யோகிக்கக்கூடாது. இனி எப்பொழுதேனும் சர்வகலா சாலையாரின் 7-D விதிப்படி யமைந்த தனித்தமிழ் வித்துவான் பட்டப் பரீக்ஷைக்குப் பிரதியாக ஏதேனும் ஏற்பட்டாலும், ஷெ பரீக்ஷைக்குரிய விதிகள் மாறுபட்டாலும், பரிசை ஏற்படுத்தியவர்களுடைய நோக்கமாகிய தமிழ்க் கல்வியபிவிருத்திக்கு ஏற்றதென்று கருதும் வகையில் ஸிண்டிகேட் சபையார் இந்தப் பரிசை உரியவருக்கு அளிக்க ஏற்பாடு செய்யும் உரிமையைப் பெறுவார்கள்.

7. பரிசு கொடுத்தது போக எஞ்சும் வட்டித் தொகையையும், மூல தனத்தைக் கவர்ன்மெண்டார் எப்போதேனும் திருப்பிக் கொடுக்க நேர்ந்தால் அத் தொகையையும் எந்த விதமான பத்திரங்களிலேனும், வேறு வகையிலேனும் வைத்துப் பாதுகாக்கும் உரிமை ஸிண்டிகேட் சபையாருக்கு உண்டு.

| | |
|---|---|
| காசி மடம், திருப்பனந்தாள், 30-4-39 | காசி வாசி சாமிநாதத் தம்பிரான். |



குறிப்பு :—மேலேகண்ட மூலதனம் (எண்டௌமெண்டு) சென்னை சர்வ கலாசாலையாருடைய அங்கீகாரம் பெற்று 1937-38-ஆம் வருஷத்திய யுனிவர்சிட்டி காலண்டர் பகுதியில் 129, 130 ஆம் பக்கங்களில் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது.

# பொருளடக்கம்

## கூட்டுறவுப் பாங்குகள்

## விவசாயச் சங்கங்கள்

## தொழிலாளர் கூட்டுறவுச் சங்கங்கள்



## பல திறப்பட்ட சங்கங்கள்





# கூட்டுறவு இயக்கம்

## 1. கூட்டுறவின் தன்மையும் பாகுபாடும்

'கூட்டுறவு' என்னும் சொல் சாதாரணமாகப் பலர் ஒன்று சேர்ந்திருத்தல் அல்லது பலரின் சம்பந்தம் என்னும் பொருளில் உபயோகிக்கப்படுகிறது. சில ஆண்டுகளாகப் பொருளாதாரத் துறையில் அது ஒரு குறித்தபொருளில் வழங்கப்படுகிறது. கூட்டுறவு என்பது இவ்வாறு குழூஉக்குறியாக வழங்கும்போது பலர் ஒரு குறித்த பயன் கருதி ஒன்று சேர்ந்து பொருள் முயற்சியில் ஈடுபடுதல் என்ற அர்த்தத்தைக்கொண்டு நிற்கின்றது.

நமது தமிழ் நாட்டிலே பற்பல இடங்களில் கூட்டுறவுப் பண்டசாலைகளையும், கூட்டுறவு நிதி நிலையங்களையும், கூட்டுறவு விற்பனைச் சங்கங்களையும் இன்னும் பல வகையான கூட்டுறவு ஸ்தாபனங்களையும் காண்கின்றோம். இவையெல்லாம் ஒரே அடிப்படையான தத்துவங்களைக் கொண்டவை. வாழ்க்கை நலத்திற்குச் சாதனமாகக்கொண்ட ஒரு பொருளாதாரத் திட்டத்தின் பல வேறு அமிசங்களே அப்பல் வகைக் கூட்டுறவு ஸ்தாபனங்களும் ஆகும்.

இப்போதுள்ள பொருளாதார அமைப்பில், சமூகத்தைப் பொறுத்த வரையில் அநேக குறைபாடுகள் காணப்படுகின்றன. முதலாளித்துவம் தலையெடுத்த கால முதல், ஒரு சிலர் எல்லாச் சுகங்களையும் அநுபவித்திருக்க, அநேகர் வயிற்றை நிரப்பிக்கொள்வதற்காகவே அல்லும் பகலும் உழைக்க வேண்டி இருக்கிறது. சமூகத்திலே ஒரு சிலர் ஓர் உழைப்பும் இன்றி ஏராளமான இலாபத்தைப் பெறுகின்றனர். பண ஆதிக்கம் ஓங்க ஓங்கப் பல்லாயிர மக்கள் சிறகிழந்த பறவைகளைப்போலச் சக்தியை இழந்து சமூகத்திலே வாடி நிற்கின்றார்கள்.

இக்குறைபாடுகளையெல்லாம் நீக்கி, மக்கள் சிறந்த வாழ்வை எய்துவதற்கு உற்ற துணையாக இருப்பது இக்கூட்டுறவு இயக்கமாகும். கூட்டுறவு இயக்கத்தின் அடிப்படையான தத்துவம், 'ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு,' என்பதாம். கூட்டுறவு இயக்கத்தின் நோக்கப்படி ஒவ்வொருவரும் பலருக்கும் பயன்பட வேண்டும்; பலரும் ஒவ்வொருவருக்கும் உதவியாக இருக்க வேண்டும். 'பல செத்தை சேர்ந்தால் ஒரு கத்தை,' என்று கூறுவதேபோல, பலர் ஒன்று கூடினால், அசாத்தியமான பல காரியங்களைக்கூடச் செய்து முடித்துவிடலாம் என்பதை இக்கூட்டுறவு ஸ்தாபனங்கள் வெள்ளிடை மலை போலக் காட்டுகின்றன.

சமூகத்தின் பொருளாதார வாழ்வில் பல மாறுதல்களை உண்டாக்கி, சமூகத்தையே திருத்தி

அமைக்கக்கூடிய சக்தி வாய்ந்தது இக்கூட்டுறவு இயக்கமாகும். சமூகத்தின் ஒவ்வொரு துறையிலும் முதலாளித்தனமே முன் நிற்கிறது. அதை மாற்றிக் கூட்டுறவு முறையில் சமூகத்தின் எல்லாக் காரியங்களையும் நடத்தினல் சமூகத்தின் நிலைமையே முற்றிலும் மாறிவிடும்; சமூகத்தில் இப்போதுள்ள பசி, பிணி, மிடி முதலியவை நீங்கிவிடும்; சமூகம் சிறப்புடையதாகும்; மக்கள் தன்னுணர்ச்சி பெறுவார்கள்; தன் மதிப்பை அறிவார்கள்; சுகமான வாழ்க்கையை நடத்துவார்கள்.

பொருளாதார உலகில் ஒவ்வொரு முறையிலும் கூட்டுறவுக் கொள்கைகளைப் புகுத்தலாம்.

முதலாவதாகப் பொருள் உற்பத்தியை எடுத்துக்கொள்ளுவோம்: பணமுள்ள ஒரு சிலர் தொழிற்சாலையை ஏற்படுத்தி, பொருள்களை உற்பத்தி செய்கிருர்கள். பொருள் செய்வோரான தொழிலாளிகட்கு ஒரு சிறு ஊதியமே கூலியாகக் கிடைக்கிறது. பொருள்களை விற்று வரும் திரண்ட இலாபங்கள், முதலாளிகளான ஒரு சிலருக்கே போய்ச் சேருகின்றன. உழைப்பாளிகட்கு ஒரு சிறிதும் முதலாளிகட்கு முழுவதும் போய்ச் சேரும் இம்முறையைவிட, உழைப்பாளிகளான தொழிலாளிகட்கே முழு இலாபமும் போய்ச் சேரக்கூடிய ஓர் அமைப்பு உண்டானல், அதனல் பல்லாயிரக்கணக்கான மக்கள் சுகம் அடைவார்கள் அல்லவா? அப்படிப்பட்ட ஸ்தாபனத்தை ஏற்படுத்த உதவியாயிருப்பதே கூட்டுறவு இயக்கமாகும். தொழிலாளர்

களே தொழிற்சாலை ஒன்றனை ஏற்படுத்தி, பண்டங்களைச் செய்து, விற்று, வரும் இலாபத்தைத் தங்களிடையே பகிர்ந்துகொள்வார்களானால், அது எவ்வளவு நன்றாய் இருக்கும்! அந்த முறையைக் கற்பிப்பதே கூட்டுறவு இயக்கமாகும்.

அடுத்தபடியாக வியாபாரத்தை எடுத்துக் கொள்ளுவோம்: பணம்போட்டு, சிரமப்பட்டுப் பண்டங்களை உற்பத்தி செய்பவர் ஒரு சாரார். அவைகளைப் பணம் கொடுத்து வாங்கி உபயோகிப்பவர் மற்றொரு சாரார். இவர்கள் இருவருக்கும் இடையே வியாபாரிகள்—மொத்த வியாபாரிகள், சில்லறை வியாபாரிகள்—இருக்கின்றார்கள். அவர்கள் ஒரு சிரமமுமின்றி, இந்தப் பக்கம் வாங்கி அந்தப் பக்கம் விற்று, விசேஷ இலாபத்தை அடைகிறார்கள். பண்டங்களை வாங்கி உபயோகிப்பவர்கள், தாங்கள் நேராகவே பண்ட உற்பத்தி செய்வோரிடம் வாங்காமல் வியாபாரிகள் மூலம் வாங்குவதால் பண்டங்கட்கு அதிக விலை கொடுக்க வேண்டி இருக்கிறது. அதை விட்டுப் பண்டங்களை வாங்க விரும்புபவர்கள் நேரேயே, பண்ட உற்பத்தியாளர்களிடமிருந்து வாங்கினால் இலாபம் கிடைக்குமல்லவா? அந்த ஏற்பாட்டை அடிப்படையாகக் கொண்டவைகளே கூட்டுறவுப் பண்ட சாலைகளாகும்.

உலகத்திலே பல பாகங்களிலும் தனிப்பட்டவர்களிடம் கடன் வாங்கினால் கடு வட்டியே கொடுக்க வேண்டி நேரிடுகிறது. கடு வட்டிக்குக் கடன் வாங்குவதால் பல வகைத் தொல்லைகளும்

உண்டாகின்றன. பெரும்பாலும் தனிப்பட்ட லேவாதேவிக்காரரிடம் ஒரு முறை கடன் வாங்குவோர் பின் கடனிலிருந்து மீளுவது துர்லபம். இப்போதைய சமூக அமைப்பின் நிலைமையைக் கவனிக்கும்போது, ஓரளவு கடன் வாங்காது, பல இலாபகரமான காரியங்களைச் செய்ய முடியாது என்பது புலனாகும். பயனுள்ள காரியங்கட்குச் செலவிடுவதற்குப் பணம் வேண்டுமானால், ஒவ்வொருவரும் தத்தம் சொந்தப் பொறுப்பில் கடன் வாங்குவதைவிடப் பலர் ஒன்று சேர்ந்து வாங்கிக் கொடுத்து வந்தால், சொற்ப வட்டிக்குப் பணம் கிடைக்கும். அந்தக் கொள்கையைக் கொண்டதே கூட்டுறவு பாங்குகளாகும். அவை குறைந்த வட்டிக்குப் பணம் வாங்க உதவுவதேயன்றி, அப்பாங்குகளின் அங்கத்தினர்களிடையே சிக்கனத்தை உண்டாக்கிப் பணம் சேர்க்கும் பழக்கத்தையும் உண்டாக்குகின்றன.

விவசாயிகட்கும் இக்கூட்டுறவு ஸ்தாபனங்கள் மிகவும் பயன் தருகின்றன. விவசாயத் தொழிலைச் செவ்வனே நடத்துவதற்கு அநுகூலமாகப் பல வகைப்பட்ட கூட்டுறவு நிலையங்கள் பல நாடுகளிலும் தோன்றி வளர்ந்தோங்கி இருக்கின்றன. மேலும், விவசாய சம்பந்தமான பாற்பண்ணை நடத்தல் முதலிய காரியங்கட்கும் கூட்டுறவு முறைகள் மிகவும் உபகாரமாய் இருக்கின்றன.

மேலும், வாழ்க்கையின் பல்வேறு துறைகளிலும் இக்கூட்டுறவு முறைகளைக் கையாண்டால்,

வாழ்க்கை எவ்வளவோ பயன் உள்ளதாகவும், இரம்மியமானதாகவும் இருக்கும்.

கூட்டுறவு இயக்கம் ஒரு சமூகத்திலோ அல்லது ஒரு நாட்டிலோ நன்ருக நடக்கிறதா இல்லையா என்பது அந்த அந்த மக்களின் தன்மையின்படி இருக்கும். உண்மையானவர்களும் தன்னலமற்றவர்களும் இவ்வியக்கத்தில் பங்கெடுத்துக்கொண்டால், இயக்கம் பயனுள்ளதாய்ப் பரிணமிக்கும்; இல்லையேல், வறியதாகவே காணப்படும்.

கூட்டுறவு இயக்கம் ஜாதி, மதம் முதலிய குறுகிய கட்டுப்பாடுகளுடன் தோன்றி வளருவதன்று. இவ்வியக்கம் ஜாதி, மதம் முதலிய தடைகளைக் கடந்து, சமூகம் முழுதும், ஏன்—உலக முழுதும்—பரவிப் பயன் தந்து நிற்பது. பல ஜாதி, பல சமயங்களைச் சேர்ந்தவர் இக்கூட்டுறவு ஸ்தாபனங்களில் ஒன்று கூடிக் கலந்து மகிழ்ச்சி அடைகின்றனர். ஒரு குறித்த காரியத்துக்காக எல்லோரும் பாடு படுகின்றனர். அதனுல் ஐக்கிய பாவம் வளருகின்றது. பல வகைப் பயனில்லாத தளைகள் நீங்குகின்றன.

கூட்டுறவு இயக்கத்தைச் சேர்ந்தவர்களின் பரோபகார சிந்தனை நாளடைவில் வளர்ந்து கொண்டே வருகிறது. தனக்கென வாழாது பிறர்க்கென வாழும் உயரிய வாழ்க்கை இலட்சியம் அவர்கள் மனத்தில் அழுத்தமாகப் பதிகிறது. அதனுல் அவர்கள் வாழ்க்கை புனிதமாகிறது.

கூட்டுறவு ஸ்தாபனங்களிலே ஒவ்வோர் உறுப்பினருக்கும் ஒரே ஓட்டுதான் (Vote) உண்டு.

ஆதலால், சுயநலக்காரரான சிலர், அந்த ஸ்தாபனங்களில் ஆதிக்கம் பெற முடியாது. ஒவ்வோர் உறுப்பினரும் அந்த ஸ்தாபனங்களின் நிருவாகத்தில் பங்கெடுக்கக்கூடிய சந்தர்ப்பம் உண்டாகிறது. அந்த ஸ்தாபனங்களின் ஆட்சியில் அநுபவம் பெற்றுத் தேறும் உறுப்பினர் பின் எவ்விதமான ஆட்சித் துறையிலும் தலை சிறந்து நிற்கும் சக்தியை அடைகின்றனர்.

கூட்டுறவு இயக்கமானது முதலில் மனிதனது துக்கத்திலும், ஏழ்மையிலும் உண்டானதாகும். கஷ்டத்தில் உழன்று வறுமையால் வாடியவர்கள் தாம் இவ்வியக்கத்திற்கு உயிர் நாடியாக நின்றவர்கள்; நிற்பவர்கள். சமூகத்திலுள்ள பொருளாதார அசௌகரியங்களே கூட்டுறவு ஸ்தாபனங்களை நிலை நாட்ட, ஊக்கத்தை அளிக்கின்றன. ஒவ்வொரு நாட்டிலும் கூட்டுறவு இயக்கம் தோன்றிய காலத்தையும், அதன் வளர்ச்சியையும் கவனித்துப் பார்த்தால், இவ்வுண்மை நன்கு விளங்கும்.

கூட்டுறவு இயக்கம் நன்றாக வலுவடைய வேண்டுமானால், சீக்கிரம் பரவ வேண்டுமானால், அதில் சம்பந்தப்பட்டவர்கள் அனைவரும் சுயநலம் அற்றவர்களாக இருக்க வேண்டும். அவர்கள் பிறருடைய நலத்தையும் தங்கள் நலமெனக் கருத வேண்டும். பரோபகார சிந்தை அவர்களுக்கு அமைய வேண்டும். அப்படிப்பட்ட நற்குணசாலிகளிடையேதான் கூட்டுறவு இயக்கம் மிகுந்த பலன் தருவதாகும்.

கூட்டுறவுக் கருத்துகளை ஒவ்வொரு தேசமும் அந்த அந்தத் தேச நிலைக்கேற்ப, ஒவ்வொரு துறையில் உபயோகித்து வந்துள்ளது. ஒவ்வொரு தேசத்தின் கூட்டுறவு 'இயக்கச் சரிதையையும் கவனித்தால், இவ்வுண்மை நன்கு புலப்படும்.

இங்கிலாந்திலே கூட்டுறவுப் பண்ட சாலைகளே மிகவும் பரவியுள்ளன. அயர்லந்து, டென்மார்க்கு, ஹாலந்து, சுவிட்ஜர்லந்து முதலிய நாடுகளிலே கூட்டுறவு முறைகள் விவசாயத் துறையில் கையாளப் பட்டு வருகின்றன. திருந்திய முறையில் விவசாயம் செய்தல், விவசாயப் பொருள்களை விற்றல், ஆடுமாடுகளை நன்றாக வளர்த்தல், பாற்பண்ணைகளை ஏற்படுத்தல் முதலிய காரியங்கள் அந்நாடுகளில் மிகவும் விசேஷமாகக் காணப்படுகின்றன. ஜெர்மனித் தேசத்திலோ, கூட்டுறவு முறையானது பாங்குகளின் அமைப்பில் காணப்பட்டது. பிறகு ஜெர்மானியர் கூட்டுறவுக்கொள்கைகளைத் தமது வாழ்வில் பல காரியங்கட்கும் பயன்படுத்திக்கொண்டுள்ளனர். இட்டாலித் தேசத்திலே தொழிலாளிகள் தங்கள் வேலையைச் செய்யக் கூட்டுறவு முறைகளைக் கைக்கொண்டார்கள். நாளடைவில் அந்நாட்டிலே கூட்டுறவுப் பாங்குகளும் ஏற்படுத்தப்பட்டன. பிரான்சு தேசத்திலோ, தொழிலாளிகள் பொருளுற்பத்தி செய்வதற்காகக் கூட்டுறவுச் சங்கங்களை உண்டாக்கினார்கள். இந்தியாவிலோ, கூட்டுறவுப் பாங்குகளே விசேஷமாக முதலில் உண்டாகி வளர்ந்து வருகின்றன.

கூட்டுறவு என்பது, பலர் தமது விருப்பப்படி ஒன்று சேர்ந்து, தம்முடைய பொருளாதார நிலையை விருத்தி செய்துகொள்ளும் ஒரு ஸ்தாபன மாகும். அந்த ஸ்தாபனத்தில் எல்லோரும் சமமான வர். எல்லோரும் உயரிய குணம் உடையவர்.

கூட்டுறவின் இலக்கணத்தைக் கூறப் புகுந்த பல ஆசிரியர்கள் பல வகையாகக் கூறியுள்ளார்கள். அவைகளிற் சிலவற்றைக் காட்டுதும் :

இந்தியாவில் கூட்டுறவைப் பரிசீலனை செய்த **மேக்லகன் கமிட்டியார்**, "கூட்டுறவு என்பது தனிப் பட்ட சக்தியற்ற பலர் ஒன்று சேர்ந்து, தாம் ஒன்று சேர்ந்ததாலேற்பட்ட பலத்தினால் பரஸ்பர உதவி செய்துகொண்டு, பணக்காரரும் பலசாலி களும் அடையக்கூடிய பொருள்நலங்களைப் பெறுவ தல்லாமல், குணங்களையும் தம்முடைய சக்திகளை யும் அதிகப்படுத்திக்கொள்வதற்கு அநுகூலமான ஸ்தாபனமாகும். சக்தியின் சேர்க்கையால், பொரு ளுலகில் நன்மை கிடைக்கிறது. பலர் ஒன்று சேர்தலால் தன்னம்பிக்கை வலுப்படுகின்றது. பலரின் கூட்டுறவால் ஒவ்வொருவருடைய குண நலங்களும் மேன்மைப்பட்டு எல்லோரும் வாழ்க்கை நலத்தை அடையச் சாதனம் ஒன்று கிடைக்கிறது. அதனால் சிறந்த தொழில், சிறந்த விவசாயம், சிறந்த வாழ்க்கை இவைகளை நடத்த முடிகிறது," என்று கூட்டுறவின் தன்மையை எடுத்துக்காட்டி இருக் கின்றனர்.

**கார்டன், ஓப்ரயின் (Gordon and O'brien)** என்னும் ஆசிரியர்கள், "கூட்டுறவு என்பது, பலர் ஒன்று கூடி, குறித்த சட்ட திட்டங்களுக்குள், ஒரு குறித்த காரிய சித்திக்காக, வேலை செய்வதற்காக ஏற்படும் பொருளாதார ஸ்தாபனமாகும். கூட்டுறவானது உலகியற்றொழிலையும், உயரிய நீதிக் கருத்துகளையும் ஒன்று சேர்த்துப் பொருளுலகில் வாழ்க்கை முறையை அமைப்பதாகும்," என்று விளக்கி இருக்கின்றனர்.

**சர் ஹோரேஸ் பிளன்கெட் (Sir Horace Plenkett)** என்பவர், "கூட்டுறவு என்பது ஒரு ஸ்தாபனத்தால் வன்மையானதாக்கப்பட்ட தன் உதவி," என்று கூறி இருக்கிறார்.

இந்திய கூட்டுறவுச் சட்டத்தில் கூட்டுறவுச் சங்கமென்பது கூட்டுறவு முறைப்படி உறுப்பினரின் பொருள் நிலையை மேம்படுத்துவதற்காக ஏற்படுத்தப்படுவது என்றுதான் குறிப்பிடப்பட்டிருக்கிறது. எவ்வெம்முறைகள் கூட்டுறவு முறைகள் என்பதை ரெஜிஸ்தரார்தான் நிர்ணயிக்க வேண்டும்.

பம்பாய்ச் சட்டத்தில் கூட்டுறவு ஸ்தாபனங்கள் ஐந்து வகையாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன:

(1) 'பலந்தரும் சங்கம்' (Resource society): இவ்வகைச் சங்கம் உறுப்பினருக்குப் பண வசதியோ, சாமான்களோ, பிறருதவியோ கிடைக்கும்படி செய்வதற்காக ஏற்படுத்தப்படுவது,

(2) 'பொருள் செய்வோர் சங்கம்' (Producers Society): இச்சங்கம் எல்லா உறுப்பினருக்கும்

பொதுவாக இருக்கும்படி பொருள்களை உற்பத்தி செய்யவும், அவைகளை விற்பனை செய்யவும் அல்லது உறுப்பினர் தம்முடைய வேலையை அல்லது வேலை செய்யும் திறனை ஒன்று சேர்ந்து பயன் படுத்திக்கொள்ளவும் ஏற்படுத்தப்படுவதாகும்.

(3) 'பொருள் நுகர்வோரின் சங்கம்' (Consumers Society): இது உறுப்பினர்கள் பொதுவாக எல்லாச் சாமான்களையும் வாங்குவதற்கும், வேலை அல்லது சேவையை ஒன்றாகப் பெறுவதற்கும் ஏற் படுத்தப்படுவது. எல்லா உறுப்பினருக்கும் பொது வாக வேண்டிய காரியங்களைச் செய்துகொள்வதற் கும் இவ்வகைச் சங்கம் பயன்படுகிறது.

(4) 'வீட்டுச் சங்கம்' (Housing society): இது உறுப்பினருக்கு வசிப்பதற்கான வீட்டுச் சௌகரி யம் செய்து கொடுப்பதாகும்.

(5) 'பொதுவகைச் சங்கம்' (General society): இது மேலே கூறப்பட்ட நான்கு வகைச் சங்கங் களுள் எதிலும் அடங்காததொன்றாகும்.

புரபசர் சி. ஆர் பே (Prof. C. R. Fay) என்பவர் கூட்டுறவுச் சங்கங்களை நான்கு வகையாகப் பிரித் திருக்கிறார். அவை வருமாறு:

(1) கூட்டுறவுப் பாங்குகள்

(2) கூட்டுறவு விவசாயச் சங்கங்கள்

(3) கூட்டுறவுத் தொழிலாளிகளின் சங்கங் கள்

(4) கூட்டுறவுப் பண்ட சாலைகள்

இவைகளில் முதல் மூவகைச் சங்கங்கள், பொருள் உற்பத்தி செய்வோரின் சங்கங்கள். கடைசியில் உள்ளது, பொருள் துய்ப்போரின் சங்கம்.

ஸ்மித் கார்டன் (Smith Gordon), ஓப்ரயின் (O' brien) என்னும் இருவரும் சேர்ந்து எழுதிய நூலில், மேலே காட்டியபடி ஆசிரியர் பே (Fay) செய்த பாகுபாடு அத்துணைப் பொருத்தமானதன்று என்று கூறி, கீழ்க்காணும் வகையாகப் பாகுபடுத்தி இருக்கின்றனர். அது வருமாறு:

(1) கடன் பெறல் (Credit)

(2) பொருள் செய்தல் (உற்பத்தி செய்தல்) (Production)

(3) பொருள் கொள்ளல் (Purchase)

(4) பொருள் விற்றல் (Sale)

(5) பொருள் செய்தலும் விற்றலும் (Production and sale)

ரோம் நகரிலேயுள்ள அகில உலக விவசாய சங்கம் (International Institute of Agriculture at Rome) கூறியுள்ளபடி நமது தேசத்தில் அநேக மாகாணங்களில் கீழ்க்காணும் வகையில் கூட்டுறவு ஸ்தாபனங்கள் பாகுபடுத்தப்பட்டுள்ளன:

(1) கடன் கோடல் (Credit)

(2) வாங்கல், அல்லது வாங்கலும் விற்றலும் (Purchase or purchase and sale)

(3) பொருள் உற்பத்தி (Production)

(4) பொருள் செய்தலும் விற்றலும் (Production and sale)

(5) இன்ஷியூரன்ஸ்

(6) ஏனையவை

எனவே, கூட்டுறவு ஸ்தாபனங்களைப் பல வகையாகப் பாகுபடுத்தலாம். இந்நூலிலே அவை ஐந்து வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளன. கூட்டுறவுப் பண்டசாலைகளின் வரலாற்றையும், அமைப்பையும் எவரும் எளிதில் அறிந்துகொள்ள முடியுமாதலால், அவைகளைப்பற்றி முதலில் கூறப்பட்டிருக்கிறது. இரண்டாவதாக, நம் நாட்டிலே அதிகமாகக் காணப்படும் கூட்டுறவுப் பாங்குகளைப்பற்றிய முழு விவரங்களும் கூறப்பட்டிருக்கின்றன. மூன்றாவதாக, நம் நாட்டிற்குப் பெரிதும் பயன் தரக்கூடியவையான விவசாயிகளின் சங்கங்கள் கூறப்பட்டிருக்கின்றன. நான்காவதாக, தொழிலாளர்களின் சங்கங்களான பொருள் உற்பத்திச் சங்கங்களைப்பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது. அவை எந்நாட்டிலும் அதிகமாகக் காணப்படாமையால், அவை இறுதியில் கூறப்பட்டிருக்கின்றன. இந்நால்வகைப் பகுதிக்குள்ளும் அடங்காத பல வகைப்பட்ட சங்கங்களைப்பற்றிய விவரங்கள் இறுதியில் தரப்பட்டிருக்கின்றன.



## 2. கூட்டுறவு ஸ்தாபனங்கட்கும் கம்பெனிகளுக்கும் உள்ள மாறுபாடுகள்

கூட்டுப் பங்குக் கம்பெனிகளில் (Joint stock Companies) பணம் முக்கியமாகக் கருதப்படுகிறது. அதிக பணம் போடுபவர்கட்கு அதிக செல்வாக்கும் கௌரவமும் உண்டு. பணக்காரர், பணமில்லாதார் என்ற தாரதம்மியம் இருப்பதற்கு அதில் இடமிருக்கிறது.

கூட்டுறவு ஸ்தாபனங்களிலோ, அப்படி இல்லை. பணம் இவைகளில் பிரதானமாகக் கருதப்படுவதில்லை. மனிதர்களும் அவர்களின் நன்னடத்தையும் நாணயப் பொறுப்புமே முக்கியமானவை. ஏழை பணக்காரர் என்ற மாறுபாடு சிறிதும் இல்லை.

கம்பெனிகளின் முக்கிய நோக்கம் இலாபம் சம்பாதித்தலே. இலாபத்தைத் தவிர வேறெதையும் அவை கவனிப்பதில்லை.

கூட்டுறவு ஸ்தாபனங்களுக்கு இலாபம் பெரிதன்று. இலாபத்தைச் சம்பாதிக்க வேண்டுமென்பது அவைகளின் நோக்கமன்று. மக்களின் வாழ்க்கை முறைகளையும், மக்களின் பொருள் நிலையையும் மாற்றி, மக்கள் சுகமாக வாழ்வதற்காகப் பொருளாதார முறைகளையும், வாழ்க்கை விதிகளையும் அமைக்க வேண்டுமென்பதுதான் அந்த ஸ்தாபனங்களின் நோக்கம்.

கம்பெனிகளின் நிர்வாகம் அநேகமாகப் பணக்காரரிடமே இருக்கிறது. கம்பெனியில் பெரு முதல்

போட்டவர்கட்கு அதிகாரமும் அதிகம் கிடைக்கிறது.

கூட்டுறவு ஸ்தாபனங்களிலே ஏழை பணக்காரர் எல்லாரும் ஒரே நிலையில் இருப்பவர்களாகக் கருதப்படுகின்றனர். கூட்டுறவு ஸ்தாபனங்களின் நிர்வாகத்தில் எல்லாருக்கும் ஒரே அளவு அதிகாரந்தான் உண்டு. நிர்வாகப் பதவிகளை எவரும் வகிக்கக்கூடும்.

கம்பெனிகளிலே ஒருவருக்கு எத்தனை பங்குகள் இருக்கின்றனவோ, அத்தனை ஓட்டு (வாக்கு) உண்டு. கம்பெனியின் பங்காளர்களின் கூட்டத்திற்கு ஒருவர் போக முடியாவிட்டால், தமக்குப் பதிலாக ஓட்டுப் போடும்படி வேறொருவருக்கு அதிகாரம் அளிக்கலாம். இந்த முறைகள் இருப்பதால், பெருமுதல் போட்ட சிலர், அல்லது பெருத்த செல்வாக்குள்ள சிலர், கம்பெனியின் நிர்வாகத்தையெல்லாம் தம் கைக்குள் வைத்துக் கொண்டு, கம்பெனியைத் தமது இஷ்டப்படி நடத்தலாம்.

கூட்டுறவு ஸ்தாபனங்களிலோ, அப்படி இல்லை. ஒவ்வோர் அங்கத்தினருக்கும் ஒரே ஓட்டுதான் உண்டு. ஒரு பங்கு வாங்கிய அங்கத்தினராலும் சரி; பல பங்குகளை வாங்கியவராலும் சரி; ஒரே ஓட்டுதான் உண்டு. கூட்டத்துக்குத் தாமே போய் ஓட்டுப் போட முடியாவிட்டால், ஓட்டு வேறு விதமாகப் போட முடியாது; வேறு ஆசாமியைக் கொண்டும் போட முடியாது.

கம்பெனியின் பங்குத் தொகைகள் பெருந் தொகையாய் இருக்கும். ஆதலால், அப்பங்குகளை எல்லோரும் வாங்க முடியாது.

கூட்டுறவு ஸ்தாபனப் பங்குத் தொகையோ, மிகவும் ஏழைகள்கூடச் சேருவதற்கு அநுகூலமாகும்படி மிகக் குறைவாக வைக்கப்பட்டிருக்கிறது. சில ஸ்தாபனங்களில் கொஞ்சம் கொஞ்சமாக நாளடைவில் கொடுத்துச் சேரும்படியான வசதியும் செய்யப்பட்டிருக்கிறது. ஆகையால், எவரும் இந்த ஸ்தாபனங்களில் சேரக்கூடும்.

கம்பெனிகளில் இலாபப் பங்கானது ஒவ்வொருவரும் போட்டுள்ள முதல் தொகைக்கேற்ப, பிரித்துக் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆகையால், பெருந் தொகை போட்டோர் பெரிய இலாபத்தையும் சிறு தொகை போட்டோர் சிறிய இலாபத்தையும் பெறுகின்றனர்.

கூட்டுறவு ஸ்தாபனங்களில் உறுப்பினர் போட்டிருக்கும் முதல் தொகைக்கு ஒரு குறித்த அளவுள்ள வட்டி கொடுக்கப்படுகிறது. இலாபத்தில் பங்கோ, ஒவ்வோர் அங்கத்தினரும் அந்தக் கூட்டுறவு ஸ்தாபனத்தில் காரியத்தில் எவ்வளவு பங்கு எடுத்துக்கொள்கிறார்களோ அவ்வளவாகக் கொடுக்கப்படுகிறது.

கம்பெனி முதலியவைகளில் ஒவ்வொன்றும் மற்ற ஸ்தாபனங்களோடு போட்டி போட்டு வேலை செய்வதாலேதான் இலாபம் கிடைக்கிறது. தன்னையொத்த மற்ற ஸ்தாபனங்களுடன் போட்டி

போடாத முறையில் அவை இலாபம் பெறுவது அரிதாக இருக்கிறது.

கூட்டுறவு ஸ்தாபனங்கட்கோ, போட்டி போடும் உத்தேசமே இல்லை. அவைகளின் அமைப்புகளும் போட்டி போடுவதற்கானவைகளல்ல.

---

## 3. கூட்டுறவு ஸ்தாபனங்களின் சில தனிப்பட்ட தன்மைகள்

இந்த ஸ்தாபனங்களில் எவர் வேண்டுமானாலும் அங்கத்தினராகச் சேரக்கூடும். அநேகமாக எவரையும் உறுப்பினராக்க எவரும் ஆக்ஷேபிப்பதில்லை. ஆனாலும், நிர்வாகக் கமிட்டியார் ஒரு குறித்த ஆசாமியைச் சேர்த்துக்கொள்ள மறுக்கலாம். ஒரு கூட்டுறவு ஸ்தாபனத்தில் இத்தனை அங்கத்தினர்கள்தாம் இருக்கலாம் என்னும் வரையறை இல்லை. உறுப்பினர் எப்போது வேண்டுமானாலும் சேரலாம்; எப்போது வேண்டுமானாலும் நீங்கலாம். உறுப்பினர்கள் நீங்கும்போது இன்னின்ன நிபந்தனைக்குட்பட வேண்டுமெனச் சில ஸ்தாபனங்களில் குறிக்கப்பட்டிருக்கின்றன.

இவைகளின் பங்குத் தொகை மிகக் குறைவான தொகையே. ஏனெனில், எவரும் சுலபத்தில் சேருவதற்குப் பங்குத் தொகையும் மிகக் குறைவாக இருத்தல் வேண்டும். சில சங்கங்களில் பங்குத் தொகையை ஒரே தடவையில் கொடுக்க முடியாத

வர் கொஞ்சங் கொஞ்மாகக் கொடுத்துச் சேருவதற் கான ஏற்பாடும் செய்யப்பட்டிருக்கிறது.

இந்த ஸ்தாபனங்கள் இவ்வளவு தொகையளவு தான் பங்குகளை விற்கலாம் என்று அளவிடப்பட வில்லை. ஆதலால், ஒவ்வொரு ஸ்தாபனமும் எத் தனை பங்குகளை வேண்டுமானாலும் விற்கலாம். இந்த விஷயத்தில் கூட்டுறவு ஸ்தாபனங்கள் கம்பெனி களினின்றும் மாறுபட்டு நிற்கின்றன. ஒரு கம் பெனி ஆரம்பகாலத்தில் ஒரு முறை பங்குகளை விற் றுவிட்டால், பிறகு அக்கம்பெனியிடமிருந்து பங்கை வாங்க முடியாது. பிறகு பங்கு வேண்டுவோர், அதற்கு முன் வாங்கியவர்களிடமிருந்துதான் வாங் கிக்கொள்ளலாம். அப்படி வாங்கும்போது சில சமயம் பங்கின் விலை ஏறிப்போய்விடலாம்; சில சமயம் இறங்கி இருக்கலாம்.

கூட்டுறவு ஸ்தாபனங்களின் பங்குத் தொகை களோ அப்படி அல்ல. இவைகளின் விலை எப் போதும் ஒன்றே. ஏனெனில், கூட்டுறவு ஸ்தாப னங்கள் எப்போது வேண்டுமானாலும் பங்கை விற் கலாம்; எவ்வளவு தொகை வரையில் வேண்டுமானா லும் விற்கலாம்.

மற்ற ஸ்தாபனங்களில் பங்குத் தொகையின் அளவைப் பொறுத்தே இலாபப் பங்கும் தரப்படு கிறது. ஒரு கம்பெனியில் இலாபம் அதிகமாகக் கிடைத்தால், அக்கம்பெனியின் பங்கின் விலையும் அதிகமாய் இருக்கும். கம்பெனிக்கு இலாபம் சரியா கக் கிடைக்காவிட்டால், பங்கின் விலையும் குறையும்.

எனவே, அந்த ஸ்தாபனங்களின் பங்குகளின் விலை கூடிக் குறைந்துகொண்டு வரும். கூட்டுறவு ஸ்தாபனங்களின் பங்கு அப்படிப்பட்டவை அல்ல. அவைகளின் விலை எப்போதும் ஒன்றே. ஏனெனில், கூட்டுறவு ஸ்தாபனங்கள் பங்குத் தொகைகட்கு ஓரளவு வட்டியே கொடுக்கின்றன. ஒவ்வொருவரும் எத்தனை பங்கு வைத்திருக்கின்றனரோ, அதற்கேற்ப இலாபப் பங்கு கொடுப்பதில்லை.

ஒவ்வோர் உறுப்பினருக்கும் ஒரே ஓட்டுதான் உண்டு.

இந்த ஸ்தாபனங்கள் கணக்கு வழக்குகளை மிகவும் விவரமாக வெளியிடுகின்றன. இவை வெளியிடும் கணக்கின் விவரங்களைக் கொண்டு அந்த ஸ்தாபனங்களுடைய நிலைமை முழுவதையும் சுலபமாக அறிந்துகொள்ள முடியும்.



# கூட்டுறவுப் பண்டசாலைகள்

## பொருள் நுகர்வோரின் கூட்டுறவு இயக்கம்
## (Consumers' co-operative movement)

### 1. தோற்றமும் வளர்ச்சியும்

#### (க) இங்கிலாந்து

இங்கிலாந்து தேசத்திலே கூட்டுறவு இயக்கத்திற்கு வழி காட்டியாகவும், ஞானாசிரியராகவும் இருந்தவர் ராபர்ட்டு ஓவன் (Robert Owen) என்பவர். கூட்டுறவுத் தத்துவத்தைப் பெரிதும் போதித்தவர் அவரே. கூட்டுறவு இயக்கம் எப்படி எல்லாம் இருக்க வேண்டும் என அவர் எண்ணமிட்டிருந்ததற்கும், அது இப்போது வளர்ந்து வந்திருக்கும் நிலைக்கும் மாறுபாடுகள் உண்டு. ஆனால், அடிப்படைக் கொள்கைகளின் அன்னை அவர்தாம்.

ராபர்ட்டு ஓவன் இங்கிலாந்தில் மாண்ட்காமரிஷயரில் பிறந்து, ஒரு கடையில் உதவி ஆளாய்த் தம் வாழ்க்கையைத் தொடங்கி, நாளடைவில் தம் முயற்சியாலும் சாமர்த்தியத்தாலும் மான்செஸ்டரில் (Manchester) ஒரு பஞ்சாலையின் காரியஸ்தரா

னர். பிறகு நியூ லானர்க்கு (New Lanark) என்னு மிடத்தில் ஏற்படுத்தப்பட்ட ஓர் ஆலையின் பங்காளர் ஆனது தொடங்கி அவர் பெரிய திட்டங்களைப் போட ஆரம்பித்தார்: தம்மைச் சுற்றிலுமிருந்த தொழிலாளிகளெல்லாம் அறியாமையிலும், வறு மையிலும், துன்பத்திலும் அமிழ்ந்து கிடந்ததைக் கண்டார். தொழிலாளிகளின் துயரை நீக்க முயற்சி செய்ய முன் வந்தார். தொழிலாளிகள் உண்மையில் முன்னுக்கு வர வேண்டுமானால், அது பிறர் தூக்கிவிடுவதால் அன்று ; அவர்கள் முயற்சி யாலேதான் ஆகும் என்று அவர் கருதினர். தொழி லாளர்களைத் தட்டி எழுப்பி, அவர்கள் எவ்வாறு முன்னேற வேண்டுமென்னும் வழி காட்ட முற்பட் டார். தொழிலாளர்களின் குழந்தைகள் தன் முயற்சியும், தன்னாற்றலும் பெறுவதற்குச் சாதன மாக ஒரு பள்ளிக்கூடத்தை நிறுவினர்.

அவர் ‘கூட்டுறவு’ என்னும் ஒரு பத்திரிகை யைத் தொடங்குவதற்குப் பெரிதும் உதவியாய் இருந்தார். கூடிய விரைவில் கூட்டுறவு இயக்கம் உலகெங்கும் பரவி, உலகமே கூட்டுறவுப் பெருஞ் சமூகமாக மாறிவிட வேண்டுமென அவர் சதா காலம் கவலைப்பட்டார். அவர் கருத்துப்படி கூட் டுறவு “உலகெங்கும் உள்ள தொழிலின் ஒரு திட் டம் ; எல்லோருக்கும் பொதுவான சிறப்புரிமைகள் ; புதிதாக உண்டாக்கப்பட்ட பொருள்களில் எல்லோ ருக்கும் சமபங்கு.” ஆகவே, அவர் எண்ணிய கூட் டுறவு அகில உலகத்திட்டமாகும்.

இத்துணைப் பெரிய திட்டத்தை அவர் விரும்பினுரெனினும், சில வழக்காற்றில் எளிதில் கொள்ளக்கூடிய கருத்துகளையும் அவர் கூறி இருக்கிருர். கூட்டுறவை அவர் எளிய முறையில் விளக்கி இருப்பது பாராட்டத்தக்கது. அவர் கூறியுள்ளதாவது, "ரொட்டிகளை ஒவ்வொரு குடும்பததினரும் தங்கள் தங்கள் அடுப்புகளில் சுட்டுக்கொள்வதைவிட, நூறு குடும்பங்கட்கு ஒன்ருகச் சுட்டால், ஒரே அடுப்புப் போதும்; சிரமமும் குறைவே. அப்படிச் செய்வதால் நூறு அடுப்புகளில் வேலை செய்ய வேண்டுவதில்லை; நூறு சமையற்காரர் சிரமப்பட வேண்டுவதில்லை. அதே மாதிரி ஒரு பெரிய சலவைச்சாலை இருந்தால் நூறு குடும்பத்தினர் அழுக்குத் துணிகளைச் சுத்தம் செய்யும் வேலையில் சிரமப்பட வேண்டுவதில்லை," என்பதாம்.

ஓவன் மற்ருேர் இடத்தில், "நீங்களே உங்கள் வியாபாரிகள் ஆகவேண்டும்; நீங்களே உங்களுக்கு வேண்டிய பொருள்களை உற்பத்தி செய்பவராக வேண்டும்; நீங்கள் உங்கட்கு வேண்டிய பல பொருள்களையும் குறைந்த விலைக்குப் பெற வேண்டும். அவைகள் நல்ல சரக்குகளாகவும் இருத்தல் வேண்டும்," என்று கூறி உள்ளார்.

ஓவன் கருத்துகள் பணக்காரருக்கும், பல சிறப்புரிமை பெற்றவர்கட்கும் பிடிக்கவில்லை. அவை அக்காலத்தினரின் மனப்போக்குக்கு ஒத்தவையாகவும் இல்லை. ஓவன் மதக்கருத்துகள் அவ்வளவு சரியானவை அல்ல என்ற எண்ணம் அப்

போதிருந்தமையால், அவரது கூட்டுறவுக் கொள்கைகளையும் அப்போதிருந்தவர்கள் அவ்வளவாகப் பாராட்டவில்லை. ஆனால், நாளடைவில் அவர் அபிப்பிராயங்கள் சமூகத்தில் வேரூன்றின.

ராபர்ட்டு ஓவன் காலத்திலும், அதற்குப் பின்பும் அநேக கூட்டுறவு ஸ்தாபனங்கள் தோன்றின. அவைகளிற் பல குறுகிய காலத்திலேயே அழிந்தொழிந்தன. அவை நீண்ட நாள் இல்லாமைக்குக் காரணம் அச்சங்கங்கள், தர்மிஷ்டர்களால் தொழிலாளர்களின் நன்மைக்கென ஏற்படுத்தப்பட்டவை. 'தொழிலாளர்கட்கு அறஞ்செய்தல்' என்ற எண்ணத்துடன் பிறரால் அவை ஏற்படுத்தப்பட்டபடியால் அவை வேரற்றவைகளாய் நின்றன. தொழிலாளர்களின் தன் முயற்சி என்ற ஆணிவேர் இல்லாத அந்த ஸ்தாபனங்கள் எவ்வளவு காலம் ஜீவிக்கக் கூடும்?

1844-ஆம் ஆண்டிலே இங்கிலாந்திலே ராச்டேல் (Rochdale) என்னும் இடத்தில் இருபத்து நான்கு தொழிலாளிகளால் ஆரம்பிக்கப்பட்ட ஒரு சிறு மளிகைக்கடைதான் உலகத்திற்கே வழி காட்டியாய் விளங்கியது. அந்தத் தொழில் முயற்சியானது குன்றின்மேல் இட்ட விளக்கேபோல உலகெங்கும் ஒளி வீசியது. அந்த நெசவுக்காரர் முதல் முதல் கையாண்ட 'நடத்து முறைதான்' வெற்றியை அளித்தது. அந்த முறைதான் மற்றவர் போற்றிக் கைக்கொண்டது.

அந்த நெசவாளிகளில் ஒருவரான ஹோவார்க்கு (Howark) என்பவர் கூறிய முறையைத்தான் அவர்

நண்பர்கள் அனுஷ்டித்தார்கள். சாமான்களை மொத்தமாக வாங்கிச் சில்லறைக் கடைகளின் நடைமுறை விலைக்கு விற்று, அதனால் வரும் இலாபத்தை ஒவ்வொருவரும் எவ்வளவு சாமான்கள் வாங்கி இருக்கிறார்கள் என்பதை ஆதாரமாக வைத்துக்கொண்டு அதன் பிரகாரம் பங்கிட்டு எடுத்துக் கொள்வது என்ற ஒரு திட்டத்தை அவர் நிருமாணித்தார். பார்ப்பதற்கும் கேட்பதற்கும் மிகச் சாதாரணமான திட்டமாகவே இது தோன்றுகிறது; ஆனால், இத்திட்டத்தை அதுவரை வகுத்தவர் வேறு யாரும் இல்லை.

அந்த நெசவாளிகள் கையில் அதிக முதல் இல்லை. ஆகையால், ஒவ்வொருவரும் கொஞ்சம் கொஞ்சமாகப் பணம் சேர்க்க ஆரம்பித்தனர். முதலில் இரண்டு பென்சு வீதம் சேர்த்தார்கள்; பின் வாராவாரம் மூன்று பென்சு வீதம் பணம் திரட்டினார்கள். ஓர் ஆண்டின் முடிவில் அவர்கள் கையில் 28 பவுன் முதல் சேர்ந்தது. அந்தப் பணத்தைக்கொண்டு, ஒரு சிறிய சந்திலே, சிறிய இடத்திலே, முதன்முதல் வெண்ணெய், சர்க்கரை, ஓட்மீல் (Oat meal), மெழுகு வர்த்தி, மாவு என்னும் ஐந்து பண்டங்களை வாங்கி வியாபாரத்தைத் தொடங்கினார்கள். அவர்களைப் பார்த்து மற்றவர்கள் நகையாடினார்கள்.

ஆனால், அந்த நெசவாளிகளின் ஊக்கம் குறையவில்லை. 'முயற்சி திருவினை ஆக்கும்,' என்பதற்கிணங்க, அவர்களுடைய சலியா உழைப்பால், அவர்

கள் உலகுக்கே வழி காட்டிகள் ஆனார்கள். அவர்கள் தங்களுக்குள் முறை வைத்துக்கொண்டு, மாலையில் சிறிது நேரம் கடையைத் திறந்து வைப்பது வழக்கம். அங்கே எல்லாம் ரொக்க விற்பனைதான்; கடன் கிடையவே கிடையாது. எல்லாச் சாமான்களும் மற்றச் சில்லறைக் கடை விலைக்கே விற்கப்பட்டன. ஆனால், இந்தக் கடைச் சாமான்களெல்லாம் நல்ல சாமான்கள். நிறையிலும் அளவிலும் சூது சிறிதும் இங்கே இராது.

தங்கட்குக் கிடைத்த இலாபத்தை அவர்கள் மூன்றாகப் பிரித்தார்கள். ஒரு பங்கு கல்வி வளர்ச்சிக்காகவும், மற்றொரு பங்கு மூலதனத்துக்காகவும் (Reserve Fund), இன்னொரு பங்கு எல்லாருக்கும் பங்கிடுவதற்காகவும் அமைந்தன. ஒவ்வொருவருக்கும் இலாபத்தில் பங்கு கொடுத்த முறைதான் ஒரு தனிப்பட்ட சிறந்த முறையாகும். அவர்கள் இலாபத்தில் பங்கை முதல் போட்டதற்கு ஏற்பப் பிரிக்கவில்லை; ஒவ்வொருவரும் எவ்வளவு சாமான்கள் வாங்கினார்கள் என்பதை அடிப்படையாக வைத்துக்கொண்டு, அவரவர் சாமான் வாங்கிய கணக்கிற்கேற்ப, அவரவருக்கு இலாபத்தில் பங்கு பிரித்துக் கொடுத்தார்கள். அந்த ஸ்தாபனத்தின் பங்காளர்களின் கூட்டங்களில் ஒவ்வொரு பங்காளருக்கும் ஓர் ஓட்டுதான் (வாக்கு) தரப்பட்டது; கூட்டுறவு ஸ்தாபனங்களை அல்லாத மற்றைய ஸ்தாபனங்களில் வழங்கும் முறை இதுவன்று. அந்த ஸ்தாபனங்களிலெல்லாம் ஒவ்வொருவருக்கு எத்தனை பங்கு

உண்டோ, அத்தனை ஓட்டு உண்டு. ஆனால், கூட்டுறவு ஸ்தாபனத்திலோ, எத்தனை பங்கு உள்ளவராலும் எவருக்கும் உள்ள ஓட்டு (வாக்குரிமை) ஒன்றுதான். இந்த முக்கிய வித்தியாசத்தைக் கற்பித்தவர்கள் ராச்டேல் நெசவாளிகளே.

அந்த நெசவாளிகள் தயாரித்த கூட்டுறவு அறிக்கையானது, எக்காலத்தும் எல்லாராலும் பாராட்டத்தக்கது; எவ்விடத்திலும் எந்த நாளிலும் கையாளத்தக்கது. அது வருமாறு:—

"இந்தச் சங்கத்தின் நோக்கம், பங்கு ஒன்றுக்கு ஒரு பவுன் வீதம், பல பங்குகளைப் பலரிடம் விற்று, பணம் சேர்த்து, கீழ்க்கண்ட முறைகளையும் திட்டங்களையும் அநுஷ்டிப்பதன் மூலம் அங்கத்தினரின் பொருள் நிலையை விருத்தி செய்து, அவர்களின் சமுதாய குடும்ப நிலைமையை மேன்மைப் படுத்துவதாகும்.

சமூக குடும்ப நிலையை உயர்த்த வேண்டுமென விரும்பும் உறுப்பினர், பரஸ்பர உதவியால், வசிப்பதற்கான பல வீடுகளைக் கட்டல், வாங்கல் முதலிய முறைகளைக் கைக்கொள்ளல்.

வேலை இல்லாமல் இருக்கிற அங்கத்தினர் அல்லது அடிக்கடியுண்டாகும் சம்பளக் குறைவால் கஷ்டப்படுபவர் ஆகிய இவர்களின் நன்மைக்காகச் சங்கத்தினரின் தீர்மானத்தின்படி, குறித்த சில பண்டங்களை உற்பத்தி செய்தல்.

அங்கத்தினருக்கு மேலும் உதவி செய்யும் நோக்கத்துடன், வேலையில்லாத அல்லது குறைந்த

சம்பளம் பெறுகிற உறுப்பினர்களைக் கொண்டு, சங்கத்தால் வாங்கப்பட்ட அல்லது குத்தகைக்கு எடுக்கப்பட்ட பண்ணை அல்லது பண்ணைகளில், சாகுபடி செய்து, அவர்களுக்கு நன்மையை அளிப்பது.

கூடிய சீக்கிரத்தில் இச்சங்கமானது தனக்கு வேண்டிய பொருளுற்பத்தி ஏற்பாடு, பொருள்களைப் பிரித்தளித்தல் (Distribution), கல்வியளிப்பு, ஆட்சி ஆகிய இவைகளையெல்லாம் தானே ஏற்படுத்திக்கொள்வது. அதாவது, ஒரே நோக்கத்தினரின் ஒருமைக்காக எல்லாவற்றையும் தன்னுள்ளடக்கிய இடமொன்றினை ஏற்படுத்திக்கொள்ளலும், அம்முயற்சியில் ஈடுபட்ட மற்றவர்கட்கும் உதவி அளித்தலுமாம்.

நிதான புத்தியை உண்டாக்குவதற்காகச் சங்கத்தின் கட்டடமொன்றில் கூடிய சீக்கிரம் மிதமான விடுதி ஒன்றை ஏற்படுத்திக்கொள்ளுவது என்பனவாம்.

அந்த நெசவாளிகளின் சிறப்பு மேற்கண்ட கருத்துகளைத் தெளிவாகக் கூறியதால் மாத்திரம் ஏற்பட்டதன்று. அக்கொள்கைகளை வாழ்க்கையோடு ஒட்டியவைகளாகச் செய்ததுதான் அவர்களுடைய சாமர்த்தியத்தைக் காட்டுகிறது. கடந்த நூறு வருஷங்களில் பல அறிஞர்களும் இத்திட்டத்துடன் புதிதாக ஒன்றும் சேர்க்க முடியவில்லை என்றால், அந்த நெசவாளிகளின் திறமையைப் பாராட்டாமல் இருக்க முடியுமா? எனவே, கூட்டுறவு இயக்க

மானது மகா மேதாவியாலாவது சீர்திருத்தவாதியாலாவது ஏற்படுத்தப்பட்டதன்று ; அது மனிதரின் வாழ்க்கையிலிருந்து தானே தோன்றி வளர்ந்தது.

அந்த நெசவாளிகளின் சங்கம், வரவர மேலோங்கி வளர்ந்தது. அதைக் கண்ட பலரும் பல இடங்களில் பல சங்கங்களை நிறுவினர்.

1852, 1862-ஆம் ஆண்டுகளில் இச்சங்கங்கட்கான சட்டங்கள் இங்கிலாந்தில் ஏற்படுத்தப்பட்டன. அச்சட்டங்கட்கு ஈடு செய்யும் சங்கங்கள், தெய்வீகச் சங்கங்களின் சட்டம் (Industrial and Provident Societies Act) என்பது பெயர். இவைகளில் முதல் சட்டம் மிக முக்கியமானது. அது கூட்டுறவு இயக்கத்திற்கே அரணாய் அமைந்துள்ளது. அந்தச் சட்டந்தான் கூட்டுறவு ஸ்தாபனங்கட்கு ஒரு பாதுகாப்பைத் தந்தது. இரண்டாவது சட்டம், 'பொருள் நுகர்வோரின் மளிகைகளை' (Co-operative stores) ஒரு நிலைப்படுத்தி, உத்தரவாதத்தை வரையறுத்தது.

ராச்டேல் முன்னவர்களில் (Rochdale Pioneers—ராச்டேல் நெசவாளிகளில்) ஒருவரான ஆபிரகாம் கிரீன் உட் (Abraham Green Wood) என்பவரின் முயற்சியால் 1864-ஆம் வருஷம் மான்செஸ்டரில் (Manchester) கூட்டுறவு மொத்தச் சங்கம் ஒன்று காணப்பட்டது. இதற்குச் சாதாரணமாக, சி. டப்ளியூ. எஸ். (C. W. S.) என்பதே பெயர். இது கூட்டுறவு இயக்கத்தின் முன்னேற்றத்தை அறிவதற்கான சாதகமாய் இருந்து வருகிறது.

1869-ஆம் ஆண்டில் கூட்டுறவு ஐக்கிய சங்கம் (Co-operative Union) ஒன்று ஏற்படுத்தப்பட்டது. அந்த ஐக்கியச் சங்கத்தினரே வருஷந்தோறும் கூட்டுறவு மகாநாடுகளை நடத்துகின்றனர். அந்த ஐக்கியச் சங்கம் கூட்டுறவு மொத்தச் சங்கத்திற்கு உயிர் போல விளங்குகிறது.

இதற்குப் பின் இங்கிலாந்தில் கூட்டுறவு இயக்கம் வளர்பிறையே போல வளர்ந்துகொண்டே வருகிறது. ஆங்கில நாட்டு மக்களில் மூன்றில் ஒரு பங்கினர் இச்சங்கங்களின் அங்கத்தினராய் இருக்கின்றனர்.

## (உ) பெல்ஜியம்

கடந்த நூற்றூண்டின் மத்தியில் ஐரோப்பிய நாடுகளிலும் இக்கூட்டுறவு இயக்கமானது விருத்தி அடைந்து வந்தது. ஐரோப்பிய நாட்டுச் சங்கங்கள் பெரும்பாலும் ராச்டேல் சங்கத்தைப் பின்பற்றி நிறுவப்பட்டவைகளே.

ஆனல், பெல்ஜிய நாட்டில் ஒரு சில மாறுதல்கள் காணப்பட்டன. அங்கே கூட்டுறவு இயக்கமானது அரசியற்கட்சியின் வேலைகளுடன் பிணைந்து நிற்கிறது. அங்குள்ள கூட்டுறவு ஸ்தாபனங்கள், அரசியற்கட்சிகளோடு நெருங்கிய தன்மையனவாய் இருக்கின்றன. பொது உடைமைக் கட்சியார் தாம் (Socialist Party) பல சங்கங்களை நிறுவினர். அந்தக் கூட்டுறவுச் சங்கங்களில் தொழிலாளிகளைத் தவிர மற்றவர்களை அவர்

கள் சேர்த்துக்கொள்வதில்லை. அவர்களுக்குப் போட்டியாக 'விரி கொள்கையினரும்' (Liberals), கத்தோலிக்கரும் கூட்டுறவுச் சங்கங்களை ஏற்படுத்தினர். ஆனால், அச்சங்கங்கள் அவ்வளவாக விருத்தியடையவில்லை.

பெல்ஜிய நாட்டில் தொழிலாளர்கட்குக் கூட்டுறவு இயக்கத்தின்மேல் மோகம் அதிகம். கூட்டுறவுப் பண்டசாலைகளில் ஒவ்வொரு தொழிலாளியும் ஒரு வாரம் தனக்குத் தேவையான ரொட்டிக்கு முன் வாரத்திலேயே பணம் கொடுத்துவிட வேண்டும். இம்முறையை அநுஷ்டிப்பதால், அந்தச் சங்கங்கட்குப் போதுமான முதல் எளிதில் கிடைக்கிறது.

இந்நாட்டில் இப்பண்டசாலைகள் வெறுங் கடைகளாய் மாத்திரம் பயன் தரவில்லை. இந்தப் பண்டசாலைகள், கூட்டங்கள் கூடவும், பல விஷயங்களை அறியவும், விளையாட்டுகள் நிகழ்த்தவும், முன்னேற்றம் பெறவும் பெரிதும் சாதகமாய் இருக்கின்றன.

பொதுவாக இலாபத்தை அங்கத்தினர்கட்குப் பங்கிட்டுக் கொடுப்பதை இந்நாட்டுத் தலைவர்கள் வெறுக்கிறார்கள். இலாபமெல்லாம் பெரும்பாலும் பொதுப் பணத்துடனேயே சேர்க்கப்படுகின்றது. முதல் தொகைக்கும் (பங்குத் தொகைக்கும்) அநேகமாக வட்டி கொடுப்பதில்லை. இலாபம், வட்டி முதலியவைகளில் அங்கத்தினர்கட்கு மனம் செல்லுமானால், கூட்டுறவின் முக்கிய நோக்கம் நிறைவேறாதென்பது அத்தலைவர்களின் எண்ணம். எனினும், சில சங்கங்களில் இலாபப் பங்கு தரப்படுகிறது.

பெல்ஜிய சங்கங்கள், அங்கத்தினர்கட்குப் பல வகையிலும் பயன் தருகின்றன. சங்கங்களின் முயற்சியால் பல அங்கத்தினர் குடிப்பதில்லை; சங்கங்களின் உதவியால் பலர் அரசியலறிவைப் பெரிதும் பெறுகின்றனர்.

(ஈ) பிரான்சு

கூட்டுறவுப் பண்டசாலைகள் இந்நாட்டில் சமீப காலத்திலேதான் உண்டாயின. இந்தத் தேச மக்களின் மனம், கூட்டுறவுப் பொருளுற்பத்திச் சங்கங்களின்மேலேயே (Productive Societies) அதிகமாகச் சென்றிருந்தது.

ஆங்காங்குச் சிற்சில பண்டசாலைகள் இருந்தன. அவைகளுள் மிகப் பழைமையானது ரூச் ஸ்டீபனுய் தி செயிண்ட் எடின்னி (Ruche Stephanoise de St. Etienne) என்பது. இது 1855-ஆம் ஆண்டில் ஏற்படுத்தப்பட்டது.

1867 - ஆம் வருஷம் முதல் 1883-ஆம் வருஷம் வரையில் சுமார் நூறு கூட்டுறவுப் பண்டசாலைகள் உண்டாயின. 1885-ஆம் வருஷத்தில் நீமேஸ்(Nimes) என்னும் இடத்தில் சில கூட்டுறவாளர்கள் கூடிக் கூட்டுறவு இயக்கத்தைக் கைதூக்கினார்கள். அவர்கள் முயற்சியால் பாரிஸ் நகரத்தில் கூட்டுறவுக் காங்கிரஸ் (மகாநாடு) ஒன்று நடைபெற்றது அதற்குப் பிறகு பத்து ஆண்டுகள் வரையில் இந்தப் பண்டசாலைகள் ராச்டேல் முறையையே கையாண்டு வந்தன.

இதற்கிடையில் பெல்ஜிய நாட்டுக் கூட்டுறவு முறைகளை அறிந்த சிலர், அந்நாட்டிலுள்ளவற்றைப் போல, அபேதவாதக் கொள்கையை உடைய கூட்டுறவுச் சங்கங்களை நிறுவினர். அச்சங்கங்களின் அங்கத்தினர் எல்லோரும் தொழிலாளரே. இந்தப் புதிய சங்கத்தினர் தமக்கெனக் கூட்டுறவு மொத்தச் சங்கம் ஒன்றை ஏற்படுத்தினர். தொழிலாளர் இடையே வளர்ந்த இச்சங்கங்கள் மிகு விரைவில் விருத்தியடைந்தன. எனவே, பிரான்சு தேசத்தில் இருவகைப் பண்டசாலைகள் இருந்தன.

இதர தேசக் கூட்டுறவாளர்கட்கு இது பிடிக்கவில்லை. இருதரத்தினரையும் ஒன்றுகூட்ட வேண்டுமென அவர்கள் முயன்றார்கள். அதன் பயனாக 1912-ஆம் ஆண்டில் இருதரப்பட்டவரும் ஒன்று கூடினர். ஒன்று கூட்டப்பட்ட அந்த ஸ்தாபனத்திற்கு ல பிடரேஷன் நேஷனல் த சுசைடிஸ் குவாப்பரேடிவ் த கன்சமேஷன் (La Federation National de Societies Co-operative de Consommation) என்பது பெயர்.

ஆனால், இந்த ஐக்கியத்தை விரும்பாத சில சங்கங்கள் தனித்து நிற்கின்றன.

இப்போது அநேகமாக எல்லாக் கூட்டுறவுப் பண்டசாலைகளும் ராச்டேல் முறையையே பின்பற்றி நடைபெறுகின்றன. பல சங்கங்களும் தங்கள் தங்கள் இஷ்டப்படியே இலாபத்தைப் பங்கிட்டுக் கொள்ளுகின்றன.

## (ச) ஜெர்மனி

ஜெர்மனித் தேசத்தில் கூட்டுறவுப் பாங்குகளே முதல் முதல் தோன்றி வளர்ந்து ஓங்கின. கூட்டுறவுப் பண்டசாலைகள் அவ்வளவாக விருத்தி அடையவில்லை. ராச்டேல் கொள்கையின்படி முதல் முதல் ஆரம்பிக்கப்பட்ட பண்டசாலை 1864-ஆம் ஆண்டில் நௌஸ்டட் (Neustadt) என்னும் இடத்தில் ஏற்படுத்தப்பட்டதேயாகும். 1890-ஆம் வருஷத்திற்குப் பின்புதான் இந்தக் கூட்டுறவு முறையானது வளர ஆரம்பித்தது. தொழிலாளர்கள் மிகுந்த ஊக்கத்துடன் அச்சங்கங்களை வளர்த்தார்கள்.

தொழிலாளர் நடத்தி வந்த பண்ட சாலைகள் 1902-ஆம் ஆண்டிலே மற்றவைகளினின்று பிரிந்து விட்டன.

## (ரு) டென்மார்க்கு

இந்தத் தேசத்தில் கூட்டுறவுப் பண்டசாலைகள் கிராமங்களிலேதான் விசேஷமாகக் காணப்படுகின்றன. இந்தத் தேசத்துப் பாதிரியார் ஒருவர், 1866-ஆம் வருஷத்தில் திஸ்டெட் (Thisted) என்னும் இடத்தில் ஒரு பண்டசாலையை ஏற்படுத்தினர். நாளடைவில் மெதுவாக இப்பண்டசாலைகளின் எண்ணிக்கை விருத்தியடைந்தது.

இந்தத் தேசத்தில் ஒரு பட்டினத்தைச் சுற்றி இத்தனை மைல் எல்லைக்குள் சில்லறை வியாபார மளிகைக்கடை இருக்கலாகாதெனச் சட்டமொன்று விதிக்கப்பட்டிருந்தது. எனவே, அந்த எல்லைக்

குள் பல கூட்டுறவுப் பண்டசாலைகள் திறக்கப்பட்டன. ஏனெனில், மேற்குறித்த சட்டம் கூட்டுறவுப் பண்டசாலைகளைக் கட்டுப்படுத்தவில்லை. தமக்கு வேண்டிய சாமான்களைச் சமீபத்திலேயே வாங்கிக் கொள்ளலாமென்று அநேகர் கூட்டுறவுப் பண்டசாலைகளில் உறுப்பினராய்ச் சேர்ந்தனர். அங்கத்தினரல்லாத மற்றவர்கட்குச் சாமான் விற்றலாகாதெனச் சட்டமிருந்தபடியால், எல்லோரும் அங்கத்தினராய்ச் சேர்ந்தனர்.

இந்தப் பண்டசாலைகட்காகப் பல மொத்த வியாபாரச் சங்கங்கள் உண்டாயின. அவைகளெல்லாம் இப்போது ஒன்று சேர்ந்துள்ளன. டேனிஷ் கூட்டுறவு மொத்தச்சங்கம், பொருளுற்பத்தி, வியாபாரம் என்னும் இரண்டிலும் ஈடுபட்டிருக்கிறது.

## (ரு) பின்லந்து

இந்தத் தேசத்தில் 1900 வருஷத்திலிருந்துதான் இவ்வியக்கம் பரவி வருகிறது. கூட்டுறவுப் பண்டசாலைகளில் மிகச் சிலரே சேர்ந்திருக்கின்றனர். இந்தக் கூட்டுறவுச் சாலைகள் கையாளும் முறையொன்று கவனிக்கத்தக்கதாய் இருக்கிறது; இப்பண்டசாலைகளில் அங்கத்தினர் அல்லாதவர்களும் சாமான்களை வாங்கலாம்; அவர்களுக்கும் இலாபத்தில் ஒரு பங்கு தரப்படுகிறது. ஆனல், அந்தத் தொகையைப் பணமாகப் பெற முடியாது; அதற்குச் சாமான்களையே வாங்க வேண்டும். அங்கத்தினரல்லாதவர்களுக்கு உரிய இலாபப் பங்கில்,

கொடுக்கப்பட்டது போக, மிச்சத்தொகை அவர்கள் பெயரில் சேர்த்து வைக்கப்படுகிறது. அப்படிச் சேர்த்து வைக்கும் பணம் பண்டசாலையின் ஒரு பங்குக்கு (Share) வேண்டிய அளவு சேர்ந்ததும், அவர்கள் சங்க உறுப்பினர்களாக ஏற்றுக் கொள்ளப்படுகிறார்கள். அவர்கள் உறுப்பினர்களாகச் சேர மறுத்தால், அப்பணம் சங்கத்தையே சேருகிறது.

இந்தப் பண்டசாலைகள் எல்லா வியாபாரத்தையும் ரொக்க வியாபாரமாகவே நடத்த முடியாமல் கஷ்டப்படுகின்றன. பல பண்டசாலைகள் கடன் கொடுத்து அழிந்துபோய்விட்டன.

(எ) ஸ்விட்ஜர்லந்து

இந்த நாட்டில் 1848-ஆம் வருஷ முதல் கூட்டுறவுப் பண்டசாலைகள் இருந்தன. ஆனால், 1863-ஆம் வருஷத்திலிருந்துதான் அவை ராச்டேல் முறைகளை அநுஷ்டிக்க ஆரம்பித்தன. இந்தத் தேசத்தில் பண்டசாலைகளை நடத்தும் முறையில் இரண்டு விதமான கருத்துகள் இருக்கின்றன: ஒரு சாரார், "இந்தப் பண்டசாலைகளில் பண்டங்களை எவ்வளவு குறைந்த விலைக்கு விற்கக் கூடுமோ, அவ்வளவு குறைந்த விலைக்கு விற்க வேண்டும்," எனக் கூறுகின்றனர். மற்றொரு சாரார், "விலை எப்படியானாலும் சரி; பண்டங்கள் நன்றாயிருக்க வேண்டும். இச்சங்கங்கள் சமூகத்திற்குப் பெரிதும் நன்மை தர வேண்டும்," என்று கூறுகின்றனர்.

## 2. கூட்டுறவுப் பண்டசாலைகளின் சிறப்பும் அவசியமும்

கடந்த ஒரு நூற்றுண்டாகப் பொருளாதார உலகில் பெரிய மாறுதல்கள் உண்டாகி வருகின்றன. நம் நாட்டைவிட, மேல் நாடுகளில் இம்மாறுதல்கள் இன்னும் அதிகம். பொருளுற்பத்தி முறையில் பெரிய மாறுதல்கள் உண்டாவதன் முன் பல பண்டங்களையும் பல தொழிலாளிகளே செய்து வந்தார்கள். அதனல் வரும் இலாப நஷ்டங்களை அவர்களே அனுபவித்து வந்தார்கள். இப்போது அந்தப் பண்டங்களெல்லாம் பெரிய பெரிய தொழிற்சாலைகளில் செய்யப்படுகின்றன. பொருள்களை உற்பத்தி செய்பவர்களுக்கும் அவைகளை வாங்கி அநுபவிப்பவர்கட்கும் இடையே நெருங்கிய சம்பந்தம் இல்லை.

சாமான் வாங்குகிறவர்கள் சில்லறைக் கடைகளில் வாங்குகிறூர்கள். சில்லறைக் கடைக்காரர்களோ, மொத்த வியாபாரிகளிடம் வாங்கி விற்கிறூர்கள். மொத்த வியாபாரிகள், பொருள் உற்பத்தி செய்வோரிடம் வாங்குகிறூர்கள். சில சமயங்களில் ஒரு பொருள் அதனை உற்பத்தி செய்வோரிடமிருந்து அதை அநுபவிப்பவர் கைக்கு வருவதற்குள் அநேக வியாபாரிகளின் கை மாறுகின்றது. அந்த வியாபாரிகளில் ஒவ்வொருவரும் சிறிது சிறிது இலாபம் வைத்துக்கொண்டாலும், மொத்தம் அதிகமாகிவிடுகிறது. பெரும்பாலும் சில்லறைக் கடை வைத்திருக்கும் வியாபாரிகள் அதிக இலாபத்

தையே விரும்புகின்றார்கள். கடைக்காரர்கள் தங்களுடைய சிரமத்திற்குக் கொஞ்சம் ஊதியம் பெற விரும்புவது நியாயமானதே. ஆனால், அவர்கள் அடையும் இலாபம் அவர்கள் எடுத்துக்கொள்ளும் முயற்சிக்கு எவ்வளவு இருக்கலாமோ அதைவிட மிகவும் அதிகமாகவே இருக்கின்றது எனப் பல தேசங்களிலும் பண்டங்களை வாங்குவோர் எண்ண வேண்டி இருக்கிறது. பொருள் உற்பத்தி செய்வோருக்கும், அவைகளை உபயோகிப்போருக்கும் இடையில் எந்த நடுவர்களும் இல்லாவிட்டால், அநேகமாக எல்லாச் சாமான்களையும் குறைந்த விலைக்கே பெறமுடியும் என மக்கள் எண்ணலானார்கள். எனவே, வியாபாரிகளின் உதவி இல்லாமல் சாமான்களைத் தாங்களே வாங்குதல் பல வகையிலும் நல்லது என உறுதி கொண்ட சிலருடைய முயற்சியே இப்போது கூட்டுறவுப் பண்டசாலைகள் என்னும் உருவம் பெற்று விளங்குகிறது. பண்டங்களை நேரே வாங்கும்போது, பலர் சேர்ந்து வாங்கலாம். பலர் சேர்ந்து அதிகமான அளவு பண்டங்களை வாங்கும்போது குறைந்த விலைக்கு வாங்கவும் கூடும்; நல்ல சாமான்களாக வாங்க முடியும். முன் வியாபாரிகளைச் சேர்ந்த இலாபமெல்லாம், இப்பொழுது பண்டங்கள் வாங்குவோரையே சேரும். இதுவே கூட்டுறவுப் பண்டசாலைகள் தோன்றியதின் முக்கிய காரணம்.

அநேகமாக ஏழைகள்தாம் தாங்கள் வாங்கும் சாமானுக்கு அதிக விலை கொடுக்கும்படி நேரிடு

கிறது. ஏழைகளும் தொழிலாளிகளுமே சில்லறைக் கடையிலே தங்கட்கு வேண்டிய சாமான்களை வாங்குகிறார்கள். ஒரு மாதத்திற்கு வேண்டிய சாமான்களைக்கூட மொத்தமாக வாங்க அவர்கட்கு முடியாது. பெரும்பாலும் ஒரு நாளைக்கு, அல்லது ஒரு வாரத்திற்கு வேண்டிய சாமான்களை அவர்கள் வாங்குகிறார்கள். அந்தச் சாமான்களுக்குச் சில்லறைக் கடைக்காரர் வைத்ததுதான் விலை. அநேகமாக அந்தக் கடைக்காரர் வைத்து விற்கும் சாமான்கள் மிகவும் மோசமானவை. சில்லறை வியாபாரிகள் தாழ்ந்த சரக்குகளை உயர்ந்த விலைக்கு விற்று ஏழைகளின் ஜீவிய ஆதாரத்தை உறிஞ்சிவிடுகிறார்கள். இன்னும் கடனுகச் சாமான் வாங்குவதென்றாலோ, கேட்க வேண்டுவதில்லை! விலை உயர்ந்து விடும்; சாமானுடைய தரம் இன்னும் குறைந்து விடும். இக்கஷ்டத்தினின்று முக்கியமாக ஏழைகளை விடுவிக்க எழுந்துள்ளது கூட்டுறவுப் பண்டசாலையாகும்.

பண்டம் வாங்குவோர்தாம் இக்கூட்டுறவுப் பண்டசாலைகளை நடத்துகின்றனர். 'வியாபார நுட்பங்கள் தெரியாத கௌரவ உழைப்பாளிகள், இக்கூட்டுறவுப் பண்டசாலைகளை எப்படிச் சிக்கனமான முறையில் திறமையாக நடத்த முடியும்?' என்று சிலர் நினைக்கக்கூடும். 'இலாபத்தைக் கருதி உழைக்காத சிலர் இந்தப் பண்டசாலைகளை நன்றாக நடத்துவதில் எப்படி அக்கறை எடுத்துக் கொள்ளக்கூடும்?' எனச் சிலர் கருதலாம். ஆனால்,

நடைமுறையில் இப்பண்டசாலைகள் மிகச் செவ்வையாகவே வேலை செய்து வருகின்றன. ஏனெனில், இப்பண்டசாலைகட்குத் தனிப்பட்ட சில வசதிகள் இருக்கின்றன.

இப்பண்டசாலைகள் சாமான்களை உறுப்பினர்கட்கே விற்கின்றன. பண்டசாலையின் உறுப்பினர்கள் அங்கேயே எல்லாச் சாமான்களும் வாங்குவதால், யாராவது வாங்க வருவரோ, வரமாட்டாரோ என்னும் கவலை இதை நடத்துவோருக்குச் சிறிதும் இல்லை. மாதாமாதம் அங்கத்தினர் இவ்வளவு வாங்குவர் என்னும் ஒரு திட்டம் தெரியுமாதலால், அதிகமாகக் கட்டுக்கடைச் சரக்குத் தங்குவதற்கு இடமில்லை. சாதாரணக் கடைகளைப் பலருடைய கண்ணில் படும்படி பெரிய இடத்தில் பெரிய தெருவில் வைக்க வேண்டி இருக்கிறது. சாதாரணக் கடைகளுக்கு விளம்பரம் அவசியம். ஆகையால், அவைகள் இக்காரியங்களுக்காக அதிக பொருள் செலவிட வேண்டி இருக்கிறது. கூட்டுறவுப் பண்டசாலைகளுக்கோ, இந்த வகையில் செலவே இல்லை. ஒரு சந்தில் வைத்தாற்கூட அங்கத்தினர்கள் வந்து சேர்ந்துவிடுவார்கள். அங்கத்தினரல்லாத மற்றவர்கட்கு விளம்பர மூலமாகத் தெரிவிக்க வேண்டுமென்ற அவசியமுமில்லை. சாதாரணக் கடையை ஒருவர் மற்றொருவருக்குச் சிபாரிசு செய்ய மாட்டார். ஆனால், கூட்டுறவுப் பண்டசாலையையோ ஒருவர் தம் நண்பர் பலருக்கும் சிபாரிசு செய்ய விரும்புவர்.

சாதாரணப் பண்டசாலைகளில் கடன் வியாபாரமும் நடக்கிறது. பலருக்குக் கடன் கொடுக்கும்போது, சிலர் கடனைத் திருப்பிக் கொடுக்காமல் மோசம் பண்ணவும் கூடும். இதுபோலச் சில கடன் கொடுக்கப்படாமல் போனாலும் தங்களுக்கு நஷ்டம் உண்டாகாதவாறு, கடன் வியாபாரத்திலெல்லாம் சாமான்களை அதிக விலைக்குத்தான் அந்த வியாபாரிகள் கொடுக்கிறார்கள். ஆனால், கூட்டுறவுப் பண்டசாலையில் இவ்வகையான அதிக விலையே இல்லை. ஏனென்றால், கூட்டுறவுப் பண்டசாலைகளில் நடைபெறும் வியாபாரம் எல்லாம் ரொக்க வியாபாரமே; கடன் வியாபாரம் இல்லவே இல்லை. ஆகவே, கூட்டுறவுப் பண்டசாலையின் சாமான்கள் அதிக விலையுடையவை அல்ல.

தனிப்பட்ட மனிதன் கடை வைத்து நடத்தினால், எல்லா வேலைக்கும் சம்பள ஆட்களையே வைக்க வேண்டி இருக்கிறது. கம்பெனி முறையில் வைத்து நடத்தினாலோ, மானேஜர் முதலியவர்கட்கு அதிக சம்பளம் கொடுக்க வேண்டி இருக்கிறது. ஆனால், கூட்டுறவுப் பண்டசாலைகளிலோ, பெரும்பான்மையான வேலைகள் ஊதியத்தைவிரும்பாதவர்களால் செய்யப்படுகின்றன. அநேகர் குறைந்த சம்பளத்துக்கு வேலை செய்ய முன் வருகின்றனர். ஒரு பெரிய உபகாரமான இயக்கத்துக்கு வேலை செய்யும்போது குறைந்த ஊதியம் கிடைத்தால் போதுமென்று பலர் எண்ணுகின்றனர். பல சிறந்த அறிவாளிகள் கூட்டுறவு ஸ்தா

பனங்களில் மிகக் குறைந்த சம்பளம் பெற்றுக் கொண்டு ஊக்கத்துடன் உழைத்து வருகிறார்கள். கூட்டுறவு இயக்கத்தில் குறைந்த சம்பளத்துக்கு வேலை செய்துவந்த ஒரு பெரிய அறிவாளரை ஒருவர் கேட்ட போது, "நான் அதிக சம்பளத்தை விரும்பவில்லை. என்னை என்னுடன் வேலை செய்பவர்கள் பெரிதும் மதிக்கிறார்கள். என்னிடம் அதிகாரம் இருக்கிறது. எனக்குக் கூட்டுறவு இயக்கத்தின் இலட்சியத்தில் முழு நம்பிக்கை உண்டு. இவை தாம் என்னை முற்றிலும் திருப்தி அடையச் செய்கின்றன," என்று சந்தோஷமாகப் பதில் கூறினாராம்.

ஒவ்வொரு சங்கமும் பண்டசாலையும் அதற்கு வேண்டிய சாமான்களைத் தனியே வாங்குவதில்லை. இந்தக் கூட்டுறவுப் பண்டசாலைகள் பல சேர்ந்து, கூட்டுறவு மொத்த வியாபாரப் பண்டசாலைகளை ஏற்படுத்திக்கொண்டு உள்ளன. இந்த மொத்தப் பண்டசாலைகள் சாமான்களை அதிகமாக வாங்குவதால் குறைந்த விலைக்கு வாங்க முடிகிறது. மேலும், மொத்தப் பண்டசாலைகள் தாங்களே தொழிற்சாலைகளை ஏற்படுத்தி நடத்திப் பல கூட்டுறவுப் பண்டசாலைகட்கும் வேண்டிய சாமான்களைக் கொடுக்கின்றன. உதாரணமாக, இங்கிலாந்தின் மொத்தப் பண்டசாலை, தனக்கு வேண்டிய தேயிலை, காப்பிக்கொட்டை இவைகளைத் தனக்குச் சொந்தமான தேயிலை காப்பித் தோட்டங்களிலேயே உற்பத்தி செய்துகொள்ளுகிறது. இந்தத் தொழிற்சாலையில்

செய்யும் சாமான்களேயே பல பண்டசாலைகளும் வாங்கி விற்கின்றன.

இந்தப் பண்டசாலைகளில் சாமான்களை வாங்குவதனால் நம்மையறியாமலே நாம் பணத்தைச் சேர்க்கிறோம். எப்படி என்றால், இப்பண்டசாலைகள் நாம் வாங்கும் சாமான்கள் எவ்வளவெனக் கணக்கு வைத்துக்கொள்ளுகின்றன. ஆறு மாதங் கழித்தோ, ஒரு வருஷங் கழித்தோ, பண்டசாலையின் கணக்குப் பார்க்கும்போது வருகிற இலாபத்தைச் சாமான், வாங்கிய அளவுக்கேற்பப் பங்கிட்டுக் கொடுப்பதால், நமக்கு ஒரு மொத்தமான தொகை கிடைக்கிறது.

இந்தக் கூட்டுறவுப் பண்டசாலைகள் ஆங்காங்குத் தோன்றி இருப்பதால், அந்த இடங்களிலெல்லாம் ஏனைய வியாபாரிகளும் தங்களுடைய சாமான்களைக் குறைந்த விலைக்கு விற்கிறார்கள். அவ்விதத்தில் இப்பண்டசாலைகளின் உறுப்பினர்களே அன்றி மற்றவர்களும் நன்மையடைகிறார்கள்.

பண்டசாலைகள் அநேக ஏழைத் தொழிலாளிகட்கு அறிவூட்டும் ஸ்தாபனங்களாகவும் விளங்குகின்றன. புரபசர் சி. ஆர். பே (Prof. C. R. Fay) என்பவர், இப்பண்டசாலைகள் நான்கு வகையாகத் தொழிலாளர்கட்கு உதவியாயிருக்கின்றன எனக் கூறியிருக்கிறார்.

முதலாவது, தொழிலாளிகளிடையே இது தன் ஆட்சி முறையைப் புகுத்தி இருக்கிறது.

இரண்டாவது, தொழிலாளர்கள் எல்லாச் சாமான்களையும் காசு கொடுத்தே, அதாவது ரொக்கத்துக்கே வாங்கும்படி செய்திருக்கிறது.

மூன்ருவது, தொழிலாளர்களிடையே சிக்கனத்தைப் பரப்பி, அவர்கள் பணம் சேர்த்து வைக்கும் பழக்கத்தை விருத்தி செய்துள்ளது.

நான்காவது, தங்களுடையவும், பொதுவாக எல்லாத் தொழிலாளர்களுடையவும் அறிவு விருத்திக்காகவும், நன்னடத்தை விருத்திக்காகவும் எல்லா அங்கத்தினரும் தியாகம் செய்து வருகின்றனர்.

இவை இப்பண்டசாலைகளால் உண்டாகும் சமூக நன்மைகளாகும்.

(1) இந்த ஸ்தாபனங்களில் ஒவ்வோர் உறுப்பினருக்கும் ஒவ்வோர் ஓட்டே இருப்பதால், சில கம்பெனிகளில் இரண்டொருவர் தம்முடைய ஓட்டு வன்மையால் மற்றவர்கள் முயற்சியை வீணுக்கல் போல, இங்கே செய்வதற்கில்லை. பண்டசாலைகளின் பல காரியங்களையும் அங்கத்தினர்களே பார்ப்பதால், வியாபாரத்திலும், சிறு ஸ்தாபனங்களை நடத்துவதிலும், அங்கத்தினருக்குப் பயிற்சி உண்டாகிறது. இந்த அப்பியாசத்திஞல் அவர்கள் தங்கள் நன்மைக்கான பல காரியங்களைச் செய்து கொள்ளும் சக்தியைப் பெறுகின்ருர்கள்; பல பொறுப்பான ஸ்தாபனங்களை வகிக்கத் திறமை உடையவர்களாகின்ருர்கள்.

(2) அநேக வியாபாரிகள் சாமான்களைக் கடன் கொடுக்கிருர்கள். அநேகமாகப் பலர் கட

னுக்குச் சாமான்களை வாங்குவதையே விரும்புகின்றனர். இக்கூட்டுறவுப் பண்டசாலைகளில் சேர்வோர் கடன் வாங்காதிருப்பதால், நாளடைவில் சிக்கன வாழ்க்கை முறைகளைக் கற்றுக்கொள்ள வசதி ஏற்படுகிறது; வருவாய்க்கேற்ற செலவு செய்யும் பழக்கமும் உண்டாகிறது.

(3) இலாபத்தில் பங்கு கொடுப்பதென்ற முறை சிக்கனத்தை விருத்தி செய்கிறது. இந்த வகையில் இங்கிலாந்து தேசத்தில் உறுப்பினர் பெருந்தொகையினராயிருக்கின்றனர்.

(4) கூட்டுறவு ஸ்தாபனங்களில் வரும் இலாபத்தில் ஒரு பகுதி கல்வியபிவிருத்திக்காக உபயோகிக்கப்படுகிறது. இங்கிலாந்திலே இவ்வகையில் கூட்டுறவு ஸ்தாபனங்கள் செலவிடும் தொகை அதிகம்.

இந்தப் பணத்திலிருந்து கூட்டுறவைப் பற்றிய அறிவைப் பரப்பும் வேலை செய்யப்படுகின்றது. அங்கே கூட்டுறவு இயக்கத்தின் சரித்திரமும், கூட்டுறவு இயக்கம் பல தேசங்களிலும் எப்படி நடக்கிறதென்ற விவரங்களும் தெரிவிக்கப்படுகின்றன.

இந்த ஸ்தாபனங்கள் அநேக புத்தகசாலைகளையும் வைத்து நடத்துகின்றன; பல சொற்பொழிவுகள் நடைபெறும்படி செய்கின்றன.

இவை மேலும் பல வாசகசாலைகளை ஏற்படுத்தி இருக்கின்றன; வெளியூருக்குப் பலர் சேர்ந்து போகும் ஏற்பாடுகளைச் செய்கின்றன; பல வித விளையாட்டுகளையும் உறுப்பினரின் நன்மைக்காக ஏற்படுத்துகின்றன.

கூட்டுறவுப் பண்டசாலைகள் தொழில் உலகி லும் தலை சிறந்து நிற்கின்றன. இப்பண்டசாலை கள் தங்கட்கு வேண்டிய சாமான்களில் பலவற் றைத் தாங்களே செய்துகொள்ளுகின்றன.

---

## 3. கூட்டுறவுப்பண்டசாலைகளின் நடை முறை

கூட்டுறவு இயக்கத்தில் இந்தப் பண்டசாலை களே மிகவும் முக்கியமானவைகள். கடந்த ஐம்பது அறுபது ஆண்டுகளில் இப்பண்டசாலைகள் மிகவும் வளர்ந்துள்ளன. இவை முக்கியமாக இங்கிலாந்து, ஸ்காட்லந்து, ஜெர்மனி முதலிய நாடுகளில் மிக வும் அதிகமாய் விருத்தியடைந்துள்ளன. நாட்டிற் கேற்றபடி சிற்சில மாறுதல்களுடன் டென்மார்க்கு, ஹங்கேரி முதலிய நாடுகளிலும் இவை மிகவும் ஓங்கி வருகின்றன.

இங்கிலாந்து தேசத்திலேதான் இப்பண்ட சாலைகளின் எண்ணிக்கை மிகவும் அதிகமாய் இருக்கிறது. இங்கிலாந்தின் பண்டசாலைகளைப் போலவேதான் மற்றைய நாடுகளும் பண்டசாலை களை அமைத்து நடத்துகின்றன. முன் கூறியபடி ராச்டேல் நெசவாளிகள் நடத்திய பண்டசாலையின் நடை முறைகளைப் பின்பற்றித்தான் அநேகமாக எல்லாப் பண்டசாலைகளும் நடைபெற்று வருகின் றன.

இப்பண்டசாலைகளின் நான்கு முக்கிய வழக் காறுகளை நாம் கவனிக்க வேண்டும்:

முதலாவதாக, இப்பண்டசாலைகளில் உறுப்பினர்களின் எண்ணிக்கை வரையறுக்கப்படவில்லை. எத்தனை பேர் வேண்டுமானாலும் அங்கத்தினர்களாக எந்தக் கூட்டுறவுப் பண்டசாலையிலும் சேரலாம். மேலும், இப்பண்டசாலைகளின் மூல தனம் (முதல்) ஓரளவுக்குமேல் இருக்கக்கூடாதென்ற தடையும் இல்லை. எத்தனை பேர் பங்குத் தொகையைக் கொடுத்தாலும், அவ்வளவையும் முதலாக வைத்துக்கொண்டு இப்பண்டசாலைகளை நடத்தலாம்.

இரண்டாவது, ஒவ்வோர் அங்கத்தினருக்கும் ஒரே ஓட்டுத்தான் உண்டு. அநேக பங்குகளை வாங்கி இருப்பவருக்கு அவற்றிற்காக அநேக ஓட்டுகள் கிடைப்பதில்லை. பங்கின் தொகை எவ்வளவாய் இருந்தாலும், ஒவ்வோர் உறுப்பினருக்கும் ஒவ்வோர் ஓட்டுத்தான் உண்டு.

மூன்றாவதாக, பங்குக்காகக் கொடுத்திருக்கும் பணத்திற்குக் கொடுக்கப்படும் வட்டி, ஒரு குறித்த அளவுக்குமேல் கொடுக்கப்படமாட்டாது. ஒவ்வோர் அங்கத்தினரும் ஒரு குறித்த எண்ணுள்ள பங்குகளாவது வாங்க வேண்டுமென்னும் ஒரு நிபந்தனையும் இருக்கிறது.

நான்காவதாக, பங்காளர்களுக்குக் கொடுக்கப்படும் இலாபத்தைப் பங்குப் பணத்திற்குத் தக்கவாறு பிரித்துக்கொடுப்பதில்லை. மொத்த இலாபம், ஒவ்வொரு பங்காளரும் எவ்வளவு சாமான் வாங்கி இருக்கிறாரோ அதற்குத் தக்கபடி, பங்கிட்டுக் கொடுக்கப்படும்.

இவைகளே அவ்வழக்காறுகள். இந்த வழக்காறுகளின் முக்கிய நோக்கம், 'எல்லாப் பங்காளர்களும் சம அளவு அதிகாரம் பெற்றிருக்க வேண்டும்; பண்டசாலையை நடத்தும் வகையில் எந்தப் பங்காளருக்கும் மற்றவர்களைவிட அதிகமான அதிகாரம் இருக்கக்கூடாது,' என்பதாம். மேலும், பலருடைய ஒத்துழைப்பாலேதான் அதிக வியாபாரம் செய்ய முடியுமாதலால், அதை அனுஷ்டித்து, ஒவ்வொருவரும் வாங்கும் பண்டங்களுக்கு ஏற்ப இலாபத்தில் பங்கு கொடுப்பதென்னும் ஏற்பாடும் பழக்கத்தில் இருக்கிறது.

இப்பண்டசாலைகளை நடத்தும் முறை மற்றச் சாதாரணப் பண்டசாலைகள் நடத்தும் முறையினின்றும் வேறுபட்டதன்று. வியாபாரிகள் பண்டசாலைகளை நடத்துவது போலவே இப்பண்டசாலைகளும் நடத்தப் பெறுகின்றன. ஆனால், இப்பண்டசாலையில் வாங்கப்பெறும் பண்டங்கள் நல்ல சுத்தமான பண்டங்கள். சாதாரணப் பண்டசாலைகளில் கையாளப்பெறும் சூதுகளும் மோசங்களும் இங்கே இல்லை. மிளகாயில் தண்ணீர் தெளித்து வைத்தல், நெய்யில் கொழுப்பைச் சேர்த்தல், நல்லெண்ணெயில் வேறு பண்டங்களைக் கலத்தல் முதலிய தவறான காரியங்கள் இங்கே நடைபெறா. நிறை, அளவு இவைகளில் மோசம் நேரிடாது.

இப்பண்டசாலைகள் பணம் சேமித்து வைப்பதற்கும் மிகவும் உதவியாக இருக்கின்றன. பணமுள்ளவர்கள் இப்பண்டசாலைகளின் பங்குகளை

வாங்கினால் பணத்தை எப்போது வேண்டுமானாலும் திரும்பப் பெற்றுக்கொள்ள முடியும். மேலும், மற்றக் கம்பெனிகளின் பங்குகளைப்போல இந்தப் பண்டசாலைகளின் பங்குகளின் விலை கூடுவதும் இல்லை; குறைவதும் இல்லை. ஆகையால், போட்ட பணம் எப்போதும் அப்படியே இருக்கும். அதுவுமல்லாமல், இந்தப் பண்டசாலைகள் தாங்கள் பெறும் பங்குத் தொகைகளுக்கு நியாயமான வட்டியைக் கொடுக்கின்றன. எனவே, வட்டியும் கிடைக்கிறது. ஆதலால், இப்பண்டசாலைகள் பணம் சேமித்து வைக்கவும் உதவியாய் இருக்கின்றன என்று கூறுவதிற் சிறிதும் தவறில்லை.

(1) சாமான்களை என்ன விலைக்கு விற்பது ?

இப்பண்டசாலைகளில் சாமான்களை அடக்க விலைக்கு விற்பதா, அல்லது மற்றைய சில்லறைக் கடைகளில் விற்கும் விலைக்கு விற்பதா என்பதைப் பற்றி அநேக அறிஞர்கள் ஆராய்ச்சி செய்திருக்கிறார்கள். அறிஞர்களின் பொதுவான முடிபு, இப் பண்டசாலைகளிற் சாமான்களை மற்றச் சில்லறைக் கடைகளில் விற்கும் விலைக்கே விற்றல் நல்லது என்பதாம்.

சாமான்களைப் பண்டசாலையின் அடக்க விலைக்கு, அதாவது பண்டசாலைக்கு எவ்வித இலாபமும் இல்லாமல் எந்த விலைக்கு விற்கலாமோ அந்த விலைக்கு விற்பதில் சில அசௌகரியங்கள் இருக்கின்றன. முதலாவதாக, குறைந்த விலைக்கு விற்ப

தில், அக்கம் பக்கத்திலுள்ள வியாபாரிகளின் போட்டி ஏற்படுகிறது. அதனல் இந்தப் பண்டசாலைகளுக்கும் சாதாரண வியாபாரிகட்கும் மனக்கசப்பு உண்டாகிறது. குறைந்த விலைக்குச் சாமான் வாங்குவதொன்றுமாத்திரம் இவர்களின் நோக்கமானல், பலர் ஒன்று சேர்ந்து தாம் வாங்கும் சாமான்களுக்குக் கமிஷன் கொடுக்க வேண்டுமென்று சாதாரண வியாபாரிகளிடம் ஏற்பாடு செய்துகொள்ளலாம். ஆகையால், குறைந்த விலைக்குச் சாமான்களை விற்றல் மாத்திரம் இந்தப் பண்டசாலைகளின் நோக்கமல்லவென்பது தெளிவாக விளங்கும்.

இப்பண்டசாலைகளில் சாமான்களைச் சில்லறைக் கடைகளின் விலையைவிடக் குறைவான விலைக்கு விற்ருல், அங்கத்தினர்களல்லாத மற்றவர்கட்கு விற்க முடியாது. அல்லது அதே விலைக்கு மற்றவர்கட்கும் விற்ருல், அங்கத்தினர்கட்கு விசேஷமான நன்மை இல்லாது போய்விடுகிறது. அல்லது அங்கத்தினர்கட்கு ஒரு விலை, மற்றவர்கட்கு ஒரு விலையென இரண்டு வகை விலைகட்குச் சாமான்களை விற்கலாமென்ருல், நடை முறையில் இது மிக்க கஷ்டத்தைத் தரும். அங்கத்தினர்கட்கு மாத்திரந்தான் விற்பது, அதுவும் குறைந்த விலைக்குக் கொடுப்பது என்னும் முறையைக் கொண்டாலும் ஒரு கஷ்டம் உண்டு. அப்போது ஒவ்வோர் அங்கத்தினரும் தம் உறவினருக்கும் நண்பர்கட்கும் வேண்டிய சாமான்களை இக்கூட்டுறவுப் பண்ட

சாலைகளில் தங்கள் பெயரால் வாங்கி, சிறிது இலா பம் வைத்துக்கொண்டு, அவர்கட்கு விற்றுவிடலாம். ஆகவே, இந்த முறையானது சில அங்கத்தினர் களாவது நியாயமற்ற முறையில் இலாபம் சம்பா திப்பதற்கு மிகுந்த சௌகரியத்தை அளிக்கும். ஆகவே, இந்த முறையை அநுஷ்டிப்பது உசித மன்று.

மேலும், கூட்டுறவு இயக்கத்தின் முக்கிய நோக் கம் அங்கத்தினரின் சமுதாய, கல்வி நிலைமைகளை உயர்த்துவதாகும். அதற்குப் பணம் வேண்டும். அந்தப் பணம் இந்த ஸ்தாபனங்களின் இலாபத்தி லிருந்தே வர வேண்டி இருக்கிறது. ஆகவே, இந்தக் கூட்டுறவுப் பண்டசாலைகளில், கடை விலைக்கே சாமான்களை விற்று, அதனால் உண்டாகும் இலாபத் தில் ஒரு பங்கை மேற்கண்ட நல்ல காரியங்கட்கு உபயோகிக்க வேண்டிய அவசியம் ஏற்படுகிறது.

சாமான்களைக் கடை விலைக்கு விற்பதில் இன் னொரு சௌகரியமும் இருக்கிறது: அங்கத்தினர், சாமான்களை மற்றக் கடைகளில் வாங்கும் விலைக்கு வாங்குவதால், அவர்கட்கு ஓர் அசௌ கரியமும் இல்லை. மற்றக் கடைகளில் வாங்குவது போலவே இங்கேயும் வாங்கும்போது, ஒரு குறித்த காலத்திற்குப் பிறகு, இலாபத்தில் பங்கு கிடைக்கி றது. அந்தப் பங்கு ஒரு மொத்தத் தொகையாகக் கிடைப்பதால், அந்த அங்கத்தினர் மகிழ்ச்சி அடை கின்றனர். மேல் நாடுகளில் தொழிலாளிகளின் மனைவிகள் இவ்வாறு ஒரு தொகையை மொத்த

மாகப் பெறுவதில் மிகவும் சந்தோஷமடைகின்றனர். எனவே, இம்மாதிரி இலாபத்தைச் சேர்த்து வைத்து ஒரு தொகை சேர்ந்த பிறகு பங்கிட்டுக் கொடுக்கும் முறை, பலர் இப்பண்டசாலைகளில் சேருவதற்கும் ஊக்கத்தைத் தருகிறது.

அங்கத்தினருக்கு இலாபமாகப் பெரிய தொகையைக் கொடுக்க வேண்டுமென்னும் நோக்கத்துடன் இங்கிலாந்திலும், பெல்ஜியத்திலும் சில பண்டசாலைகள் சாமான்களை உயர்ந்த விலைக்கு விற்கின்றன. இந்த முறை அவ்வளவு சரியானதன்று. பெருத்த இலாபத்தைப் பெற வேண்டுமென்பது கூட்டுறவாளர்களின் நோக்கமன்று. இலாபத்தையே இலட்சியமாகக் கொண்டு நடத்தப்படும் கூட்டுறவு ஸ்தாபனங்கள் நாளடைவில் கூட்டுறவு இலட்சியத்தைக் கைவிடக் கூடும். மேலும், சாமான்களைக் கடை விலையைவிட அதிக விலைக்கு விற்பதால், ஏழைகள் கூட்டுறவுப் பண்டசாலைகளில் சாமான்களை வாங்க முடியாமல் தவிப்பார்கள். ஆகையால், கூட்டுறவுப் பண்டசாலைகளில் கடை விலையைவிட அதிக விலைக்குச் சாமான்களை விற்றல் பல வகையாலும் கண்டிக்கத்தக்கதேயாகும்.

## (2) ரொக்க விற்பனை

சாமான்களை இப்பண்டசாலையில் ரொக்கத்திற்கு விற்பதுதான் நல்லது என்று எல்லோரும் அபிப்பிராயப்படுகின்றனர். கடனுக்கு விற்றால், சாமான்களைக் குறைந்த விலைக்கு விற்க முடியாது.

கடனுக்கு விற்கும்போது வாங்கின கடனைச் சிலர் கொடுக்காமற் போனாலும் போகலாம். மேலும், கடனுக்குச் சாமான்களை வாங்கச் சௌகரியம் இருந்தால், அநேகர் தமது வரவுக்குத் தக்கபடி செலவு செய்யாமல், அதிக செலவு செய்ய இடமுண்டு. கடன் வாங்குவோர், கணக்கு வழக்கில்லாமல் அதிக சாமான்களை வாங்குவார் என்ற எண்ணத்தாலேதான் சாதாரண வியாபாரிகள் கடன் கொடுப்பது வழக்கம். ஆகவே, இந்தப் பண்டசாலைகளில் சாமான்களை ரொக்க விற்பனை செய்வதுதான் நல்லது.

சிலர், "கடனுக்கு வியாபாரம் செய்வதாலே தான் வியாபாரிகளுடன் போட்டி போட முடியும்; அப்போதுதான் வியாபாரிகளிடம் கடனுக்கு வாங்குவோர்களையெல்லாம் கூட்டுறவுப் பண்டசாலைகளில் வாங்கும்படி செய்யலாம்," என்று கூறுகின்றனர். அது சரியன்று. குறித்த காரியத்தைச் செய்ய வேண்டுமென்பதற்காகத் தவறான முறையைக் கையாளுவது சரியன்று.

**கிளேட்ஸ்டன்** என்னும் ஆங்கில அரசியல் நிபுணர், "கூட்டுறவுப் பண்டசாலையில் ரொக்க விலைக்கு விற்பதென்னும் முறையை அநுஷ்டிப்பது மிகவும் பாராட்டத் தக்கது," என்று கூறி இருக்கிறார்.

பெல்ஜியத்தில் அங்கத்தினர்கள், தங்கட்கு அடுத்த வாரத்தில் தேவையான சாமான்களுக்கு இந்த வாரத்திலேயே பணங் கொடுத்துவிட்டு, இர

சீது பெற்றுக்கொண்டு, அடுத்த வாரத்தில் சாமான்களை வாங்கிக்கொள்ளுகிறார்கள். ஒரு தேசத்தார்கள், கடன் வாங்காமல் இருப்பது மாத்திரமன்றி, ஒரு வாரத்திற்கு முன்பே தங்கட்கு வேண்டிய சாமான்களுக்குப் பணம் கொடுத்துவிடுகின்றார்களென்றால், மற்றைத் தேசங்களில் உள்ளவர்கள் கடன் கொடுக்கும் வழக்கத்தை ஏன் கைக்கொள்ள வேண்டும்?

## (3) வெளியாருக்கு விற்றல்

இந்தப் பண்டசாலைகளில் அங்கத்தினரல்லாத மற்றவர்கட்கு விற்கும் வழக்கம் இருக்கிறது. சில பண்டசாலைகள் வெளியாருக்குச் சாமான்களைக் கொடுப்பதே இல்லை. இங்கிலாந்து முதலிய இடங்களில் வெளியாருக்குச் சாமான்களை விற்கும் முறை கையாளப்படுகிறது; அந்த இடங்களில் வெளியாருக்கு அங்கத்தினருக்குக் கொடுக்கிற அளவு இலாபம் கொடுப்பதில்லை; குறைவாகவே கொடுக்கும் முறையே கைக்கொள்ளப்பட்டிருக்கிறது.

வெளியாருக்கு விற்பதில் சில நன்மைகளும் உண்டு. இப்பண்டசாலைகளில் வாங்குவதால் உண்டாகும் சௌகரியங்களை நாளடைவிலாவது வெளியார்கண்டு, அங்கத்தினர்களாகக் கூடும். பண்டசாலைகள் வெளியாருக்கும் வியாபாரம்செய்வதால் மொத்த வியாபாரம் அதிகமாகி, நடை முதல் செலவு குறையும். குறைந்த காலத்தில் நிறைந்த அளவு சாமான்களைக் கொள்முதற்கு விற்று முதல் செய்ய முடியும்.

வெளியாருக்கு விற்கக்கூடாது என்று கூறுவதிலும் உண்மை இருக்கிறது. கூட்டுறவுப் பண்டசாலைகள் சாதாரண வியாபார ஸ்தலங்களாக எண்ணப்படலாகாது. இப்பண்டசாலைகளில் இலாபத்தை விருத்தி செய்துகொள்ளல் வேண்டும் என்ற ஓர் எண்ணமே மேலோங்கக் கூடாது.

பொதுவாக வெளியாருக்கு இப்பண்டசாலைகளில் சாமான்களை விற்றால், நாளடைவில் அவர்களை அங்கத்தினர்களாக்க வேண்டும் என்ற எண்ணத்துடனேயே விற்றல் வேண்டும்.

பிரான்சு தேசத்தில் இன்னொரு முறை கையாளப்பட்டு வருகிறது. அதாவது, வெளியார்கள் உறுப்பினர்களாக விரும்பவில்லையானல், அவர்களை இப்பண்டசாலையினர் சார்பினர்களாகச் (adherents) சேர்த்துக்கொள்ளுகிருர்கள். அவர்களிடமிருந்து சிறு சேர்க்கைக் கட்டணம் மாத்திரம் வசூலிக்கப்படுகிறது. அவர்களுக்கு ஓட்டுரிமை இல்லை ஆனல், இலாபத்தில் மற்ற உறுப்பினர்கட்கு இருக்கிற அவ்வளவு பங்கு அவர்கட்கும் உண்டு. இந்த முறையை அநுஷ்டிப்பதன் மூலம் அந்தத் தேசத்தில் பங்குத் தொகையைக் கொடுக்கமுடியாத ஏழைகளைச் சேர்த்து, அவர்களுக்கு நன்மை அளிக்க முடிகிறது.

## (4) இலாபத்தைப் பங்கிடுதல்

இப்பண்டசாலைகளில் வாங்கும் விலைக்கும் விற்கும் விலைக்கும் வித்தியாசம் இருப்பதால், இலா

பம் கிடைக்கிறது. இந்த இலாபத் தொகையில் கட்டட வாடகை, சிப்பந்திகளின் செலவு இவைகட்கும், மூல தனத்திற்கும் எடுத்து வைக்கப்பட்டது போக, மிச்சத் தொகை, முன் கூறியவாறே அவரவர்கள் சாமான் வாங்கிய கணக்கின்படி பங்கிட்டுக் கொடுக்கப்படுகிறது. அநேகமாக எல்லாச் சங்கங்களிலும் கல்வி அபிவிருத்திக்கென்று ஒரு பங்கு எடுத்து வைக்கப்படுகிறது.

இலாபத்தில் பங்கு கொடுப்பதற்கு, ஒவ்வோர் உறுப்பினரும் எவ்வளவு சாமான் வாங்கினர் என்பது தெரிய வேண்டும். அதற்காகச் சில பண்டசாலைகள் ஒவ்வோர் அங்கத்தினருக்கும் ஒரு கணக்கு நோட்டுப் புத்தகத்தைக் கொடுத்து வைக்கின்றன. அதில் ஒவ்வொரு தடவையும் வாங்கும் சாமான்கள் எழுதப்படுகின்றன. அதன் உதவியால் மொத்தம் வாங்கிய சாமான்களைக் கணக்கிட்டு விடுவது சுலபம். ஆனால், அநேகமாகப் பண்டசாலைகளே இக்கணக்கை வைத்துக்கொள்ளுகின்றன. அவைகளே ஒவ்வோர் உறுப்பினருக்கும் சேர வேண்டிய தொகையைக் கணக்கிட்டுக் கொடுத்துவிடுகின்றன.

இலாபம் அதிகமாகக் கிடைக்கிறதா இல்லையா என்பது அநேக விஷயங்களைப் பொறுத்திருக்கிறது. புரபசர் ஜீடு (Prof. Gide) என்பவர் கீழ்க் காணும் காரணங்களைக் கூறுகிறார்:

(க) பொதுவாக, செவ்வையாக நடத்தப் பெறும் ஸ்தாபனங்களில் இலாபம் அதிகமாகவே

இருக்கும். கணக்கு வழக்கில் ஒழுங்கீனம், நாணய மற்ற வேலையாட்கள், அலட்சியமான நடை முறை முதலியவைகளால் இலாபம் குறையும்.

(உ) எல்லா அங்கத்தினர்களும் இந்தப் பண்ட சாலைகளிலேயே சாமான்களை வாங்கினாலும், எல்லோருக்கும் சௌகரியமான பொது இடத்தில் பண்டசாலை இருந்தாலும், இலாபம் அதிகமாக வரும்.

(ங) இப்பண்டசாலையானது, அங்கத்தின ருக்கு வேண்டிய எல்லாச் சாமான்களையும் விற்றால் இலாபம் அதிகமாகக் கிடைக்கும். அங்ஙனமன் றிச் சில சாமான்களையே விற்றால் இலாபம் குறையு மல்லவா ?

(ச) இப்பண்டசாலைக்கு வேறு போட்டி இல்லாவிட்டால், இலாபம் அதிகமாக வர ஏது உண்டு. பக்கத்தில் சாதாரண வியாபாரிகளின் போட்டி அதிகமானல், இலாபம் குறையும்.

(ரு) இலாபம் எவ்வளவு வருகிறது என்பது சாமான்களை விற்கும் விலையைப் பொறுத்திருக் கிறது. ஒவ்வொரு சாமானையும் மிகக் குறைந்த இலாபத்திற்கே விற்றால், மொத்த இலாபம் மிகக் குறைவாகிவிடுமல்லவா ?

பெல்ஜியத்திலே ஒவ்வோர் அங்கத்தினருக் கும் சேர வேண்டிய இலாபப் பங்கைப் பணமாகக் கொடுப்பதில்லை. அந்த அங்கத்தினர்கட்குச் சாமான்கள் வாங்குவதற்கான சீட்டே அந்தத்

தொகைக்குக் கொடுக்கப்படுகிறது. ஆகையால், அந்த இலாபத் தொகையைச் சாமான் வாங்குவதற்கன்றி, வேறு செலவுக்கு உபயோகிக்க முடியாது.



## 4. கூட்டுறவுப் பண்டசாலைகளின் அமைப்பு

அநேகமாக எல்லாக் கூட்டுறவு ஸ்தாபனங்களின் அமைப்பும் ஒரே மாதிரியாகத்தான் இருக்கிறது. எல்லா அங்கத்தினர்களும் ஒருவருக்கொருவர் சமத்துவமானவர் என்ற உயரிய கருத்தும், 'ஒவ்வொருவரும் மற்றவர்கட்கும், மற்றவர்களெல்லாம் ஒவ்வொருவருக்கும் உதவியாய் இருக்க வேண்டும்,' என்னும் உயர்ந்த இலட்சியமும் எல்லா ஸ்தாபனங்களிலும் காணப்படுகின்றன.

பங்குகள் எல்லாம் எல்லோருக்கும் ஒரே விலைக்கு விற்கப்படுகின்றன. ஒவ்வோர் அங்கத்தினரும் இத்தனை பங்குக்கு மேல் வாங்கக்கூடாதென்ற வரையறையும் இருக்கிறது. ஒவ்வொருவருக்கும் ஒவ்வோர் ஓட்டே இருக்கிறது.

சில இடங்களில் இக்கூட்டுறவுப் பண்டசாலைகளின் அங்கத்தினரெல்லாம் ஒரே தொழிலைச் சேர்ந்தவராய் இருக்கின்றனர். அங்ஙனமிருப்பதில் ஒரு நன்மையுண்டு. அங்கத்தினர் ஒரே வாழ்க்கை நிலையில் இருந்தால், அவர்களிடம் ஐக்கிய பாவம் விசேஷமாய் இருக்கக்கூடும். ஆனல், இப்படிப்பட்ட ஸ்தாபனங்கள் வியாபாரத்திலேயே

முழுக் கவனத்தையும் செலுத்தி, சமுதாய விஷயங்களைக் கவனியாது விடுதல் கூடும்.

ஆனால், மதப் பிரிவினையையோ, அரசியல் கருத்து வித்தியாசத்தையோ அடிப்படையாகக் கொண்டு கூட்டுறவு ஸ்தாபனங்களை ஏற்படுத்தக் கூடாது.

'ஒரு குடும்பத்தில் எல்லோரும் கூட்டுறவு ஸ்தாபனத்தில் சேரலாமா, அல்லது வீட்டுக்கு ஒருவர் சேர்ந்தால் போதுமா?' என்ற கேள்வி எழக் கூடும். வீடொன்றுக்குப் பலர் சேருவதால், கூட்டுறவுப் பண்டசாலையின் வியாபாரம் அதிகமாகப் போவதில்லை. ஆதலால், வீட்டுக்கு ஒருவர் சேர்ந்து, அவர்மூலம் வீட்டுக்கு வேண்டிய எல்லாச் சாமான்களையும் வாங்குவதே போதுமானது.

## முதல்

இப்பண்டசாலைக்கு முதல் அதிகமாக வேண்டுவதில்லை. இதில் ரொக்க வியாபாரமே நடைபெறுவதால், பண நடமாட்டம் எப்போதுமே இருந்துகொண்டிருக்கும்.

ஒவ்வொருவரும், உறுப்பினர் ஆகும்போது ஒரு சிறு சேர்க்கைக் கட்டணத்தைச் (Entrance fee) செலுத்த வேண்டும்; அதல்லாமல் ஒரு சிறு பங்கையும் (Share) வாங்க வேண்டும்.

இந்த ஸ்தாபனங்களுக்கு முதல் தொகை மூன்று விதமாகக் கிடைக்கிறது: (1) உறுப்பினர் வாங்கிக்கொள்ளும் பங்கு, (2) நாளடைவில் கிடைக்

கும் இலாபத்தை அங்கேயே உறுப்பினர் விட்டு வைப்பதால் கிடைக்கும் பணம், அல்லது இலாபத்தைக்கொண்டு உறுப்பினர் மேலும் பங்குகளை வாங்குவதால் கிடைக்கும் பணம், (3) உறுப்பினர்கள் கடனாகக் கொடுக்கும் பணம்.

இவைகளில் பங்கு விற்பனையால் கிடைக்கும் பணம் மிகக் குறைவே. இங்கிலாந்து தேசத்திலே பலர் இலாபப் பணத்தை வாங்கிச் செலவிடாமல் விட்டு வைப்பதால், பெருத்த தொகை கிடைக்கிறது. ஸ்விட்ஜர்லந்து தேசத்திலே கடனாக உறுப்பினர்களிடம் வாங்கும் பணம் அதிகம்.

எந்தக் கூட்டுறவு ஸ்தாபனத்திலும் பங்குத் தொகைக்கு ஏற்றவாறு இலாபம் கொடுப்பதில்லை. அப்படிப் பங்குத்தொகைக் கணக்கின்படி கொடுத்தால், அது கூட்டுறவு முறைக்கு மாறுபட்டதாகும்.

அநேகமாக எல்லா நாடுகளிலும் பங்குத் தொகைக்கு வட்டி கொடுக்கப்படுகிறது. ஆனால், ஜெர்மனியில் மாத்திரம் பங்குத் தொகைக்கு வட்டி கொடுப்பதில்லை. "ஓர் உறுப்பினர் பண்டசாலையிலே தான் வாங்குவதென்ற நியதி வைத்திருந்தால், இலாபம் எப்படியும் கிடைக்கிறது. ஆகவே, வேறு வகையாக ஏன் பணம் கொடுக்க வேண்டும்?" என்று அந்நாட்டில் கூறுகின்றனர். இந்தப் பண்டசாலைகளில் சாமான் வாங்காவிட்டால் மட்டுந்தான் எந்தப் பிரயோசனத்தையும் அடைய முடியாது என்று எண்ணும் உறுப்பினர், அங்கேயே சாமான்களை வாங்காமலிரார் அல்லவா?

மேலும், கூட்டுறவு ஸ்தாபனங்கள் அதிக முதலை விரும்பவில்லை. தங்கட்கு அப்போதைக் கப்போது வேண்டிய சாமான்களை வாங்குவதற்குப் போதுமான தொகையைவிட அதிக தொகை இருப்பதால், அவைகட்கு விசேஷ சௌகரியம் ஒன்றும் இல்லை.

---

## 5. கூட்டுறவுப் பண்டசாலைகளின் கூட்டமைப்புகள்

பல கூட்டுறவு ஸ்தாபனங்கள் ஒரு நாட்டிலே அமைக்கப் பெற்றதும், அவைகள் பல ஒன்று சேர்ந்து **பிடரேஷன் (Federation)** என்னும் கூட்டமைப்புகளை ஏற்படுத்துகின்றன. இக்கூட்டமைப்புகள், கூட்டுறவு ஸ்தாபனங்களை ஒன்று சேர்த்து, கூட்டுறவுக் கொள்கையைப் பரப்புவதற்குப் பெரிதும் உபயோகமாய் இருக்கின்றன. மேலும், இவை, பல ஸ்தாபனங்கட்கும் வேண்டிய பண்டங்களை வாங்குவதற்கும், அவைகளைச் செய்துகொள்வதற்கும் உபயோகமாகவும் இருக்கின்றன.

### (1) கூட்டுறவு ஐக்கியச் சபைகள் (Co-perative unions)

இவை முக்கியமாக எல்லாச் சங்கங்களிடையேயும் ஐக்கிய பாவத்தை விருத்தி செய்வதற்காகவே ஏற்படுத்தப்படுகின்றன. இவை ஒற்றுமை உணர்ச்சியைப் பரப்புவதற்குப் பெரிதும் அநுகூலமாய் இருக்கின்றன. எல்லாச் சங்கங்கட்கும் வேண்டிய

எல்லாவித விஷயங்களையும் இச்சபைகள் தெரிவிக்கின்றன; பல புத்தகங்கள், துண்டுப் பிரசுரங்கள் முதலியவைகளை வெளியிடுகின்றன. கூட்டுறவு இயக்கத்திற்குத் தேவையான அத்தனை பிரசாரத்தையும் இச்சபைகள் செய்கின்றன. கூட்டுறவு இயக்கத்தின் வளர்ச்சி இச்சபைகளால் மிகவும் முந்துகிறது.

இங்கிலாந்தில் இச்சபைகள் மிகவும் அரிய வேலையைச் செய்திருக்கின்றன. இட்டாலி, ஸ்விட்ஜர்லந்து முதலிய தேசங்களில் கூட்டுறவு இயக்கமானது இச்சபைகள் அமைக்கப்பட்ட பிறகுதான் விசேஷமாகப் பெருக ஆரம்பித்தது.

பெல்ஜியத்திலே, அரசியல் கட்சிகளின் வேறுபாடுகளால், வலுவான ஐக்கியச் சபைகள் ஏற்படுவதற்கு இடமில்லாமல் இருக்கிறது.

இச்சபைகள் பார்லிமெண்டு (Parliamentary) முறையில் அமைக்கப்பட்டிருக்கின்றன. வருஷத்திற்கு ஒருமுறை கூட்டுறவுக் காங்கிரஸ் (மகாநாடு) கூடும்போது பல கமிட்டிகள் நியமிக்கப்பெறுகின்றன. அவைகளே அடுத்த காங்கிரஸ் கூடும்வரையில் கூட்டுறவு விவகாரங்களைக் கவனிக்கின்றன.

இந்தச் சபைகள், தங்களுடைய செலவுக்குப் பல சங்கங்களிடமிருந்தும் சந்தாத் தொகையைப் பெறுகின்றன. பல சங்கங்களைத் தன்னுள்ளடக்கிய ஐக்கியச் சபைக்கு இயற்கையிலேயே அதிக பணம் கிடைக்கிறது. சில சபைகள், மொத்த வியாபாரத் தொகையில் நூற்றுக்கு இவ்வளவு என்று கூட்டுற

வுச் சங்கங்களிடமிருந்து பணம் பெறுகின்றன. சங்கத்தில் அங்கத்தினர் எத்தனை பேருண்டோ, அவர்களில் ஆளுக்கு இவ்வளவு என்று குறித்துச் சில சபைகள் சந்தாவை வசூலிக்கின்றன.

(2) சாமான் வாங்கும் கூட்டமைப்புகள்

இந்தக் கூட்டமைப்புகள் (Federations) சாமான்களை மொத்தமாக வாங்குவதற்காக அமைக்கப்படுகின்றன. சாமான்களை மொத்தமாக வாங்குவதால், அநேக சௌகரியங்கள் இருக்கின்றன. பல தனிப்பட்ட மனிதர் ஒன்று சேர்ந்து சாமான்களை வாங்குவதில் எப்படிச் சௌகரியம் உண்டோ, அதே மாதிரி, பல சங்கங்கள் ஒன்று சேர்ந்து தங்கட்கு வேண்டிய சாமான்களை வாங்கினால், விசேஷ இலாபம் உண்டாகும் அல்லவா?

இந்தக் கூட்டமைப்புகள் சிறிய சங்கங்களை ஏற்படுத்த உதவியாய் இருக்கின்றன. பெரிய சங்கங்களுக்குள்ள சௌகரியங்களெல்லாம் இக்கூட்டமைப்புகளால் சிறிய சங்கங்கட்கும் கிடைக்கின்றன.

இந்தக் கூட்டமைப்புகள், தவறான முறையில் கமிஷன்கள் கொடுக்கும் வழக்கத்தை ஒழித்து விட்டன.

ஒரு சமயம் மொத்த வியாபாரிகளும், பொருள் உற்பத்தி செய்பவர்களும் சிறிய கூட்டுறவு ஸ்தாபனங்கட்கு உதவி செய்யாமல் பகிஷ்காரம் செய்யலாம். அம்மாதிரியான கஷ்டம் ஒன்றும் ஏற்படாது கூட்டுறவு ஸ்தாபனங்களைக் காப்பவை இக்கூட்டமைப்புகளாகும்.

ஒவ்வொரு கூட்டுறவுச் சங்கமும் தனக்கு வேண்டிய சாமான்களை உற்பத்தி செய்துகொள்வ தென்பது சிரமமான காரியம். பல கூட்டுறவு ஸ்தா பனங்கள் சேர்ந்த கூட்டமைப்புகளோ, பெருவாரி யான பண்டங்களை உற்பத்தி செய்ய வேண்டி இருப்பதால், அப்பண்டங்களை உற்பத்தி செய்வ தற்கு வேண்டிய தொழிற்சாலைகளை ஏற்படுத்திக் கொள்ளக்கூடும்.

மேலும், கூட்டுறவுப் பிரசாரம் முதலிய வேலை களைச் செய்வதில் பல தனிப்பட்ட சங்கங்கள் ஒன்று சேர்ந்து வேலை செய்வதால், வேலை செவ்வையாக நடக்கக் கூடுமல்லவா ?

மொத்தமாகச் சாமான்களை வாங்குவதற்கான இக்கூட்டமைப்புகள் பல வேறு வகையாக அமைக் கப் பெறலாம்:

### (க) ஏஜென்ஸி (Agency)

இந்த ஸ்தாபனம் கூட்டுறவுச் சங்கங்கட்கு விசேஷமான உதவியைச் செய்ய முடியாது. இம் மாதிரியான ஸ்தாபனத்துக்குச் செலவும் குறைவு. இதற்குக் கிடங்கு முதலியவைகள் அவசியமில்லை ; ஓர் ஆபீஸ் இருந்தால் போதும். இது பல சங்கங் கட்குத் தேவையான சாமான்களை மொத்த வியா பாரிகளிடமிருந்து வாங்கிக் கொடுத்துவிடலாம்.

### (உ) சிண்டிகேட்டு (Syndicate)

இது பல சங்கங்கட்கும் வேண்டிய பொருள் களையெல்லாம் ஒன்றுசேர்த்து மொத்தமாகத் தன்

பெயரால் வாங்கி, பல சங்கங்கட்கும் கொடுக்கிறது. சில சமயங்களில் சாமான் விலை நயமாய் இருந்தால், சாமான்களை வாங்கிக் கட்டுக்கடை (Stock) செய்கிறது. முதலாவது ஸ்தாபனத்தைவிட இதை ஒரு படி முன்னேறியதாகக் கருத வேண்டும். இதற்கு முதல் (Capital) தேவை.

## (ரு) மொத்த வியாபாரச் சங்கம் (Whole sale Society)

இது கூட்டுறவுச் சங்கங்களின் கூட்டுச் சங்கமாகும். அதாவது, இதனைப் பல கூட்டுறவுச் சங்கங்கள் சேர்ந்து ஏற்படுத்துகின்றன. இதனுடைய பங்குகளைக் கூட்டுறவுச் சங்கங்கள் வாங்குகின்றன. தங்கட்கு வேண்டிய சாமான்கள் அனைத்தையும் இவைகளிடமிருந்தே கூட்டுறவுச் சங்கங்கள் வாங்குகின்றன. இவை தங்களுக்கு வேண்டிய சாமான்களைப் பொருள் உற்பத்தி செய்வோர்களிடமிருந்து (Producers) நேரே வாங்குகின்றன. அல்லது, தாங்களே தொழிற்சாலைகளை வைத்து நடத்திச் சாமான்களை உற்பத்தி செய்கின்றன.

இவை தங்கட்கு வருகிற இலாபத்தைத் தங்களிடம் சாமான் வாங்கும் சங்கங்கட்குப் பகிர்ந்து கொடுக்கின்றன. ஒரு சங்கம் எவ்வளவு சாமான்களை வாங்கி இருக்கிறதோ, அதற்கேற்றபடிதான் இலாபத்தில் அதற்குப் பங்கு கிடைக்கும்.

மொத்த வியாபாரச் சங்கங்களிற் சில மிகப் பெரியவை. அவைகளின் முதல் அதிகம். அவை

கட்கு அநேக பண்டசாலைகள் இருக்கின்றன. அவைகளில் நூற்றுக்கணக்கானவர் வேலை செய்கின்றனர்.

இந்த மொத்த வியாபாரச் சங்கங்களில் உலகத்திலேயே மிகப் பெரியது இங்கிலாந்திலுள்ள கூட்டுறவு மொத்த வியாபாரச் சங்கமாகும் (C. W. S.).

இந்த மொத்த வியாபாரச் சங்கங்கட்கு முதல் தொகை இரண்டு விதமாகக் கிடைக்கிறது. அவை, (1) பல கூட்டுறவுச் சங்கங்களும் வாங்கிக்கொள்ளும் பங்குகளின் மூலம் வரும் தொகை, (2) பல கூட்டுறவுச் சங்கங்களிடமிருந்தும் கடனைப் பெறும் பணம் என்பன.

இங்கிலீஷ் மொத்த வியாபாரச் சங்கத்துக்கு அடுத்தபடியாக இருப்பது ஸ்காட்லந்தில் **கிளாஸ்கோ** நகரத்தில் இருக்கும் மொத்த வியாபாரச் சங்கம். அதற்கு அடுத்தபடியான பெரிய மொத்த வியாபாரச் சங்கம் ஜெர்மனியில் **ஹாம்பர்கு** (Hamburg) நகரத்தில் இருப்பதாகும்.

ஒவ்வொரு தேசத்திலும் உள்ள மொத்தத் தேசீயக் கூட்டமைப்புகள் (National Federations) எல்லாம் ஒன்று சேர்ந்து, அகில உலகக் கூட்டுறவு ஸ்தாபனம் ஒன்றை ஏற்படுத்தக் கூடுமல்லவா? அவ்வித முயற்சி ஒரு சிறிது செய்யப்பட்டிருக்கிறது. **அகில உலகக் கூட்டுறவுச் சேர்க்கை** (International Co-operative Alliance) என்பது அந்த ஸ்தாபனத்தின் பெயராகும். அது கூட்டுறவு சம்பந்த

மான எல்லா விஷயங்களையும் ஒன்றாகத் திரட்டி, எல்லோருக்கும் பயன்படச் செய்து வருகிறது. அது எல்லாத் தேசத்திலுமுள்ள எல்லாவிதக் கூட்டுறவு ஸ்தாபனங்கட்கும் பொதுவாய் இருக்கும் ஓர் அமைப்பாகும்.

---

## 6. கூட்டுறவுப் பண்டசாலைகளும் வியாபாரிகளும்

கூட்டுறவுப் பண்டசாலைகள் வளர்ந்தோங்க ஆரம்பிப்பதைக் கண்டு வியாபாரிகள் மனம் புழுங்குகின்றார்கள். இப்பண்டசாலைகள் தங்கள் பிழைப்புக்கே உலை வைப்பதாக அவர்கள் எண்ணுகின்றார்கள்; ஆதலால், கூட்டுறவு இயக்கம் பரவவொட்டாது தடுக்க விரும்புகின்றார்கள்.

கூட்டுறவு ஸ்தாபன நடை முறையில் ஜனங்களுடைய கவனத்தை மிகவும் இழுப்பது இலாபத்தில் பங்கு கொடுப்பதேயாகும். எனவே, வியாபாரிகளும் தங்களிடம் சாமான் வாங்குபவர்கட்கு 100க்கு இவ்வளவு வீதம் என்று ஒரு கணக்கின்படி இலாபச் சீட்டுகளைக் கொடுக்கிறார்கள். சீட்டைப் பெற்றவர்கள் அவைகளைக் கொண்டு வேண்டிய சாமான்களை வாங்கிக்கொள்ளலாம். இந்த முறையை அநுஷ்டிப்பதால், கூட்டுறவு ஸ்தாபனங்களுடன் அவர்கள் போட்டி போடுகிறார்கள்.

சில தேசங்களில் கூட்டுறவு ஸ்தாபனங்களில் அரசாங்க உத்தியோகம் பார்ப்பவர்கள் உறுப்பி

ணர்களாக இருக்கக் கூடாதெனச் சட்டம் ஏற்ப டுத்த இந்த வியாபாரிகள் முயற்சி செய்கின்றார்கள். ஜெர்மனி, ஸ்விட்ஜர்லந்து, பிரான்சு தேசங்களில் அரச சேவையில் இருப்பவர்கள் கூட்டுறவு ஸ்தா பன நிருவாக உறுப்பினர்களாய் இருக்கக் கூடா தென்ற தடை இருக்கிறது.

இந்த வியாபாரிகள் தங்களுக்குப் போட்டி யாகக் கூட்டுறவு ஸ்தாபனங்கள் வெளியாருக்கு (அதாவது அங்கத்தினர்களல்லாதவர்கட்கு) விற்கக் கூடாதெனக் கிளர்ச்சி செய்கின்றார்கள். அதன் பயனாக ஜெர்மனியில் கூட்டுறவு ஸ்தாபனங்கள் வெளியாருக்கு விற்கலாகாதென்ற விதி இருக் கிறது. ஹங்கேரியில் கூட்டுறவுப் பண்டசாலையைப் பலருடைய கண்ணுக்குப் புலப்படும்படியாக வெளிப் படையாகக்கூட வைக்கப்படாதாம்.

சில இடங்களில், "கூட்டுறவு ஸ்தாபனங் களுக்கு விசேஷ சலுகை காட்டக்கூடாது; மற்ற வியாபார நிலையங்கட்கு உள்ள விதிகள் நிபந்தனை கள் முதலியவை கூட்டுறவு ஸ்தாபனத்துக்கும் இருக்க வேண்டும்," என்று வியாபாரிகள் கூச்சலிடு கின்றார்கள். இதனால், பிரஞ்சு சட்டம் கூட்டுறவு ஸ்தாபனங்களைச் சாதாரண வர்த்தக நிலையங்களைப் போலவே மதிக்கிறது.

இவ்விதப் போட்டிகளுக்கிடையேயும் கூட்டுற வுப் பண்டசாலைகள் விருத்தியடைந்தே வருகின் றன. ஆனால், இப்பண்டசாலைகளின் எண் ணிக்கை பெருகிக்கொண்டே வரும் நாடுகளிற்கூட,

தனிப்பட்ட சில்லறைக் கடைக்காரர்கள் இருந்து வருகின்றார்கள்.

ஒருகால் கூட்டுறவு இயக்கம் சில்லறைக் கடைக்காரர்கட்குக் கஷ்டத்தை உண்டுபண்ணினாலும், அதற்காக என் செய்வது ? எந்த மாறுதலும் சீர்திருத்தமும் ஏற்படும்போது அதனால் சிலருக்கு அசௌகரியம் உண்டாகலாம். அதற்காக மாறுதலே கூடாதென்று கூற முடியுமா? ஆயிரக்கணக்கான சிறு சிறு வியாபாரிகள் இலாபத்திற்கெனவே கடைகள் நடத்த, அவைகளிலிருந்து சாமான்களை வாங்கி உபயோகிப்பதைவிட, மிகச் சிக்கனமான முறையில் தாங்களே நடத்தும், தாங்களே இலாபத்தை அடைய உதவும், கூட்டுறவு ஸ்தாபனங்களில் பண்டங்களைக் கொள்வது பல விதத்திலும் சிறப்பும் சௌகரியமும் தருவதல்லவா?

---

## 7. அரசாங்கமும் கூட்டுறவுப் பண்டசாலைகளும்

கூட்டுறவுப் பண்டசாலைக்கு அரசாங்கம் பல வகையாக உதவி செய்யலாம். புரபசர் ஜீடு (Prof. Gide) என்பவர் அவைகளில் முக்கியமானவைகளைக் குறிப்பிட்டிருக்கிறார்:

(1) ஒரு கூட்டுறவு ஸ்தாபனத்தை அமைக்க வேண்டுமானால், அநேக நிபந்தனைகள் இருத்தல் கூடாது ; சுலபத்தில் ஏற்பாடு செய்ய வசதி வேண்டும்.

(2) அதில் சேர்ந்திருப்பவர்களுக்கு நஷ்டம் வந்தால், அதிகமாகக் கையைக் கடிக்கும்படி இருக்கக் கூடாது. சங்கத்திற்கு நஷ்டம் உண்டானால், தங்கள் சொந்தச் சொத்திலிருந்து ஈடுபண்ண வேண்டிய அவசியம் இருக்கக் கூடாது.

(3) சங்கத்தின் பங்குகள் குறைந்த விலை உடையனவாக இருக்க வேண்டும். சொற்பப் பணத்தைக் கையில் வைத்துள்ளவர்களும் பங்கை வாங்கும்படியாக அது குறைந்த விலைக்குக் கிடைக்க வேண்டும்.

(4) சங்கம் விருத்தியாக ஆக, முதல் தொகையை அதிகமாக்கவும், புதியவர்களாக அங்கத்தினர்கள் சேரச் சேர அவர்கள் சேருவதற்குச் சௌகரியமும், வசதிகளும் இருக்க வேண்டும்.

(5) சட்டக் காரியங்களுக்குச் சங்கமானது ஒரு தனி ஆளாகக் கருதப்பட வேண்டும். அதாவது, சங்கத்தின் காரியங்களையெல்லாம் சங்கத்தின் பெயராலேயே சங்கம் செய்வதற்குச் சௌகரியம் இருத்தல் வேண்டும்.

மேலே கூறப்பட்ட இந்த எல்லாச் சௌகரியங்களையும் அரசாங்கத்தினர் செய்து கொடுக்க வேண்டும். இக்காரியங்கள் பூர்த்தி ஆவதற்கு அநுகூலமான சட்டங்களை அரசாங்கம் செய்து கொடுக்க வேண்டும். நடை முறையில் அநேகமாக எல்லா அரசாங்கமும் கூட்டுறவு இயக்கத்திற்குச் சாதகமாகவே இருக்கின்றன.

இந்தச் சௌகரியங்களையெல்லாம் கூட்டுறவு ஸ்தாபனங்கள் பயன்படுத்திக்கொள்ளுகின்றன. அஃது எப்படி என்பதை மேலே பார்ப்போம் :

முன் கூறியபடி கூட்டுறவு ஸ்தாபனங்களின் பங்குத் தொகையெல்லாம் மிகவும் குறைவாகவே இருக்கின்றன. அந்தத் தொகை முழுவதுங்கூட ஒரே தடவையிற் கொடுக்க வேண்டுமென்ற அவசிய மில்லை. கொஞ்சங் கொஞ்சமாகப் பல தடவை பணங் கொடுத்து, ஒரு பங்கை யாரும வாங்கிக் கொள்ளலாம்.

ஒரு கூட்டுறவு ஸ்தாபனம் எத்தனை பங்கை வேண்டுமானாலும் விற்கலாம். மொத்தம் இத்தனை பங்குக்குமேல் விற்கக்கூடாதென்ற நிபந்தனை இல்லை. கம்பெனிகளோ ஒரு குறித்த எண்ணிக்கை உள்ள பங்குகளைத்தான் விற்கலாம் என்னும் வரை யறை இருக்கிறது. எனவே, கூட்டுறவுச் சங்கத்தில் எத்தனை பேர் வேண்டுமானாலும் சேரக்கூடும்.

கூட்டுறவு ஸ்தாபனங்களில் சேர இன்னொரு வசதியும் இருக்கிறது: கூட்டுறவு ஸ்தாபனத்தின் பங்கு விலை எப்போதும் ஒன்றுதான். அதன் விலை, மற்றக் கம்பெனியின் பங்கு விலைகளைப் போல, உயருவதும் இல்லை; குறைவதும் இல்லை. 5 ரூபாய்ப் பங்கு விலை எப்போதும் 5 ரூபாய்தான்; 10 ரூபாய்ப் பங்கு எப்போதும் பத்து ரூபாய்தான்.

மூலதனம் அதிகமாகச் சேர்ந்ததும், அங்கத்தி னர் சங்கத்தைக் கலைத்து, இலாபத்தைப் பங்கிட் டுக்கொள்ளாமல் இருப்பதற்காகச் சில நிபந்தனை

கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. அவற்றில் முக்கியமானது, அப்படி ஒரு சமயம் ஒரு சங்கத்தைக் கலைக்க நேரிட்டால், அதன் பொருளையெல்லாம் (பங்குத் தொகையைத் தவிர) வேறு சங்கத்துக்காவது, கூட்டுறவு ஐக்கியச் சபைக்காவது, அல்லது வேறு ஸ்தாபனத்துக்காவது கொடுக்க வேண்டும் என்னும் நிபந்தனையாகும்.

---

## 8. கூட்டுறவுப் பண்டசாலையின் தொழிற்சாலைகள்

கூட்டுறவுப் பண்டசாலைகள் சிறிது வலுத்த பிறகு தங்கட்கு வேண்டிய சாமான்களிற் பெரும் பாலனவற்றைத் தங்கள் தொழிற்சாலைகளில் தாங்களே செய்துகொள்ள விரும்புகின்றன. இதனால், சாமான்களின் விலை குறைகிறது. அதுவுமல்லாமல், இம்முறையால் நாளடைவில் பொருளுற்பத்தி ஸ்தாபனங்களெல்லாம் கூட்டுறவு ஸ்தாபனங்களாக மாறக் கூடும்.

ஒவ்வொரு தனிக் கூட்டுறவுப் பண்டசாலையும் தனக்கு வேண்டிய சாமான்களைத் தானே செய்து கொள்வது கஷ்டம். ஆனால், பல பண்டசாலைகள் சேர்ந்த கூட்டுறவு மொத்தச் சங்கம் (Co-operative Wholesale Society) பல பண்டசாலைகட்கும் வேண்டிய சாமான்களை உற்பத்தி செய்யலாம். கூட்டுறவு மொத்தச் சங்கம் தொழிற்சாலைகளின் மூலம் சாமான்களை உற்பத்தி செய்வதல்லாமல், மூலப்

பொருள்களையும் (Raw materials) உற்பத்தி செய்ய விரும்புகின்றன; தங்கட்கு வேண்டிய காப்பிக் கொட்டை, தேயிலை முதலிய விவசாயப் பொருள்களைத் தங்கள் பண்ணைகளிலேயே விளைவிக்கின்றன. பல மொத்தச் சங்கங்களுக்குச் சொந்தப் பண்ணை நிலங்கள் இருக்கின்றன. பெரும்பாலும் அவைகளில் நல்ல இலாபம் கிடைக்கிறது. இங்கிலாந்தின் மொத்தச் சங்கத்திற்கு (C. W. S.) இலங்கையில் தேயிலைத் தோட்டங்களும், இந்தியாவில் காப்பித் தோட்டங்களும் இருக்கின்றன.

சில இடங்களில் பொருள் செய்வோரின் கூட்டுறவுத் தொழிற்சாலை (Workshops of Producers)கள் இருக்கின்றன. அந்தத் தொழிற்சாலையினர் தமக்குப் போட்டியாக இந்தக் கூட்டுறவு மொத்தச் சங்கங்களின் தொழிற்சாலைகள் இருக்கின்றன என எண்ணுகின்றனர். ஆனால், உண்மையில் அவ்வித எண்ணம் இருக்க வேண்டுவதில்லை. மேலும் இப்போதுள்ள நிலையில் தொழிலாளர்கள் ஏற்படுத்தியுள்ள கூட்டுறவுத் தொழிற்சாலைகள் அவ்வளவு வெற்றிகரமாக நடக்கவில்லை.

கூட்டுறவுப் பண்டசாலையின் தொழிற்சாலைகளில், தொழிலாளர்களை மற்றத் தொழிற்சாலைகளில் நடத்துவது போலவேதான் நடத்துகிறார்களென்று தொழிலாளர்கள் குறை கூறுகிறார்கள். அநேக கூட்டுறவுத் தொழிற்சாலைகளில் நல்ல கூலியே தரப்படுகிறது. கூட்டுறவுத் தொழிற்சாலைகள் இலாபத்தை உத்தேசித்து நடத்தப்படவில்லை

ஆதலால், அவைகளில் வேலை செய்யும் தொழிலாளிகள், வேலை நிறுத்தம் முதலிய கோளாறுகளைப் புகுத்துவது சரியன்று.

---

## 9. கூட்டுறவுப் பண்டசாலைகள் செவ்வையாக நடப்பதற்கு ஆதாரங்கள்

இப்பண்டசாலைகள் நன்றாக நடப்பதற்கு உறுப்பினர்கள் திறமைசாலிகளாய் இருக்க வேண்டும். அவர்களுக்குக் கணக்கு வழக்குகளைச் செவ்வையாக வைக்கத் தெரிய வேண்டும். சில பண்டசாலைகள் அழிந்து போவதன் காரணம், கணக்கு வழக்குகளைச் சரியாக வைக்காததே. தொழிலாளிகளாக நடத்தும் கூட்டுறவுப் பண்டசாலைகளில் சில இடங்களில் அவர்கட்குக் கணக்குகளைச் சரியாக வைத்துக் கொள்ளத் தெரியவில்லை. குமாஸ்தாக்கள், சிறு உத்தியோகத்தினர் முதலியோர் அங்கத்தினராய் இருக்கும் ஸ்தாபனங்களில் இக்குறைபாடு இல்லை.

கூட்டுறவு ஸ்தாபனங்களின் அங்கத்தினர் விசுவாச காதகர்களாய் இருக்கக்கூடாது. அவர்கள் கூட்டுறவுப் பண்டசாலைகள் மூலமாகவே எல்லாச் சாமான்களையும் வாங்க வேண்டுமேயொழிய, வேறு வழியாக வாங்கக்கூடாது.

சில இடங்களில் ஒன்றுக்கொன்று போட்டியாகக் கூட்டுறவுப் பண்டசாலைகள் இருக்கின்றன. அப்படியிருந்தால் கஷ்டம் வந்தே தீரும்.

கூட்டுறவு ஸ்தாபனங்கட்குப் போட்டியாகப் பெரிய வர்த்தக ஸ்தாபனங்கள் இருந்தால், அப்போதும் கூட்டுறவு ஸ்தாபனங்கட்கு அசௌகரியம் ஏற்படும்.

மேலும், சிற்சில நாட்டினரிடையே கூட்டுறவு இயக்கம் சுலபத்தில் பரவிவிடுகிறது. சிற்சில இடங்களில் ஒரு வகைக் கூட்டுறவு ஸ்தாபனங்களே மிகவும் விரும்பப்படுகின்றன. அவை ஒரோ வழி, அத்தேச மக்களின் தன்மையைப் பொறுத்தவை.

ஒரே தொழிலில் இருக்கும் பலர் ஒன்று சேர்ந்து கூட்டுறவுச் சங்கங்கள் அமைக்க விரும்புகின்றனர். ஆனால், பல வகைத் தொழிலிலும் ஈடுபட்டவர்கள் சேர்ந்து வைக்கும் சங்கங்களே சிறந்தவை.

சில இடங்களில் கூட்டுறவு இயக்கத்திடையே அரசியல் கட்சிகளின் அபிப்பிராயங்கள் புகுந்து, அவற்றால் பிளவுகள் ஏற்படுகின்றன.

இககூட்டுறவுப் பண்டசாலைகள் கிராமங்களை விடப் பட்டினங்களிலும், தொழிற்சாலைகள் உள்ள இடங்களிலும் மிகவும் பலரால் விரும்பப்படுகின்றன.

---

## 10. இந்தியாவில் கூட்டுறவுப் பண்டசாலைகள்

கூட்டுறவுப் பண்டசாலைகள் நம் நாட்டில் விசேஷமாகப் பரவவில்லை. சென்னையிலேதான் இப்பண்டசாலை நன்றாகச் செழித்து வளர்ந்து இருக்கிறது.

இப்பண்டசாலைகள் பம்பாய், ஐக்கிய மாகாணங்கள் முதலிய இடங்களிலும் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன.

இந்திய கூட்டுறவுப் பண்டசாலைகளில் மிக முக்கியமானதாகிய திருவல்லிக்கேணிக் கூட்டுறவு மளிகையின் வரலாற்றைக் கவனிப்போம் :

## (1) திருவல்லிக்கேணிக் கூட்டுறவு மளிகை

(திருவல்லிக்கேணி அர்பன் குவாப்பரேட்டிவ் சுசைட்டி லிமிடெட்)

இந்தியாவிலேயே மிகப் பெரிய கூட்டுறவுப் பண்டசாலை சென்னைத் திருவல்லிக்கேணியில் இருப்பதாகும். இது மிகச் சாதாரண ஆரம்பத்திலிருந்து இப்போது பெரிய நிலையை அடைந்திருக்கிறது.

முதலில் அரசியல் விஷயங்களையும், பின் கூட்டுறவு முறைகளையும் பற்றி அடிக்கடி பேசிக்கொண்டு வந்த சிலர், 1904-ஆம் வருஷத்தில் இதை ஏற்படுத்தினர். முதலில் இதற்கெனக் கூடிய கூட்டத்தில் சில உற்சாகர்கள் ஒரு பண்டசாலையை ஏற்படுத்துவதென முடிவு செய்தார்கள். அவர்கள் நடை முறைக்கு மிக அவசியமான சுமார் பத்துப் பன்னிரண்டு விதிகளை நிர்ணயித்துக்கொண்டார்கள். சுமார் 310 ரூபாய் முதலாகத் தேடினார்கள்; பலர் பரிகசித்த போதிலும் மிக்க உற்சாகத்துடன் ஒரு பண்டசாலையைத் திறந்து வைத்தார்கள்.

முதன்முதல் ஒரு குமாஸ்தாவையும், ஒரு கையாளையும், ஆளுக்கு எட்டு ரூபாய்ச் சம்பளத்திற்கு அவர்கள் நியமித்தார்கள். அவர்களில் ஒரு

வர் ஒரு செட்டியார். அவருடைய உதவியால் சாமான்களைச் சௌகரியமாக வாங்க முடிந்தது. முதல் நாளில் 90—9—8 பைசாவுக்கு வியாபாரம் நடந்தது. அதைக் கண்டதும் அந்தக் கூட்டுறவுப் பித்தர்கள் அடைந்த சந்தோஷத்திற்கு அளவே இல்லை.

நாளடைவில் சிலர் சிலராகப் பலர் வந்து சேர்ந்தனர். வியாபாரம் வலுக்க ஆரம்பித்தது. எனினும், ஆரம்ப காலத்தில் அந்தப் பண்டசாலையில் சம்பந்தப்பட்டவர்களெல்லாம் மிகவும் கவலையுடன் இருந்தார்கள்; சலிக்காமல் உழைத்தார்கள்; மனந்தளராது வேலை செய்தார்கள். ஒவ்வோர் அங்கத்தினரும் ஒழிந்த நேரத்தில் அங்கே போயிருந்து வேலை செய்தனர்.

இப்படியெல்லாம் அவர்கள்பட்ட கஷ்டத்தின் பயனாக இப்போது அப்பண்டசாலை இந்தியாவிலேயே மிகப் பெரியதும், சிறந்ததுமாய் விளங்கி வருகிறது.

1905-ஆம் வருஷத்திலே அப்பண்டசாலையைச் சேர்ந்தவர்கள் பெருமுயற்சிசெய்து, 1904-ஆம் வருஷக் கூட்டுறவுச் சட்டத்தின் 21-ஆம் பிரிவின் கீழ் ரிஜிஸ்தர் செய்துகொண்டார்கள்.

அப்பண்டசாலைக்கு இப்போது சென்னை நகரிலே 26 கிளைகள் இருக்கின்றன. அப்பண்டசாலை, சென்னை நகரிலே மாதந்தோறும் சுமார் 75 ஆயிரம் ரூபாய் பெறுமான சாமான்களை விற்பனை செய்கின்றது. 1938-ஆம் வருஷம் டிசம்பர் மாதம்

எடுத்த கணக்கின்படி அதன் உறுப்பினரின் தொகை 5865 ஆகும்.

(2) மற்றவை

மைசூர் அரசாங்கத்திலே கூட்டுறவுப் பண்டசாலைகள் சில காணப்படுகின்றன. பெங்களூர் சிட்டி (City) ஸ்டோர் அவைகளில் முக்கியமானது. இந்த நாட்டிலே அரசினரும், மில்கள், இரயில்வே முதலியவைகளும் ஆதரவளிப்பதாலேதான் இப்பண்டசாலைகள் விசேஷமாக விருத்தியடைகின்றன.

அநேக கல்லூரி மாணவர்களும் பள்ளிக்கூட வித்தியார்த்திகளும் கூட்டுறவுப் பண்டசாலைகளைத் தங்கள் கல்வி நிலையங்களிலே ஏற்படுத்திக்கொண்டு இருக்கின்றூர்கள். இவ்வகைப் பண்டசாலைகள் பெரும்பாலும் நன்ருகவே நடைபெற்று வருகின்றன.



## 11. பொருள் நுகர்வோரின் கூட்டுறவு ஸ்தாபனங்களில் பல்வேறு வகை

## (Various types of Consumers' Societies)

பொருள் நுகர்வோரின் கூட்டுறவு ஸ்தாபனங்களில் மிகவும் முக்கியமானது கூட்டுறவுப் பண்டசாலையாகும். இதையன்றி இன்னும் பல வகை ஸ்தாபனங்களும் இருக்கின்றன.

இந்த ஸ்தாபனங்கள் இரண்டு வகைப்படும்: ஒன்று, குறித்த ஒரு காரியத்திற்காக ஏற்படுத்தப்

பட்டது. மற்ருென்று, பல காரியத்திற்காக ஏற் படுத்தப்பட்டது. இவைகளில் பல காரியங்கட்கென ஏற்படுத்தப்பட்ட ஸ்தாபனங்களே மிகவும் விரும் பப்படுகின்றன.

## (1) மளிகைக் கடைகள்

மளிகைச் சாமான்களே விற்கும் கடைகளே கூட்டுறவு ஸ்தாபனத்தில் அதிகம். இங்கிலாந்தில் ராச்டேல் நெசவாளிகளுங்கூட முதல் முதல் மளி கைச் சாமான்களாலேதான் தங்கள் வியாபாரத் தைத் தொடங்கினுர்கள். ஏனென்ருல், மளிகைச் சாமான்கள் யாவருக்கும் வேண்டுபவைகள். அவை களால் வியாபாரம் செய்வதும் சுலபம்.

புரபசர் ஜீடு (Prof. Gide) இவ்விதக் கடைகள் வைத்து நடத்துவதிலுள்ள சௌகரியங்களே விவர மாகக் கூறியிருக்கிருர். அவை வருமாறு :—

இங்கே விற்கப்படும் சாமான்கள் ஒவ்வொரு வீட்டாருக்கும் நாள்தோறும் வேண்டுபவை; இன்றி யமையாதவை. இவைகளேக் காசு கொடுத்து வாங்க எவரும் தயங்கார்.

இச்சாமான்களே வாங்கி விற்பதில் எவ்வித அசௌகரியமும் இல்லே. இவைகளே வாங்கி விற்ப தற்கு விசேஷ சாமர்த்தியமும் வேண்டுவதில்லே.

இவைகளேச் சுலபமாக வாங்கி வைத்திருக்க லாம். இவை கெட்டுப்போகா. இச்சாமான்கள் நாளாக ஆக எடை முதலியவை அதிகமாகக் குறையா.

பல பண்டங்களை விற்பதால், இரண்டொரு சாமான்களின் விலை மாறுதலால் உண்டாகும் நஷ்டம், மற்றச் சாமான்களின் விற்பனையால் ஈடாகக் கூடும்.

சிறிய முதல் இருந்தாலுங்கூட இந்த வியாபாரங்களை ஆரம்பித்து நடத்த முடியும். நாளடைவில் வியாபாரத்தைப் பெருக்கிக்கொள்ள வேண்டுமானால், இவ்வித வியாபாரத்தில் சௌகரியம் அதிகம்.

இந்தச் சாமான்களிலேதான் கலப்பு அதிகமாய் இருக்கிறது. சுத்தமான கலப்படமற்ற சாமான்களைப் பல கடைகளில் வாங்க முடிவதில்லை. ஆதலால், இந்தச் சாமான்களைச் சுத்தமாக விற்றால் சீக்கிரம் பலருடைய விசுவாசத்தைச் சம்பாதிக்க முடியும்.

வியாபாரத்தில் அதிக அனுபவமில்லாதவர்களுங்கூட இம்மாதிரியான வியாபாரத்தைச் சுலபத்தில் நன்றாக நடத்த முடியும்.

## (2) ரோட்டிக் கிடங்குகள்

மேல் நாடுகளில் நாள்தோறும் ஒவ்வொரு வீட்டினருக்கும் மிக அவசியமானது ரொட்டியாகும். ரொட்டியைத் தயாரிக்கும்போது, கொஞ்சங் கொஞ்சமாகப் பலர் செய்வதைவிட, பெருவாரியாக ரொட்டி தயாரிக்கப்பட்டால், மிகவும் சிக்கனமாகவும் நன்றாகவும் செய்ய முடியும். ஆதலாற்றான், இவை மேனாடுகளில் மிகவும் பரவுகின்றன.

மேலும், ரொட்டி மிகவும் சுகாதார முறையில் தயாரிக்கப்பட வேண்டும். சிறு சிறு ரொட்டிக் கிடங்குகள் மிகச் சுத்தமான, செவ்வையான முறையில் நடப்பது அரிது. எனவே, நல்ல ரொட்டிகளை விரும்பினால், அவைகளைக் கூட்டுறவு ரொட்டி ஸ்தாபனங்களிற்றான் நன்றாகச் செய்ய முடியும்.

இந்த வியாபாரத்தில் அநாவசியமாக அநேக சிறு வியாபாரிகள் ஈடுபட்டிருக்கின்றார்கள். அதனால், சமூகத்திற்கு மொத்தச் செலவு அதிகமாகிறது. கூட்டுறவுக் கிடங்குகளில் ரொட்டிகள் தயாரானால், சமூகத்திற்கே இலாபம் உண்டு.

### (3) சாப்பாட்டு விடுதிகளும் காப்பிக் கிளப்புகளும்

மனிதருக்கு மிகவும் அவசியமானது உணவு. அதனை மிகவும் சுத்தமாகப் பெறுதல் மிக அரிதாய் இருக்கிறது. சாதாரணமாக வியாபார முறையில் நடக்கும் விடுதிகளில் சுத்தமான, சுகந் தரத்தக்க உணவுப் பொருள்கள் கிடைப்பது துர்லபம். மிகச் செவ்வையாக நடைபெறும் மேல்நாட்டு விடுதிகளே திருப்திகரமாக இல்லையென அந்நாட்டினர் எண்ணிக் கூட்டுறவு விடுதிகளையும், கிளப்புகளையும் நடத்த விரும்பினால், அவைகளின் அவசியத்தைப் பற்றி நம் நாட்டில் அதிகமாகக் கூற வேண்டுவதில்லை. நம் நாட்டில் பல கிளப்புகள் மிகவும் ஆபாசமாய் இருக்கின்றன என்று சொல்வதில் சிறிதும் தவறில்லை.

மேலும், இந்தக் கிளப்புகள் பெறும் இலாபமும் மிகவும் அதிகம். உணவுப் பொருள்களின் விலை மாறுதலுக்கேற்ப இவை பண்டங்களின் விலையை மாற்றுவதில்லை. அநேக கிளப்புகளுக்கு 100க்கு 100 இலாபம் கிடைக்கிறது. ஆகவே, இவைகளைக் கூட்டுறவு முறையில் நடத்தினால், சௌகரியமும் இலாபமும் விசேஷமாக உண்டாகும்.

நமது நாட்டில் இவை மிகச் சிலவே உள்ளன. சில ஆபீஸ்களில் அங்கு வேலை செய்பவர்கள் தங்கட்கு வேண்டிய சிற்றுண்டிகளைத் தயாரித்துக் கொள்ளுவதற்குக் கூட்டுறவுக் கிளப்புகளை ஏற்படுத்திக்கொண்டிருக்கிறார்கள். அவை மிகவும் நன்றாக நடைபெறுகின்றன.

## (4) கூட்டுறவு மருந்துக்கடைகள்

இக்காலத்தில் இயற்கையோடொவ்வாத வாழ்க்கையில் மனிதர் அடிக்கடி நோய்வாய்ப்படுவது சகஜமாய் இருக்கிறது. தக்க வீட்டு வசதி, சுகாதார வசதி முதலிய இல்லாத ஏழைகளே அடிக்கடி வைத்தியச் செலவு செய்ய வேண்டி இருக்கிறது. ஆகவே, அவர்கட்கு மருந்துகள் குறைந்த விலைக்குக் கிடைக்குமானால், அதைவிட அவர்கட்கு வேண்டிய சௌகரியம் வேறில்லை.

பொதுவாக மருந்துக்கடைகளில் விசேஷ இலாபம் வருகிறது. ஆகையால், கூட்டுறவு மருந்துக் கடைகளில் அநேகமாக எல்லா மருந்துகளையும்

100க்கு 30 முதல் 60 வீதம் குறைந்த விலைக்குப் பெறலாம்.

**பிரஸ்ஸேல்ஸ், மிலான், ஜினிவா** முதலிய இடங்களில் கூட்டுறவு மருந்துக்கடைகள் இருக்கின்றன. அவை அங்கத்தினரல்லாத வெளியாருக்கும் வியாபாரம் செய்கின்றன. அதனால் வரும் இலாபத்தை எல்லாம் அங்கத்தினர் அடைவதால், ஒவ்வொருவருக்கும் நல்ல இலாபப் பங்கு கிடைக்கிறது.

### (5) கூட்டுறவு வீட்டுச் சங்கங்களும் கூட்டுறவு இன்ஷியூரன்ஸ் சங்கங்களும்

இவைகளும் பொருள் நுகர்வோர் சங்கங்களைச் சார்ந்தவைகளே. இவைகளைப்பற்றி வேறிடத்தில் விவரமாகக் கூறப்படும்.



# கூட்டுறவுப் பாங்குகள்

அநேகமாக எல்லாத் தேசத்திலும் இலாவா தேவிக்காரரின் கொடுமை அதிகமாகவே இருக்கிறது. மிகக் கஷ்டமான காலத்தில் ஏழைகள் கடன் வாங்க வேண்டுமானால், கடு வட்டி கொடுக்காமல் வாங்குவது சாத்தியமாக இல்லை. விவசாயத்திற்கோ, சிறு கைத்தொழில் முயற்சிக்கோ, வேறு எவ்விதச் சம்பாத்திய முயற்சிக்கோ, ஓரளவு பணம் அவசியமாக வேண்டி இருக்கிறது. பொருள் விருத்திக்காகவோ, ஜீவன உபாயத்திற்காகவோ செய்யும் தொழில்களுக்குக் குறைந்த வட்டிக்குப் பணம் கிடைத்தாற்றான், அந்தப் பணம் பயன் உள்ளதாக இருக்கும். முக்கியமாக விவசாயத் தொழிலுக்காக வாங்கும் கடனுக்கு மிகக் குறைவான வட்டிதான் கொடுக்க முடியும். ஏனெனில், விவசாயத்தில் வரும் வரும்படி குறைவு. போட்ட முதலுக்கு மிகக் குறைவாக வட்டி வரும்போது விவசாயிகள், வாங்கிய கடனுக்கு எப்படிக் கடு வட்டி கொடுக்க முடியும்? பட்டின வாசிகளும், சிறு வியாபாரம், கைத்தொழில் முதலியவை செய்பவர்களும் குறைந்த வட்டிக்குப் பணம் பெற்றாலன்றி, அவர்கள் கடன் என்னும் கடலினின்று கரையேறுவது அரிது.

இக்கூட்டுறவுப் பாங்குகள் பணமுடைப்பட்டவர்கட்குக் கடன் குறைந்த வட்டியில் எளிதில் கிடைக்கும்படி செய்கின்றன. இவைகளை 'ஆபத்திலுதவி' என்று கூறலாம்.

---

## 1. கூட்டுறவுப் பாங்குகளின் தோற்றமும் வரலாறும்

கூட்டுறவுப் பாங்குகளின் ஜன்ம பூமி ஜெர்மனித் தேசமாகும். ஜெர்மானிய நாட்டிலேதான் பாங்குகள் கூட்டுறவு முறையில் நடத்தக்கூடும் என்ற உண்மையைக் கண்டு பிடித்து, அவைகளைச் சிறப்புற நடத்திய இரண்டு பேரறிஞர்கள் தோன்றினார்கள். சூல்ஸ் டெலீஷ் (Schulze-Delitzsch) என்பவரும், ரெய்பசின் (Raiffeisen) என்பவரும் இக் கூட்டுறவுப் பாங்குகளின் தந்தைகளாவார்கள். இவர்கள் தோற்றி நடத்திய பாங்குகளின் நடை முறையை ஒட்டியே உலகில் பல நாடுகளிலும் கூட்டுறவு பாங்குகள் அமைக்கப்பெற்றன. இவர்கள் இருவரும் கூட்டுறவுப் பாங்குகளாகிய கப்பல்களுக்கு மாலுமிகளாய் இருந்து அக்கப்பல்களைச் செவ்வையாக நடத்தி, கடனில் அமிழ்ந்து கிடந்த பலர் உயிரைக் காப்பாற்றினர்.

### (க) சூல்ஸ் டெலீஷ் பாங்குகள்

ஹெர் சூல்ஸ் (Herr Schulze) என்பவர் ஜெர்மனித் தேசத்திலே உள்நாட்டில் ஒரு சிறு நியா

யாதிபதியாய் இருந்தார். அக்காலத்தில் அநேக சிறு தொழிலாளிகள், வியாபாரிகளின் கஷ்டநஷ்டங்களை அவர் நேரே கண்டார்; அவர்கட்கு உதவி செய்ய விரும்பினர்.

முதல் முதலில் அவர் அந்தத் தொழிலாளிகட்கு வேண்டிய மூலப் பொருள்களை (Raw materials), அவரவர் கைத்தொழிலுக்கு அவசியமான பொருள்களை வாங்குவதற்கெனக் கூட்டுறவு ஸ்தாபனங்களை ஏற்படுத்தினர்; கூடிய சீக்கிரத்தில் ஒரு பாங்கையும் நிறுவினர். 1850-ஆம் வருஷத்தில் ஏற்படுத்தப்பட்ட கூட்டுறவுப் பாங்கானது ஆல் போலத் தழைக்க ஆரம்பித்தது.

அந்தப் பாங்கில் முதலில் இருந்த பணம் சில தர்ம சிந்தையுள்ள பணக்காரரால் போடப்பட்டதேயாகும். ஆனல், அந்தப் பாங்கில் கடன் வாங்க விரும்புபவரெல்லாம் அதன் பங்கு ஒன்றை வாங்குதல் அவசியமென அவர் ஏற்பாடு செய்தார்; மேலும், அங்குக் கடன் வாங்குபவர்கள் தவருது ஒழுங்காக வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுத்துவிட வேண்டுமெனவும் ஏற்பாடு செய்தார்.

அவர் பேச்சுச் சாதுரியம் உடையவர்; மககளின் மனத்தைக் கவரும் சக்தி உடையவர்; தம் கொள்கையிற் பெரிதும் நம்பிக்கை கொண்டவர். அவருடைய பிரசாரத்திஞலே அக்கூட்டுறவுப் பாங்குகள் பலவிடத்தும் தோன்றலாயின.

அரசாங்கத்தினரின் தொந்தரவால் அவர் சில காலம் வெளியில் இருக்க வேண்டி நேர்ந்தது. அச்

சமயம் அவர் நண்பரும், முதலிலிருந்தே அவருடன் கூடி உழைத்தவருமான டாக்டர் பெர்ன்ஹார்டி (Dr. Bernhardi) என்பவர், அக்கூட்டுறவு இயக்கத்தை வளர்த்தார்.

மக்களுக்கு வேண்டிய சகல காரியங்களையும் அரசாங்கமே கவனிக்க வேண்டும் என்ற எண்ணம் அக்காலத்து அரசாங்கத்தினருக்கு இருந்தது. மக்களுக்கென ஏற்படும் ஸ்தாபனங்கள் அரசாங்கத்தாலேதான் உண்டாக வேண்டும். அம்மாதிரியான காலத்தில் மக்கள் தங்கட்குத் தாங்களே தங்கள் முயற்சியாலேயே உதவி செய்துகொள்ளலாமென்ற கொள்கையை அடிப்படையாகக் கொண்ட ஓர் இயக்கத்தைத் தோற்றுவித்ததற்காக ஹெர் சூல்ஸ் அநேக கஷ்டங்கட்கு உட்பட வேண்டி இருந்தது.

அவருடைய கொள்கை மக்களிடையே பரவுவதைக் கண்டு அசூயை கொண்ட அரசினர், அவரைப் பல வகையிலும் துன்புறுத்தலாயினர். அவர் நோய்க்காக ஓய்வு கேட்ட போது, அந்த ஓய்வைக் கொடுத்து, அவர் தம் சொந்த ஊருக்குப் போகக்கூடாதென்ற தடை உத்தரவையும் அரசினர் பிறப்பித்தனர். அந்தத் தடை உத்தரவை அவர் சட்டை செய்யவில்லை. சட்ட விரோதமெனத் தெரிந்தும், அவர் அதை மீறித் தம் சொந்த ஊருக்குப் போய்ச் சேர்ந்தார். அங்கே ஜனங்கள் அவரை மிக்க மகிழ்ச்சியுடனும் உற்சாகத்துடனும் வரவேற்றார்கள். அதையறிந்த அரசினர், அவருடைய சம்பளத்தில் ஒரு மாதச் சம்பளத்தைப் பிடித்துக்

கொண்டனர். இத்தொல்லைகளையெல்லாம் பொறுக்காத அவர், தம் நியாயாதிபதி பதவியை ராஜீநாமா செய்துவிட்டு, தம் முழுக்காலத்தையும் பொது ஜன நன்மைக்கே செலவிட்டார்.

1859-ஆம் வருஷத்திலே அவர் கூட்டுறவு முதல் காங்கிரஸைக் (கான்பரன்சு) கூட்ட ஏற்பாடு செய்தபோது அரசாங்கம் பல இடைஞ்சல்களைச் செய்தது. ஆனால், அரசாங்கஞ் செய்த இடைஞ்சல்களெல்லாம் கூட்டுறவின் வளர்ச்சிக்கு எவ்விதமான பங்கத்தையும் செய்ய முடியவில்லை. அரசாங்கத்தாரின் தொந்தரவு அதிகமாக அதிகமாக, மக்களின் ஆதரவு விருத்தியடைந்து வந்தது.

கூட்டுறவு ஸ்தாபனங்களைத் தொடங்கிய பலரும் பல பல வகையான உயரிய இலட்சியங்களைக் கொண்டிருந்தனர். சூல்ஸ், மக்களின் நன்னடையை உயர்த்த வெண்டுமென்றாவது, ஒரு புது உலகைச் சிருஷ்டிக்க வேண்டுமென்றாவது எண்ணவில்லை. சக்கிலியர், சிறு கைத்தொழிலாளிகள், சிறு வியாபாரிகள் முதலியவர்கள் தங்களுடைய தொழிலைச் செவ்வையாக நடத்துவதற்கு வேண்டிய முதலை எப்படித் தேடிக்கொள்வது என்ற ஒரு விஷயத்தையே அவர் அவர்கட்குக் கற்பிக்க விரும்பினார்.

அவருடைய பாங்குகள் நடுத்தர வகுப்பினருக்கும் (Middle class people) மிகவும் பயனுடையவைகளாய் இருக்கின்றன. தம்முடைய சௌகரியத்துக்காகவும், பிறருக்கு உதவியாகவும், எந்த

இடத்தில் சிலர் கூட்டுறவு முறைகளைக் கைக்கொண்டு ஒன்று சேருகின்றனரோ, அந்த இடத்தில் ஒரு கூட்டுறவு ஸ்தாபனத்தை ஏற்படுத்திக்கொள்ள முடியும்.

## (உ) 'ரெய்பசின்' என்பவருடைய 'கிராமப் பாங்குகள் (Raiffeisen 'Village Banks')

சூல்ஸ் டெலீஷ் (Schulze Delitzsch) என்பவர், பட்டினங்களில் உள்ளவர்களின் நன்மைக்காகக் கூட்டுறவு ஸ்தாபனங்களை வளர்த்துவந்த அதே சமயத்தில், ரெய்பசின் (Raiffeisen) என்பவர் தம் சொந்த முறையில் கிராமவாசிகளின் பணமுடையை நீக்குவதற்காகக் கூட்டுறவு முறையைப் பரப்பினர். சூல்ஸ் ஒரு புறத்தில் வேலை செய்ய, அதே சமயத்தில் ரெய்பசின் மற்றொரு புறத்தில் வேலை செய்தார். அவர்கள் அநுஷ்டித்த முறைகளில் சிற்சில மாறுபாடுகள் இருந்தன. அவைகளைப் பின்பு பார்ப்போம்.

வெஸ்ட்பேலியாவில் (West-Phalia) ஹாம் (Hamm) என்னும் ஊரில் 1818-ஆம் ஆண்டு பிறந்த ரெய்பசின் (Raiffeisen) முதலில் இராணுவத்தில் சேர்ந்தார். சில காலத்தில் அவர் கண் பார்வையில் சிறு ஊனம் ஏற்பட்டதால், அவர் இராணுவத்தை விட்டுவிட்டு, ஆட்சித் துறையில் வேலைக்கு அமர்ந்தார். 1845-ஆம் ஆண்டு அவர் வெயர்பஷ் (Weyerbusch) என்னும் இடத்தில் ஓர் அதிகாரியாய் (Burgo Master) நியமிக்கப்பட்டார்.

அப்போதுதான் அவர் ஏழை மக்களின் கஷ்டங்களைக் கண்ணாரக் கண்டு மிகவும் வருந்தினர். அம்மக்களிற் பலர் யூதர் வகுப்பைச் சேர்ந்த இலேவாதேவிக்காரர்களிடம் கடன் வாங்கி மிகவும் கஷ்டப்பட்டுக்கொண்டிருந்தனர். நமது தேசத்திலே ஏழை விவசாயிகள் 'மார்வாரி' வகுப்பினர்களிடத்திலும், 'முல்டானிகள்' இடத்திலும் அகப்பட்டுக் கொண்டு எவ்வளவு கஷ்டப்படுகிறார்களோ, அவ்வளவு அந்நாட்டு மக்கள் யூதர்கள் இடம் சிக்கி மிகவும் வருந்தினர்கள்.

1848-ஆம் வருஷத்தில் அவர் 'பிளாமெர்ஸ்பெல்டு' (Flammersfeld) என்னும் இடத்திற்கு மாற்றப்பட்டார். அப்போதுதான் அவர் ஏழைக்கிராம மக்களுக்குக் கைகொடுக்க முன் வந்தார்.

முதல் முதல் அவர் ஒரு கூட்டுறவு ரொட்டிக் கிடங்கை ஏற்படுத்தினர். அஃது ஏழை மக்கட்குப் பெரிதும் நன்மையை உண்டாக்கியது. அவர்கள் தங்கட்கு வேண்டிய ரொட்டிகளையெல்லாம், முன் விற்ற விலையில் பாதி விலைக்குக் இந்தக் கூட்டுறவு கிடங்குகளின் மூலம் வாங்கினர்கள்.

அடுத்தபடியாக அவர் 'கூட்டுறவு மிருகங்கள் வாங்கும் சங்கத்தை' (Co-operative Cattle-purchase association) ஏற்படுத்தினர். விவசாயிகட்கு மிருகங்கள் அவசியமானவை அல்லவா? இதற்கு முன் அவர்கள் தங்கட்கு வேண்டிய உழவு முதலியவைகளுக்கான மிருகங்களை யூதர்களிடமிருந்து பெரும்பாலும் கடனுக்கு வாங்கினர்கள். அம்முறையை

ஒழித்துக் கூட்டுறவு முறையில் அவைகளை வாங்கச் செய்தவர் ரெய்பஸின்.

1849-ஆம் வருஷத்தில், மிகக் கஷ்டப்பட்டுத் திரட்டிய சிறிய தொகையாகிய 300பவுனை முதலாக வைத்து, 'கிராம பாங்கு' (Village Bank) ஒன்றை ஆரம்பித்தார். அந்தப் பாங்கின் சட்டத்திற்கு உட்படச் சம்மதிக்கும் கிராம வாசிகட்குக் கடன் கொடுக்கப்படும் என அவர் விளம்பரப்படுத்தினார்.

அவருடைய முயற்சியைப் பார்த்துப் பலர் நகைத்தனர். சிலர், "உங்கட்கு வேண்டும் பணம் எங்கிருந்து வரும்?" என்று கேட்ட போது, அவர் ஆகாயத்தைச் சுட்டிக்காட்டி, "அங்கிருந்து வரும," என்று பதில் கூறினாராம்.

அவர் தம்முடைய பாங்குகளைப் பற்றி விசேஷமாகப் பிரசாரம் செய்யவில்லை. அவர் இயற்கையிலேயே அடக்கமான சுபாவமுள்ளவர்; அதுவுமல்லாமல் தாம் கைக்கொண்டுள்ள முறை செம்மையானதானல், நடைமுறையில் அது நன்ருக இருந்தால், மக்கள் தாங்களே அவைகளைக் கைக்கொள்ருவார்களென்ற உறுதி அவருக்கு இருந்தது.

அவருடைய பாங்கு முறை மெதுவாகத்தான் பரவியது. முதல் பாங்கு ஏற்படுத்தி ஐந்து வருஷங்கட்குப் பிறகுதான் 1854-ஆம் வருஷத்தில் இரண்டாவது பாங்கு ஏற்பட்டது. 1862-ஆம் வருஷத்தில் மூன்ருவது பாங்கும், 1868-ஆம் வருஷத்தில் நான்காவது பாங்கும் ஏற்படுத்தப்பட்டன. இவை

1874-ஆம் ஆண்டுக்குப் பிறகுதான் விசேஷமாக விருத்தி அடைந்தன.

1876-ஆம் வருஷத்திலே ரெய்பசின் (Raiffeisen) இந்தக் கிராம பாங்குகட்கு ஆதாரமாக இருக்கும்படி 'நியூவீட்' (Neuwied) என்னும் இடத்தில் ஒரு மத்திய பாங்கை ஏற்படுத்தினர். கிராம பாங்குகளிற் பல அந்த மத்திய பாங்கின் பங்குகளை வாங்கின. 1877-ஆம் வருஷத்தில் எல்லாக் கிராம பாங்குகளும் அடங்கிய ஐக்கியச் சங்கம் (Union) ஏற்படுத்தப்பட்டது.

1870-ஆம் ஆண்டு முதல் 1890-ஆம் ஆண்டு வரையில் விவசாயிகளிடையே சாஸ்திரீய விவசாய முறைகள் பரவ ஆரம்பித்தன. அக்காலத்திலே இக்கிராம பாங்குகள், விவசாயிகட்கு வேண்டிய எரு, மிருக உணவுப் பொருள்கள் முதலியவைகளை வாங்குவதற்கு அநுகூலமாய் இருந்தன. நாளடைவில் நியூவீட் என்னும் இடத்திலுள்ள ஐக்கியச் சங்கமே, இக்கிராமச் சங்கங்கள் சுத்தமான எரு முதலிவைகளைக் குறைந்த விலைக்கு வாங்குவதற்கு உதவி செய்தது.

நாளடைவில் ஒவ்வொரு கிராம பாங்கும் கிராம வியாபார ஸ்தாபனமாகவும் வேலை செய்ய ஆரம்பித்துவிட்டது.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் கடைசிப் பகுதியிலே கூட்டுறவு இயக்கமானது ஜெர்மானிய விவசாயிகளிடையே மிகவும் பரவ ஆரம்பித்தது.

இருபதாம் நூற்றாண்டிலேயே கூட்டுறவு இயக்கத்தின் பலம் மிகவும் அதிகரித்துவிட்டது.

## (ங) ரெய்பசின், சூல்ஸ் டெலீஷ் பாங்குகள்
## (Raiffeisen and Schulze-Delitzsch Banks)

இவை ஒரே காலத்தில் ஒரே தேசத்தில் உண்டானவை. இரண்டு பாங்குகளின் நோக்கமும் அவற்றில் சேருபவருடைய முடையைத் தீர்க்க, அவர்கட்குப் பணம் கிடைக்கும்படி செய்வது எப்படி என்பதேயாகும். அவ்விரண்டும், அவைகள் ஏற்படுத்தப்பட்ட இடங்களுக்கேற்பச் சிற்சில சிறப்புக் குணங்களை உடையனவாய் விளங்குகின்றன. அவை ஒன்றுக்கொன்று மாறுபட்டவைகளும் அல்ல; போட்டியானவைகளும் அல்ல; குறித்த ஒரே காரியத்துக்காக வெவ்வேறான இடங்களில் ஏற்படுத்தப்பட்ட நிலையங்களாகும்.

### (அ) ரெய்பசின் சங்கத்தின் முக்கிய அமிசங்கள்
### (Characteristics of Raffeisen Society)

இச்சங்கம் உறுப்பினருடைய எண்ணிக்கை மிக அதிகமாகவே இருக்க வேண்டுமென்ற கொள்கையுடையதன்று. உறுப்பினர் ஒருவரையொருவர் நன்றாக அறிந்திருத்தல் வேண்டும். ஆதலால், அவர்களெல்லாம் ஒரு குறித்த எல்லைக்குள் இருப்பவர்களாதல் வேண்டும்.

இதன் பங்குத் தொகை மிகவும் கொஞ்சம்.

இதன் மூலதனமானது சாசுவதமாக இருக்க வேண்டும். அதனை அங்கத்தினர் பங்கிட்டுக் கொள்ளலாகாது.

அங்கத்தினருடைய பொறுப்பு வரையறுக்கப் பட்டதன்று.

இச்சங்கத்தில் பொருளுற்பத்திக்காகவோ (Productive) கஷ்ட உதவிக்காகவோதான் (Provident) கடன் கொடுக்கப்படும்.

உறுப்பினருக்கு மாத்திரந்தான் கடன் தரப் படும்.

கடன் நீண்ட காலத்திற்குக் கொடுக்கப்படும். வாங்கிய கடனைக் கொஞ்சங் கொஞ்சமாகக் கொடுத்துத் தீர்த்துக்கொள்ளலாம்.

வருஷந்தோறும் இதன் அங்கத்தினர்கள், ஒவ்வோர் அங்கத்தினரும் எவ்வளவு கடன் வாங்கலாம்; அங்கத்தினர்களிடமிருந்து எவ்வளவு தொகையைச் சேமிப்பு விடுமுதல் (Savings Deposits) ஆக வாங்கிக் கொள்ளலாம்; சங்கத்துக்காக எவ்வளவு பணம் கடன் வாங்கலாம் என்பன முதலிய விஷயங்களைத் தீர்மானிக்கிறார்கள்.

இலாபம் சம்பாதித்தல் கூடாதென்பது இச் சங்கத்தின் கொள்கை.

காரியதரிசியல்லாத மற்றைச் சங்க நிருவாகர் கட்குச் சம்பளம் கொடாதிருப்பதும், அங்கத்தினரின் பொருளாதார நன்னடத்தைக்கான காரியங்களைக் கவனிப்பதும், உறுப்பினர்களிடம் விற்பதற்காக விவசாயத் தேவைப் பொருள்களை (Agri-

**cultural requisites)** வாங்குவதும், அங்கத்தினர்கட்கு வாடகைக்குக் கொடுப்பதற்காக விலையுயர்ந்த விவசாயக் கருவிகளை வாங்கி வைத்திருப்பதும், இச் சங்கம் மேற்கொள்ளும் வேலைகளில் சேர்ந்தவைகளாகும். *

(ஆ) சூல்ஸ் டெலீஷ் சங்கங்களின் சிறப்புத் தன்மைகள் **(Characteristics of Schulze-Delitzsch Societies):**

இவ்வகைச் சங்கங்களும் கூட்டுறவுப் பாங்குகளே. ஆனால், இந்தப் பாங்குகள் எவ்வளவு முதலைச் சேர்க்க முடியுமோ, அவ்வளவு முதலைச் சேர்க்க விரும்புகின்றன; ஏனைய பாங்குகளின் உதவியின்றித் தாங்களே தனித்தியங்கும் தன்மையை விரும்புகின்றன. ரெய்பசின் (Raiffeisen) பாங்குகளைவிட இவை இன்னும் அதிகமான வியாபாரத் தோரணையில் நடத்தப்பெறுகின்றன. அவ்வப்போது உண்டாகும் மாறுதல்களால் யாதோர் அசௌகரியமும் உண்டாகாதவாறு, பெரிய காப்பு நிதியைச் (Reserve Fund) சேர்த்து வைக்கவேண்டுமென்று இவை விரும்புகின்றன. மேலும், அங்கத்தினர்கள் தங்கட்கு வேண்டிய முதலைத் தாங்களே தயாரித்துக்கொள்ள வேண்டுமென்ற நோக்கம் இப் பாங்குகளுக்கு உண்டு.

ஆகையால், ஒவ்வோர் உறுப்பினரும் இப் பாங்கின் பங்குகளை வாங்க வேண்டும். இப்பங்கின் தொகை அதிகமாகவே இருக்கிறது. ஆதலால்,

---

* John Matthai—Agricultural Co-operation.

பங்கு ஒன்றையாவது வாங்க முடியாத ஏழைகள் இப்பாங்கில் சேர முடியாது.

இப்பாங்குகளின் நோக்கம் பெருந்தொகையைத் திரட்ட வேண்டுமென்பதாதலால், ரெய்பசின் சங்கங்களைப்போல (Raiffeisen Banks) ஒரு சிறிய இடத்தில் இவைகள் வேலை செய்ய விரும்புவதில்லை. ஒரு குறுகிய எல்லைக்குள் இருக்கும் மனிதர் சேர்ந்தாலல்லவா, ஒருவரையொருவர் அறிந்துகொள்ள முடியும்? இந்தப் பாங்குகளில் பெரிய விஸ்தீரணத்திலுள்ளவர்களும் சேருவதால், ஒருவரையொருவர் நன்றாகத் தெரிந்துகொள்ளுவதற்கு இடமில்லை. ஆகையால், அங்கத்தினர்களின் பொறுப்பு (United Liability) வரையறுக்கப்பட்டிருக்கிறது. *

(ச) லஜ்ஜட்டி சங்கம் (Luzzatti Society)

ஜெர்மனியில் சூல்ஸ் டெலீஷ் (Schulze-Delitzsch) ஏற்படுத்திய கூட்டுறவுப் பாங்குகளின் முறைகளைத் தம் தேசத்திற்கேற்ப மாற்றியமைத்தவர் லஜ்ஜட்டி (Luzzatti) என்பவர். அவர் 22 வயது வாலிபராய் இருந்தபோதே, 1863-ஆம் வருஷத்தில், 'நாணயப் பொறுப்பின் பரப்பு' (The Diffusion of Credit) என்னும் ஒரு நூலை எழுதிப் பெயர் பெற்றார்.

ஆஸ்திரிய அரசாங்கத்தினர் எவ்விதச் சங்கம் ஏற்படுத்துவதையும் சட்ட விரோதமெனக் கருதினர். அதனல், லஜ்ஜட்டி தம் ஊரை விட்டு மிலான்

---

* John Matthai—Agricultural Co-operation.

(Milan) என்னும் நகருக்குப் போய்ச் சேர்ந்தார்; 1865-ஆம் வருஷம் **லோடி** (Lodi) என்னும் இடத்தில் ஜெர்மானிய சூல்ஸ் பாங்கு முறையின்படி ஒரு சிறிய கூட்டுறவு ஸ்தாபனத்தை ஏற்படுத்தினார். அது நாளடைவில் மிகப் பெரிய ஸ்தாபனமாய் வளர்ந்து மேம்பட்டது.

1866-ஆம் வருஷத்தில் நடை முறையில் சில மாறுதல்களோடு **மிலான்** (Milan) நகரில் **பேங்கா பாபோலர்** (Banca Popolare) என்னும் ஒரு கூட்டுறவுச் சங்கத்தை ஸ்தாபித்தார்.

இட்டாலித் தேசத்தில் பணமுடை அதிகமாய் இருந்தபடியால், இப்பாங்குகள் மிக விரைவில் எங்கும் தோன்றின. இவை மக்களிடையே பரவுவதற்கு முக்கிய காரணம் லஜ்ஜட்டியின் (Luzzatti) சலியா உழைப்பே. இட்டாலித் தேசத்தில் சகலரும் அவரை மிகவும் கொண்டாடினர்.

இவ்வகையான பாங்குகள் எங்கும் பரவுவதற்கு இருவிதத் தடைகள் இருந்தன. ஒன்று, உறுப்பினர்களின் பொறுப்பு வரையறுக்கப்படாமல் இருந்தது. சில வருஷங்கள் கழித்துத்தான் இக்குறை நீக்கப்பட்டது. இரண்டாவது தடை, சேர விரும்புபவர்கள், பங்குத் தொகையாகப் பெருந்தொகையை நீண்ட காலம் கட்ட வேண்டுமென்பது.

இரண்டாவது குறையை நீக்க, லஜ்ஜட்டி (Luzzatti) ஒரு மாறுதல் செய்தார். எவரும் பத்து மாதத்திற்கு மேற்படாத ஒரு காலத்திற்குள் சிறிய சிறிய தொகையாகப் பங்குத் தொகையைக் கொடுத்

தாற்போதும் என்னும் ஏற்பாடு செய்தார். இந்த மாறுதல் பலருக்கு நன்மையைத் தந்தது. பல ஏழைகள் இப்பாங்குகளில் சேருவதற்கான சௌகரியம் இதனால் உண்டாயிற்று.

இந்தப் பாங்குகள் விவசாயிகட்கும் பிரயோசனமாய் இருக்கின்றன. ஏனெனில், இப்பாங்குகள் விவசாய சங்கங்கட்குக் கடன் கொடுத்து உதவுகின்றன.

இப்பாங்கின் நிருவாகஸ்தர்கள் சம்பளம் பெறாமலே வேலை செய்ய வேண்டும் என்ற விதி ஏற்படுத்தப்பட்டிருக்கிறது.

---

## 2. ரெய்பசின் பாங்குகளின் நடைமுறையும் அமைப்பும்

## (Raiffeisen Banks—Their Working)

இப்பாங்குகளின் முக்கிய நோக்கம், பலர் ஒன்று சேருவதால் ஏற்படும் புதிய சக்தியைக் கொண்டு, எல்லோருக்கும் வேண்டிய பணத்தைக் கொடுத்து உதவுதல். தொடக்கத்திலிருந்தே இக்காரியத்தைமட்டுமல்லாமல், அங்கத்தினரின் சீலத்தையும் மேன்மைப்படுத்துவது இப்பாங்குகளின் நோக்கமாக இருக்க வேண்டுமென்று ரெய்பசின் (Raiffeisen) கருதினர். ஒவ்வொரு பாங்கைச் சுற்றிலும் ஒரு புதிய கிராம வாழ்க்கையை நிர்மாணிக்க அவர் முயற்சி செய்தார்.

### (அ) இப்பாங்குகளின் முதல்

இப்பாங்குகளுக்குப் பங்கு விற்பதன் மூலம் முதல் தொகை கிடைக்கிறது. பாங்கில் சேர விரும்பும் ஒவ்வொருவரும் பாங்கின் பங்கை (Share) வாங்க வேண்டும். ஆனல், இப்பங்குத் தொகை மிகக் குறைவாய் இருப்பதால், பங்குத் தொகையின்மூலம் இந்தப் பாங்குகட்கு அதிக முதல் கிடைப்பதற்கில்லை. ஆனல், பங்கின் விலை குறைவாய் இருப்பதால், அநேகர் இப்பாங்குகளில் சேருவதற்கு வசதி இருக்கிறது.

ஒரு குறித்த எல்லைக்குள் இருப்பவர்களை இப்பாங்குகளில் பணம் போடும்படி செய்வதால் முதல் கிடைக்கிறது. பெரும்பாலும் இந்தப் போடு முதலுக்கு அங்கத்தினர்களானல் அதிகமான வட்டி கொடுக்கப்படுகிறது; அங்கத்தினர்களல்லாதவர்கட்குச் சற்றுக் குறைந்த வட்டி கொடுக்கப்படுகிறது. அவ்வித வித்தியாசத்தைக் காட்டுவதன் காரணம், எல்லோரையும் அங்கத்தினர்களாகச் சேரும்படி செய்ய வேண்டுமென்பதே. ஒரு குறித்த எல்லைக்குள் இருக்கும் மனிதர் கொஞ்சங் கொஞ்சமாக வாவது சேர்க்கும் பணத்தை இப்பாங்குகளில் போடும்படி செய்வதால், கிடைக்கும் பணமும் இப்பாங்குகளுக்கு உபயோகமாய் இருக்கிறது.

இப்பாங்குகள் மத்திய பாங்குகளிடமிருந்தாவது, மாகாணப் பாங்குகளிடமிருந்தாவது, வேறு பாங்குகளிடமிருந்தாவது, தனிப்பட்டவர்களிடமிருந்

தாவது, கடன் பெறுவதால் கிடைக்கும் பணம் உதவியாய் இருக்கிறது.

இதையல்லாமல் இப்பாங்குகளின் இலாபத்தை யெல்லாம் ஒன்று திரட்டி வைத்துள்ளதால் ஏற்படும் பணமும் உண்டு. இந்த இலாபப் பணம் எல்லாப் பாங்கின் பொதுச்சொத்தேயன்றி, அங்கத்தினர்கட்குக் கிடைக்கக் கூடியதன்று. இந்தச் சேமிப்பு நிதி இரண்டு பிரிவாகப் பிரிக்கப்படுகிறது. ஒன்று, நஷ்ட ஈட்டுக்கென உபயோகிப்பதற்காக வைக்கப்படுவது; மற்றொன்று, பல வகை நன்மைகளையும் செய்வதற்காக ஒதுக்கி வைக்கப்படுவது. பின்னதற்கு அஸ்திவார நிதி (Foundation fund) என்பது பெயர். சாதாரணச் சேமிப்பு நிதியை நஷ்டமேற்பட்டால், அதற்காக உபயோகிக்கலாமே அன்றி, மற்றெதற்கும் உபயோகிக்க முடியாததால், மற்றச் செலவுக்காகவென்று சேம நிதி ஒதுக்கப்படுகிறது. இத் தனிப்பகுதியான சேம நிதிதான் கட்டடங்கள் கட்டிக்கொள்ளல் முதலிய பல காரியங்களுக்காக உபயோகிக்கப்படுகிறது. பாங்கானது கலைக்கப்பட்டாலுங்கூட இந்த நிதியானது அங்கத்தினர்கட்குப் பகிர்ந்து கொடுக்கப்படமாட்டாது. இப்பணமானது புதிதாக ஒரு கூட்டுறவுப் பாங்கு ஏற்படுமானால், அதற்குக் கொடுக்கப்படும்; இல்லையேல், பொது நன்மைக்காகச் செலவிடப்படும்.

### (ஆ) பணத்தைப் பயன்படுத்தும் விதம்

மேற்கூறியவாறு கிடைக்கும் பணத்தை இப் பாங்குகள் மூன்று வகையாகப் பயன்படுத்துகின்

றன: (1) சிறு கடன்களைக் கொடுத்தல், (2) நடைமுதற்கணக்குக்கெனக் (Current accounts) கொடுத்தல், (3) சொத்து மாறுதல்களுக்காகப் (Property transfers) பணம் கொடுத்தல் என்னும் இக்காரியங்கட்காக இப்பாங்குகளின் பணம் உபயோகிக்கப்படுகிறது.

அநேகமாக அங்கத்தினர்கள் சிறு தொகைகளைக் கடனாக வாங்குகிறார்கள். இக்கடன்கள் பெரும்பாலும் வாங்குபவரின் நாணயப் பொறுப்பின் பேரிலேதான் கொடுக்கப்படுகின்றன. சில சமயம் நில அடைமானத்தின்பேரிலும் கடன் கொடுக்கப்படுகிறது. ஒருக்கால் சொத்துரிமைப் பத்திர அடைமானத்தின் (Deposit of collateral) பேரிலும் கடன் கொடுக்கப்படலாம்.

இந்தப் பாங்குகளில் கடன் வாங்குபவர் எவராயினும், மிகவும் திருப்திகரமான ஒழுக்கத்தை உடையவர்களாய் இராவிட்டால் கடன் வாங்க முடியாது. கடனைத் திருப்பிக்கொடுக்கச் சக்தி உடையவர்களாயினும், நல்லொழுக்கமற்றவர்கட்குக் கடன் கொடுக்கப்படமாட்டாது. குடிகாரன், சோம்பேறி முதலியவர்கள் கடனைப் பெறுதல் அரிது. சிற்றூர்களில் இப்பாங்குகள் இருப்பதால், அங்கத்தினர் ஒருவரையொருவர் நன்கு அறிந்துகொள்ளல் முடியும். ஆகையால், எவருடைய நடத்தையில் சிலருக்காவது ஐயம் இருக்கிறதோ, அவர் இப்பாங்குகளில் கடன் வாங்க முடியாது. பாங்கின் உறுப்பினர்கள் சந்தேகப் பேர்வழிகளைச் சேர்த்துக்கொள்ளாததற்கு முக்

கிய காரணமும் உண்டு. ஒருவர் பணங் கொடாத தனுல் ஏற்படும் நஷ்டமும் எல்லோரையும் சாருமாத லால், அவர்கள் தீர யோசித்தே எதையும் செய்வார் கள்; யாரையும் சேர்த்துக்கொள்வார்கள். ஷூல்ஸ் டெலீஷ் (Schulze-Delitzsch) பாங்குகளில் ஆளின் நடத்தையைப்பற்றி அதிகமான விசாரணை செய் யப்படுவதில்லை. தொழில் துறையில் நாணயப் பொறுப்பாக நடக்கும் எவனும் அந்தப் பாங்கு களில் கடன்கொள்ள முடியும். ரெய்பசின் (Raiffeisen) பாங்குகளில் அப்படி வாங்குவது முடியாது. இந்தப் பாங்குகளில் ஒருவர் கடன் வாங்க வேண்டு மானல், யாராவது அவருக்கு ஜாமீன் (Surety) கொடுக்க வேண்டும்; கூட்டுக் கையெழுத்துப் போட வேண்டும். கடன் வாங்கியவர் கொடுக்காமல் ஏமாற்றி விட்டாலும், அல்லது இறந்துவிட்டாலும் ஜாமீன் (Surety) கொடுத்தவரே அந்தக் கடனைக் கொடுத்து அடைக்க வேண்டும்.

கடன் கேட்கும் ஒரு மனுதாரைப்பற்றி அதிக மாகத் தெரியாவிட்டாலும், ஊருக்குப் புதியவராக இருப்பதால் யாரும் ஜாமீன் நிற்க முன் வராவிட் டாலும், அந்த ஆசாமியின் நிலத்தின்பேரில் இப் பாங்குகள் கடன் கொடுக்கின்றன. ஆனல், அந்த ஆசாமியின் நடத்தை செவ்வையாக இருந்தால் தான் கடன் கிடைக்கும். இக்கடன் நில அடை மானக் கடனைப்போன்றதன்று; ஏனென்ருல், நிலத்தின் ஆதரவு இருக்கிறதென்ற ஓர் எண்ணத் தால் மாத்திரம் இக்கடன் கொடுக்கப்படவில்லை;

ஆளைப் பொறுத்ததே கடன். இக்கடன் நீண்ட காலத்துக்குக் கொடுக்கப்படமாட்டாது.

இப்பாங்குகளில் கடன் வாங்குவதென்றால், ஆளின் நடை நன்றாக இருந்தால் மாத்திரம் போதாது. வாங்குகிற கடன் ஏதாவது பயனுள்ள காரியத்துக்காக வாங்கப்படுவதாக இருக்க வேண்டும். பயனுள்ள காரியமாய் இருப்பதோடு, போட்ட முதலுக்கு நஷ்டம் வரக்கூடாத காரியமாகவுமிருக்க வேண்டும். இந்த விஷயங்களையெல்லாம் ஆராய்ந்த பிறகுதான் இப்பாங்குகள் கடனைக் கொடுக்கும்.

இவை நிலமாற்றத்திற்காகவும் கடன் கொடுக்கின்றன என்பது மேலே குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதன் விவரத்தைக் காண்போம்:

ஓர் ஊரில் ஒரு பெரிய நிலச் சுவாதந்தரர் இறந்துபோகிறார்; அல்லது, அந்த ஊரை விட்டுப் போக விரும்புகிறார் என்று வைத்துக்கொள்வோம். அப்போது அவர் தம் பண்ணையைப் (estate) பல பகுதிகளாகப் பிரித்து விற்க விரும்புகிறார் என்றால், அப்போது பல ஏழை விவசாயிகள் அவைகளை வாங்க விரும்பலாம். அவைகளை வாங்க அவர்கட்கு அப்போது கையில் பணமில்லாமல் இருக்கலாம்; ஆனால், நாளடைவில் கொஞ்சம் கொஞ்சமாகக் கொடுத்துவிட அவர்கட்குச் சக்தி இருக்கக்கூடும். இம்மாதிரியான சமயத்தில் இப்பாங்குகள் அந்த நிலங்களைத் தாங்களே வாங்கி, அந்த நிலங்களின் விலையைக் குறித்த அந்த விவசாயிகளிடமிருந்து கொஞ்சம் கொஞ்சமாக வாங்கிக்கொண்டு, நாளடை

வில் அந்த நிலங்களை அவர்களுக்குச் சொந்தமாகும் படி செய்து வருகின்றன.

இப்பாங்குகள் நிலம் கைம்மாறுதற்கான உதவியை வேறு சமயங்களிலும் செய்யலாம். உதாரணமாக, ஒரு விவசாயி தன் நிலத்தை அடைமானமாக வைத்து, ஓர் இலேவாதேவிக்காரனிடம் கடன் வாங்கி இருப்பதாக வைத்துக்கொள்வோம். அந்த இலேவாதேவிக்காரன் நில விலை மிகக் குறைவாய் இருக்கும்போது பணத்தை நெருக்கிக் கேட்டு, பணம் கொடுக்க முடியாவிட்டால், அந்த நிலத்தை ஏலத்துக்குக் கொண்டுவந்துவிடுகிறான். அப்படி அவன் தொந்தரவு செய்து ஏலத்துக்குக்கொண்டு வருவதன் நோக்கம், அந்த நிலத்தைக் குறைந்த விலைக்குத்தானே எடுத்துக்கொள்ளலாம் என்பதென வைத்துக்கொள்வோம். இம்மாதிரியான கஷ்ட சமயத்தில் இப்பாங்குகள் பெரிய உதவி செய்ய முன் வருகின்றன. அந்த நிலமானது ஏலத்தில் குறைந்த விலைக்குப் போகிறதென்றால், இப்பாங்குகள் பணத்தைக் கட்டித் தாங்களே வாங்கிவிடுகின்றன. பின் நில விலை உயர்வாய் இருக்கும்போது அந்நிலத்தை நல்ல விலைக்கு விற்று, தங்கட்குச் சேர வேண்டிய பணத்தையும் தங்களுடைய சிரமத்திற்காகக் கொஞ்சம் கமிஷனையும் எடுத்துக் கொண்டு, மிச்சப் பணத்தை நிலத்துக்கு உரியவனிடம் இப்பாங்குகள் கொடுத்துவிடுகின்றன. இவ்வுதவி ஏழை விவசாயிகட்குப் பெரிதும் நன்மையை விளைவிக்கிறது.

மேற்கூறிய உதவிகளை இப்பாங்குகள் அங்கத்தினர்கட்குத்தான் செய்கின்றன. அதுவும் தங்களிடம் நிறையப் பணம் இருந்தால்தான் செய்கின்றன. *

### (இ) பாங்குகளின் நிருவாகம்

இப்பாங்குகளின் நிருவாகம் மிகவும் எளியது. அது ஜனநாயகக் கொள்கையை அடிப்படையாகக் கொண்டது. எல்லா உறுப்பினர்களும் கூடும் பொதுக் கூட்டத்தில் டைரக்டர்கள் (இயக்குனர்) தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். அநேகமாக நிருவாகக் கமிட்டியில் ஐந்து அல்லது ஆறு டைரக்டர்கள் இருக்கிறார்கள். இவர்களே பாங்கின் எல்லாக் காரியங்களையும் கவனித்துக்கொள்ளுகிறார்கள். இவர்கள் வாராவாரம் கூடி, பாங்கின் காரியங்களைக் கவனிக்கிறார்கள்.

இவர்கள் பாங்கின் காரியங்களைக் கவனிப்பது சரிதானா என மேற்பார்வை பார்க்க, ஒரு கழகம் இருக்கிறது. அது மூன்று முதல் ஒன்பது அங்கத்தினர்கள் வரையில் அடங்கிய மேற்பார்வைக் குழு (Council of Inspection). அந்தக் குழுவினர் அந்த அந்தப் பாங்கு அங்கத்தினர்களால் பொதுக் கூட்டத்தில் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். அவர்கள் மூன்று மாதத்திற்கொருதரம் பாங்கின் எல்லாக் காரியங்களையும் பரிசீலனை செய்கிறார்கள். இப்பொறுப்புள்ள ஸ்தானங்களில் எவர் வேண்டு

* Fay—Co-operation at home and abroad.

மாளுலும் தேர்ந்தெடுக்கப்படலாம்; ஏழை பணக்காரர் என்ற வித்தியாசம் இதில் இல்லை.

நிருவாக அங்கத்தினர் நான்கு ஆண்டுகட்கு அப்பதவியில் இருக்கலாம். அந்த நான்கு பேரையும் ஒரே வருஷத்தில் தேர்ந்தெடுப்பதில்லை. இரண்டு இரண்டு பேர் இரண்டு வருஷத்திற்கு ஒரு தரம் கமிட்டியிலிருந்து விலகுவர். அவர்களே திரும்பத் தேர்ந்தெடுக்கப்படினும் படலாம்; அல்லது புதியவராக யாரேனும் தேர்ந்தெடுக்கவும் படலாம்.

மேற்பார்வைக் குழுவின் உறுப்பினர் மூன்று ஆண்டுகட்குத் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். அவர்களில் மூன்றில் ஒரு பங்கினர் வருஷந்தோறும் குழுவிலிருந்து விலகுகின்றனர்.

நிருவாக சபையின் தலைவர் பொதுக் கூட்டத்தில் தேர்ந்தெடுக்கப்படுகிருர். இங்குக் கூறப்பட்ட எவரும் தமது சேவைக்காக ஒரு பைசாவும் சம்பளமாகப் பெறுவதில்லை.

இப்பாங்கில் பொக்கிஷதாருக்கு (Cashier) மாத்திரந்தான் சம்பளம் கொடுக்கப்படுகிறது.

இப்பாங்குகளின் கணக்கு வழக்குகள் முழுவதும் இரண்டு வருஷங்கட்கு ஒருமுறையாவது, அந்த ஜில்லா அல்லது மத்திய ஐக்கியச் சபையாரால் நியமிக்கப்பட்ட கணக்குப் பரிசோதகரால் பரிசீலனை செய்யப்படும்.

பாங்கின் கணக்குப் புத்தகங்களையெல்லாம் அங்கத்தினர்கள் பார்க்க வேண்டிஞல் பார்க்கவசதி உண்டு.

முதலில் இப்பாங்குகளில் சேருவதற்கு நுழைவுக் கட்டணமாவது (Entrance fee), வேறு கட்டணமாவது கொடுக்க வேண்டுவதில்லை என்னும் விதி இருந்தது. ஆனல், அரசினரால் ஏற்படுத்தப்பட்ட விதிகளுக்கு உட்பட வேண்டி, அங்கத்தினராக விரும்புவோர் ஒரு சிறு தொகையைப் பங்குத் தொகையாகக் (Share) கொடுக்க வேண்டுமெனப் பிறகு ஏற்படுத்தப்பட்டது. இந்தப் பாங்குகளில் இப்போதுங்கூட நுழைவுக் கட்டணம் வாங்குவது இல்லை.

இந்தப் பாங்குகளில் வாங்கப்படும் வட்டிடவுன் பாங்குகளின் வட்டியைவிட நூற்றுக்கு ஒன்று வீதம் குறைவாகவே இருக்கிறது. சாதாரணமாக இப்பாங்குகளில் வாங்கும் வட்டி நூற்றுக்கு 4 அல்லது 5 வீதந்தான்.

இந்தப் பாங்குகள் கடனை ஒரு வருஷம் முதல் பத்து வருஷம் வரையில் திருப்பிக்கொடுக்கும் சௌகரியம் இருக்கும்படி கொடுக்கின்றன. எவ்வளவு காலத்தில் கடனைத் திருப்பிக் கொடுக்க வேண்டுமென்பது, எவ்வித விவசாய வேலைக்காக அக்கடன் வாங்கப்படுகிறது என்ற விஷயத்தைப் பொறுத்ததாய் இருக்கிறது. கடன் வாங்கிச் செலவு செய்வதாலான பிரதிபலன் சீக்கிரம் கிட்டுமானல், கடனையும் சீக்கிரம் கொடுத்துவிட வேண்டும். அப்பலன் அதிக காலம் பொறுத்தே கிடைக்குமானல், நாளடைவில் கடனைத் திருப்பிக் கொடுத்தால் போதும். குறுகிய காலத்திலோ, நீண்ட காலத்

திலோ கடன் தொகையைக் கொஞ்சம் கொஞ்சமாக, வட்டி முதலுக்கு ஈடாகும்படி, கொடுத்து அடைத்தல் அவசியம். சௌகரியப்பட்டால், மொத்தத் தொகையாகக் கொடுத்தாலும் பாங்குகள் வாங்கிக்கொள்ளும்.

இப்பாங்குகள் கொடுக்கும் கடனை நான்கு வாரத் தவணையில் திருப்பிக் கொடுக்க வேண்டுமெனக் கேட்டால், கடன் வாங்கியவர் கொடுத்தாக வேண்டும். ஆனால், சாதாரணமாக எந்தப் பாங்கும் அப்படி நிர்ப்பந்தப்படுத்துவதில்லை.

---

## 3. சூல்ஸ் டெலீஷ் பாங்குகள் (Schulze Delitzsch Banks)

சூல்ஸ் டெலீஷ் (Schulze-Delitzsch) பாங்குகள் உறுப்பினர்கட்குக் கடன் கொடுப்பதற்கெனவே ஏற்பட்டவை. இவைகட்கும் ரெய்பசின் பாங்குகட்கும் முன் கூறியுள்ளபடி சிற்சில வித்தியாசங்கள் உண்டு.

இந்தப் பாங்குகள் ஏழைகட்கெனவே ஏற்பட்டவை அல்ல. இந்தப் பாங்குகளில் நுழைவுக் கட்டணம் உண்டு. உறுப்பினராக விரும்புபவர் ஒரு பங்காவது (Share) வாங்க வேண்டும். சாதாரணமாக இப்பங்குத் தொகைகள் பெரிய தொகைகளாகவே இருக்கின்றன. ஆதலால், இப்பங்குத் தொகையைக் கொடுக்க முடியாதவர்கள் இப்பாங்குகளில் சேர முடியாது.

ரெய்பசின் பாங்குகள் தங்கள் விவகாரங்களை யெல்லாம் ஒரு குறுகிய எல்லைக்குள்ளேயே வைத்துக்கொள்ளுகின்றன. இந்தப் பாங்குகளோ, விரிந்த எல்லைக்குள் தங்கள் காரியங்களை நடத்துகின்றன.

இந்தப் பாங்குகள் முக்கியமாகப் பட்டினங்களில் வசிப்பவர்களின் பண முடையை நீக்குவதற்கே ஏற்பட்டவை.

ரெய்பசின் பாங்குகளைப் போலல்லாமல், இப் பாங்குகள் பெரிய பெரிய கட்டடங்களில் அமைக்கப்படுகின்றன. சம்பளத்துக்காக வேலை செய்பவர் பலர், இப்பாங்குகளில் காணப்படுகின்றனர்.

இப்பாங்குகளின் முக்கிய நோக்கம், பெரிய மூல தனத்தைச் சேர்த்து:மற்றைய பெரிய பாங்குகளைப் போல இவைகளையும் நடத்த வேண்டும் என்பதாம்.

மேலே குறித்தபடி, இப்பாங்குகளின் பங்குத் தொகை அதிகமாகவே இருக்கிறது. இப்பங்குத் தொகையை அதிகமாக வைப்பதன் நோக்கம், இரண்டெனக் கூறப்படுகிறது. ஒன்று, இவ்வழியாகப் பாங்குக்குப் பெரிய மூலதனத்தைச் சேர்ப்பது. இரண்டாவது, அங்கத்தினரைச் செட்டாகப் பணம் சேர்க்கும்படி செய்வது.

இப்பாங்குகளில் கிடைக்கும் இலாபம் அங்கத்தினர்கட்குப் பகிர்ந்து கொடுக்கப்படுகிறது. பாங்கின் இலாபம் முதலிலேயே இரண்டு கூறாகப் பிரிக்கப்படுகிறது. ஒரு பங்கு, சேம நிதிக்காக ஒதுக்கி

வைக்கப்படுகிறது. பாங்குக்கு எவ்வித நஷ்ட முண்டானாலும், அந்த நஷ்டம் இந்நிதியிலிருந்து ஈடு செய்யப்படுகிறது. இந்த நிதியிலிருந்து பணம் எடுபட்டால், அது திரும்பச் சேர்த்து வைக்கப்பட வேண்டும். நுழைவுக் கட்டணங்களும் சேம நிதி யோடே சேர்த்து வைக்கப்படுகின்றன.

## (க) இப்பாங்குகளின் நிருவாக அமைப்பு

எல்லா உறுப்பினர்களும் வருஷந்தோறும் கூடும் பொதுக் கூட்டத்தில் ஒரு சிறு கமிட்டியைத் தேர்ந்தெடுக்கிறார்கள். அந்தக் கமிட்டியார் தமக் குள் சிலரை உட்கழகத்தினராகத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுகின்றனர். அந்த உட்கழகத்தினர் பெரும் பாலும் மூன்று பேருக்குமேல் இருப்பதில்லை. மிகச் சிலர் ஒன்றுசேர்ந்து செய்யும் வேலைதான் சீக்கிர மாகவும், செவ்வையாகவும் நடைபெறும் என்னும் எண்ணத்தாலேயே மிகச் சிறு எண்ணுடைய உட் கழகம் நியமிக்கப்படுகிறதுபோலும்!

நாளடைவில் இந்த உட்கழகத்தினர், கமிட்டி யாரால் தேர்ந்தெடுக்கப்படாமல், எல்லா உறுப்பி னர்களாலேயும் வருஷாந்தரப் பொதுக்கூட்டத்தி லேயே தேர்ந்தெடுக்கப்படுவாராயினர்.

இந்த உட்கழகத்தினருக்குச் சில விசேஷ அதி காரங்கள் உண்டு. இந்த உட்கழகத்தினரான மூவ ருந்தான் (Vorstand) பாங்கு நடை முறையில் கவ னிக்க வேண்டிய விஷயங்களையெல்லாம் கவனிக் கின்றனர். இவர்கட்குச் சம்பளம் தரப்படுகிறது.

திறமையாளர்களே இவ்வேலைக்கு நியமிக்கப்படுகின்றனர். எக் காரியத்துக்கும் இம்மூவரில் இருவருடைய கையெழுத்தாவது இருத்தல் வேண்டும். அந்தக் காரியங்களில் ஒவ்வொன்றிற்கும் இருவரும் உத்தரவாதிகளாவர். இப்படிப்பட்ட முறையில் ஒருவர் தவறிவிட்டாலும், மற்றவர் கவனிக்கப் போதிய வசதி இருக்கிறது.

இந்த மூவர் கழகந்தான் ஒவ்வோர் அங்கத்தினருக்கும் எவ்வளவு கடன் கொடுக்கலாம் என்பதை நிர்ணயிக்கின்றது. பாங்கின் வேலையை இம்மூவரும் பகிர்ந்துகொள்ளுகின்றனர். ஒருவர், ரொக்க வரவு செலவைக் கவனிப்பர்; மற்றவர், கணக்கைக் கவனிப்பர்; இன்னொருவர், அந்த உட்கழகத்தின் தலைவராய் இருந்து பொதுவாக எல்லாக் காரியங்களையும் மேற்பார்வை செய்வர். இந்த மூவரில் எவருக்காவது கடன் வேண்டி இருந்தால், நிருவாகக் கமிட்டியாரின் உத்தரவின் பேரிலேதான் பெற்றுக்கொள்ளலாம். இம்மூவரும் மிகவும் நேர்மையானவர்களாய் இல்லாவிட்டால், பாங்கின் நிருவாகம் செம்மையாய் நடைபெறாது.

நிருவாகக் கமிட்டியினர் உறுப்பினரின் பொதுக்கூட்டத்தில் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். பாங்கின் பொதுக் காரியங்களை இவர்களே மேற்பார்வை பார்க்கின்றனர். ஒரு பாங்கின் உறுப்பினர்களில் பல திறப்பட்டவரும் இருக்கின்றனர் அன்றோ? அவர்கள் எல்லாருக்கும் பிரதிநிதித்துவம் இருக்கும்படியாகத்தான் இந்த நிருவாகக் கமிட்

டியினர் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். பொதுவாகக் கூறுமிடத்து, பாங்கின் நிருவாகம் முழுவதும் இக் கமிட்டியினரிடந்தான் இருக்கிறதென்று கூறலாம். உட்கழகத்தினரின் காரியங்களெல்லாம் செவ்வையாக இருக்கின்றனவா என்பதையும் இக்கமிட்டியினரே கவனிக்கின்றனர். எனவே, ஒரு பாங்கு சரியாக நடக்கிறதென்றால், அந்தப் பெருமை இந்நிருவாகக் கமிட்டியினருக்கே உரியது; இல்லையென்றாலும் நிருவாகக் கமிட்டியாரின் பொறுப்பிலேயே நடக்கிறது.

ரெய்பசின் பாங்குகளில் யாரும் எவ்வித ஊதியமும் பெறுவதில்லை என்று கூறினோம். ஆனால், இந்தப் பாங்குகளில், நிருவாகக் கமிட்டியினர் கூட்டங் கூடும் ஒவ்வொரு முறையும், ஒவ்வொருவருக்கும் ஒரு சிறு தொகை ஊதியமாகக் (Fee) கொடுக்கப்படுகிறது. சாதாரணமாக இக்கமிட்டியார் மூன்று மாதங்கட்கு ஒரு முறை கூடுவர். இப்பாங்குகள் வரவரப் பெரியனவாகிக்கொண்டே போவதாலும், எல்லா விஷயங்களையும் கவனித்தற்குப் போதுமான விசேஷ அறிவு கமிட்டியாருக்கு இருக்கும் என்பது உறுதி இல்லையாதலாலும், கணக்குப்பதிவு முதலிய விஷயங்களில் மிக்க தேர்ச்சி பெற்றவர்களைப் பின்காலத்தில் நியமிப்பது அவசியமாகிறது.

இந்தப் பாங்குகளில் உறுப்பினராகச் சேருவதில் கஷ்டம் இல்லை; எவரும் சுலபமாகச் சேரலாம். உறுப்பினராகச் சேரும் எவரும் சட்டதிட்டங்கட்கு உட்பட்டு நடத்தல் வேண்டும். கடன் வாங்க விரும்பு

வோர், தக்க ஜாமீன் கொண்டுவர வேண்டும். ஒவ்வொரு புது அங்கத்தினரும் பிரவேசக் கட்டணத்தைச் செலுத்த வேண்டும். அந்த அங்கத்தினர், பாங்கியைவிட்டுப் போகும்போது அந்தக் கட்டணம் திருப்பிக் கொடுக்கப்படமாட்டாது. புதிய உறுப்பினராகச் சேருவது சுலபமாக இருப்பினும், ஒருவர் பாங்கை விட்டு வருவதென்றால் உடனே விட்டுவிட முடியாது. எந்த அங்கத்தினரும் பாங்கை விட்டுப் போவதென்றால் மூன்று மாதங்கட்கு முன்னமே தெரிவிக்க வேண்டும். சில சமயங்களில் இரண்டு வருஷகாலம்வரையிலுங்கூட அப்பாங்கை விட்டு விலக முடியாமற்போயினும் போகும்.

## (உ) பண வரவு

இப்பாங்குகட்கு வேண்டிய பணம் பங்குத் தொகைகளின் மூலமும், சேமநிதி மூலமும், வரையறுக்கப்படாத பொறுப்பின் மூலமும் கிடைக்கிறதென்பது முன்னமே கூறப்பட்டிருக்கிறது. இவ்வழிகளாலன்றி வேறு வகைகளாலும் இப்பாங்குகட்குப் பணம் கிடைக்கின்றது. அவ்வழிகள் இரண்டு. அவையாவன, (1) விடுமுதல் (Deposits), (2) இப்பாங்குகளின் உண்டிகளை வேறு பாங்குகளிடம் 'தள்ளிவிற்றல்' (Re-discounting) என்பன.

**விடுமுதல் :—**இது பல வகைப்படும். பலர் தம்முடைய சம்பாத்தியத்தில் செலவழிந்தது போகப் பாக்கியை இப்பாங்கில் போடலாம். அப்படிப் பணம் போடுபவர்கள் உறுப்பினர்களாக இரா

விட்டால், கடன் வாங்க முடியாது; அதனால், அவர்கள் போடும் பணம் பாங்கில் இருக்கும். அதுவுமன்றி, உறுப்பினர்களிலும் சிலர் கடன் வாங்காமல் பணம் சேர்த்து வைக்கலாம். அந்த விதத்திலும் பாங்குக்குப் பணம் சேரக்கூடும்.

இந்த இரண்டு வித விடுமுதல்களுக்கும் நல்ல வட்டி கொடுக்கப்படுகிறது. இந்தப் பணங்கட்குப் பணம் போட்ட நாளிலிருந்தே வட்டி கொடுக்கப்படுகிறது; ஒரு மாதத்தில் எத்தனையாந்தேதியில் பணத்தைப்போட்டாலும், அந்தத் தேதியிலிருந்து வட்டி தரப்படுகிறது.

இந்த விடுமுதல்களைப் போட்டவர்கள் திரும்ப வாங்கிக்கொள்ள வேண்டுமானால், முன்னறிவிப்பு (Notice) அவசியம். இரண்டு வாரத்திலிருந்து ஒரு வருஷம் வரையில் பல திறப்பட்ட கால அளவுக்கு முன்பு நோட்டீஸ் கொடுக்க வேண்டுமென்ற ஏற்பாடுகள் இப்பாங்கில் காணப்படுகின்றன. சில நாட்களுக்கு முன் தெரிவித்துப் பணம் வாங்க வேண்டுமானால், அந்த ஏற்பாட்டிற்கு வட்டி குறைவு; நோட்டீஸின் காலம் நீடிக்க நீடிக்க வட்டியும் அதிகமாகக் கொடுக்கப்படுகிறது.

சாதாரண விடுமுதல் (Deposit) மூலமும் பாங்குக்குப் பணம் கிடைக்கிறது. இப்பணத்தைப் போட்டவர்கள் வாங்க வேண்டுமானால், சில நாட்களுக்கு முன் நோட்டீஸ் கொடுத்தால் போதும்.

சிலர், வேண்டும்போது வாங்கும் கணக்கில், (Drawing accounts) பணம் போடுகின்றனர். அப்

பணத்தில் அவர்கள் தங்கட்கு வேண்டுவதை அவ்வப்போது வாங்கிக்கொள்ளலாம். பிறருக்குச் செக்குகளின் மூலம் (Cheques) பணம் கொடுக்கலாம்.

இவைகளையல்லாமல் இப்பாங்குகள், ஆபீஸ் கட்டடம் கட்டவோ, அல்லது இதுபோன்ற முக்கியமான குறித்த காரியத்திற்கெனவோ, தனிப்பட்டவர்களிடமாவது, கம்பெனிகளிடமாவது, வேறு பாங்குகளிலாவது பணம் வாங்குதலும் உண்டு.

பொது ஸ்தாபனங்களும் தங்களிடமுள்ள பணத்தை இப்பாங்குகளில் போட்டு வைப்பதும் உண்டு.

(ரு) கடன் கொடுத்தல்

இப்பாங்குகள் இரண்டு வகையான கடன்களைக் கொடுக்கின்றன. (1) ஒரு குறித்த தொகையைக் கடன் வேண்டும் எனக் கேட்கும் உறுப்பினருக்குக் கொடுத்து, அவர் முழுத் தொகையையும் ஒரே தடவையாக வாங்கிக்கொண்டு போகச் செய்யலாம். (2) அதுவுமல்லாமல் ஒரு தொகையைப் பாங்கு கடனாகக் கொடுக்கலாம். அப்போது அந்தத் தொகையை அவர் உடனே வாங்கிப் போகாமல், அந்தப் பாங்கிலேயே விட்டுவைத்திருந்து, அவ்வப்போது வேண்டும் பணத்தை வாங்கிக்கொள்ளலாம். ஆனல், அவர் மொத்தம் வாங்கும் தொகை முதலில் பாங்கு கொடுத்த கடன் தொகையைவிட அதிகமாதல் கூடாது.

பாங்கானது இக்கடன்களை ஏதாவது ஒரு வகை ஆதாரத்தின் பேரிலேதான் கொடுக்கின்றது.

அவ்வித ஆதாரங்கள் பல வகைப்பட்டன. அவை, (1) யாராவது ஒருவர், இருவர் ஜாமீன் கொடுப்பது, (2) நில அடைமானம், (3) ஏதாவது சாமான் அல்லது தஸ்தாவேஜுகளை அடகாகக் கொடுப்பது, (4) வேறு எவ்வித ஆதாரமும் இல்லாது கடன் வாங்குபவருடைய நாணயப் பொறுப்பின் பேரில் கடன் கொடுப்பது என்பவை.

ஆனால், பெரும்பாலான கடன்கள் வேறு ஆட்களின் ஜாமீன் பேரிலேதான் கொடுக்கப்படுகின்றன. இரண்டு நண்பர் ஒருவருக்கொருவர் ஜாமீன் நின்று இருவரும் பாங்கில் கடன் வாங்குவது முடியாது. அப்படி இருவர் ஒருவருக்கொருவர் ஜாமீன் நின்றால், அவ்விருவரும் வேறு இருவரிடம் ஜாமீன் கையெழுத்துப் பெறல் வேண்டும். கடன் வாங்கும் ஒவ்வொருவருக்கும், வேறு நண்பர் இருவர் ஜாமீன் நிற்க வேண்டுமென்பதன் கருத்து, கடன் வாங்கிய பணத்தை அவர் துர்விநியோகம் செய்யாதபடி அவருடைய நண்பர்கள் கவனித்துக்கொள்வார்களென்பதேயாம்.

ஆள் ஜாமீன்பேரில் கடன் கொடுக்கும்போது, அந்த ஆட்கள் நாணயப் பொறுப்பானவர்களாக இருந்தால்தான் பயன் உண்டு. இல்லாவிட்டால், அவர்கள் ஜாமீன் நிற்பதால் என்ன பிரயோசனம்?

இந்தப் பாங்குகள் நிலத்தின் பேரிலும், வீடுகளின் பேரிலும் அதிகமாகக் கடன் கொடுப்பதில்லை. ஏனென்றால், அவைகளின்பேரில் கொடுக்கப்படும் கடன் சீக்கிரம் திரும்பி வராது.

எவரேனும் கம்பெனியின் பங்குச் சீட்டுகள், கவர்ன்மெண்டு கடன் பத்திரங்கள் முதலியவைகளை ஈடாக வைத்தால், அவைகளின் பேரில் எளிதாகக் கடன் கொடுக்கப்படுகிறது.

இப்பாங்குகள் நம்பிக்கை ஜாமீன் பணத்துக்கெனவும் (Fidelity Guarantee) உறுப்பினர்களுக்குக் கடன் கொடுக்கிறது. உதாரணமாக, ஓர் அங்கத்தினர் ஒரு குத்தகை எடுத்திருப்பதாக வைத்துக்கொள்வோம். அவர் அக்குத்தகைக்கு ஒரு குறித்த தொகைப் பணத்தை ஜாமீன் கட்ட வேண்டுமென நிபந்தனை இருப்பதாக வைத்துக் கொள்வோம். அப்போது அந்த அங்கத்தினர் இப் பாங்குக்கு ஓர் ஊதியத்தைக் (fee) கொடுத்து, தமக்கு ஜாமீனுக்கு வேண்டிய தொகையைக் கடனை வாங்கிக்கொள்ளலாம். அந்தக் கடன் தொகையை அந்த அங்கத்தினர் நேரே வாங்கிக் கொள்வதில்லை. அந்தத் தொகையளவு ஜாமீனை அந்தப் பாங்கு நேரே கொடுக்கிறது. எனவே, பணத்தை வாங்கிக்கொள்ளாமலே அந்த அங்கத்தினர் அப்பணத்தை ஜாமீன் தொகையாக உபயோகிக்கலாம்.

வேறு சிலர், நடை முதல் கணக்கு வைத்துக் கொண்டிருக்கலாம். அவர்கள் ஒரு குறித்த தொகையைப் பாங்கினிடமிருந்து கடனைப் பெற்றால், தாம் போட்ட பணத்தையன்றி, அந்தக் கடன் தொகைக்குமேல் போகாதவாறு, அவ்வப்போது வேண்டிய தொகைக்குச் செக்குகளைக் கொடுக்க

லாம். இவ்விதக் கணக்குகளில், அவர்கள் தாங்கள் வாங்கிய மொத்தக் கடன் தொகைக்கும், கடன் வாங்கிய தேதியிலிருந்து வட்டி கட்ட வேண்டுவதில்லை. நடை முதல் கணக்கில் அவ்வப்போது எவ்வளவு தொகை வாங்கப்பட்டிருக்கிறதோ, அதற்கு வட்டி கட்டினுல் போதும்.

**உள் நாட்டு உண்டியல்** :—இப்பாங்கானது, உள் நாட்டு வர்த்தக உண்டியல்களைக் கமிஷன் தள்ளி வாங்குகின்றன. அப்படி வாங்கிய உண்டியல்களை வேறு பாங்குகட்கு விற்கின்றன. அப்படி விற்கையில் அவ்வுண்டியல்கட்குத் தாங்கள் கொடுத்த விலையைவிட அதிகமான விலையைப் பெறுவதால், இலாபம் கிடைக்கிறது.

சாதாரணமாக இப்பாங்குகள் மூன்று மாதத் தவணையிலேதான் கடன் கொடுக்கின்றன. விவசாயிகட்கு மூன்று மாதத் தவணையில் கடன் கொடுத்தால், அந்தக் காலத்திற்குள் அவர்களால் அப்பணத்தைத் திருப்பிக் கொடுக்க முடியாது. சில சமயங்களில் விவசாயிகட்கு இரு வருஷத் தவணையில்கூடப் பணம் தேவையாய் இருக்கும். ஆகையால், இந்தப் பாங்குகள் விவசாயிகட்கு ரெய்பசின் பாங்குகளைப் போல அவ்வளவு பிரயோசனமாய் இல்லை.

**ஸர். எப். நிக்கல்சன் (Sir. F. Nicholson)** என்பவர், இப்பாங்குகளைப்பற்றி ஆராய்ச்சி செய்து, இப்பாங்குகளும் விவசாயத்துக்குப் பெரிதும் துணை நின்றன என்றும், இன்னும் பிற்காலத்திலும்

இவை பெரும்பயனை அளிக்கக்கூடுமென்றும் கூறி உள்ளார். ஆனல், இவை சிறு விவசாயிகட்கு அவ் வளவு பயன் தரவில்லை என்பதற்குக் கீழ்க்காணும் காரணங்களைக் காட்டியுள்ளார் :—

(1) கடன் மிகவும் குறுகிய காலத்துக்குத் தான் கொடுக்கப்படுகிறது. (2) இவை மிகவும் விஸ்தாரமான பிரதேசத்தில் கொடுக்கல் வாங்கல் களை வைத்துக்கொண்டிருக்கின்றன. (3) கடன் வாங்கிய தொகை எப்படிச் செலவிடப்படுகிறது என்பதைக் கவனிக்கக்கூடுமானல், மிகவும் நல்லது. இப்பாங்குகள் அப்படிச் செய்ய முடிவதில்லை. (4) கடன் வாங்கியவனை நன்முறையில் ஈடுபடுத்த எவ் வித ஏற்பாடும் இப்பாங்குகளில் இல்லை. (5) அதிக தொகையை இலாபமாக எதிர் பார்த்தல் இவை களின் குறைகளில் ஒன்று.

உல்பு (Mr. Wolff) என்பவர் இப்பாங்குகளும் விவசாயிகட்குப் பெரிதும் நன்மை பயக்கக்கூடும் எனக் கூறுகிருர். நல்ல திறமையான நிருவாகி களின் கீழுள்ள இப்பாங்குகள் விவசாயிகட்கும் கடன் கொடுத்து உதவியிருக்கின்றன என அவர் எடுத்துக் காட்டுகிருர்.

இந்தப் பாங்குகளிற் சில, நாளடைவில் கம் பெனி முறையிலமைந்த பாங்குகளாக மாறிவிடு கின்றன.

---

## 4. இந்திய கூட்டுறவுப் பாங்குகள்

### (க) அவசியமும் பயனும்

இந்திய விவசாயிகள் மிகவும் ஏழைகள் என்பது உலகறிந்த விஷயம். இந்தியர்கள் தங்களுடைய வயிற்றுப் பிழைப்புக்கு விவசாயத்தையே பெரிதும் நம்பி இருப்பதால், இந்திய விவசாயிகளின் எண்ணிக்கையும் மிக அதிகமாயுள்ளது. இந்தியாவில் சற்றேறக்குறைய நூற்றுக்கு 75 போ விவசாயிகளே.

இவ்விவசாயிகட்கு வேறு துணைத்தொழில் ஒன்றும் இல்லை. விவசாயத்தில் செலவிட்ட நேரந்தவிர, மற்ற வேளைகளில் செய்யக்கூடிய குடிசைக் கைத்தொழிலொன்றையும், நம் நாட்டு விவசாயிகள் கைக்கொள்ளவில்லை. ஆகலால், பலருடைய வருமானம் மிகக் குறைவு. எனவே, இந்திய விவசாயிகளின் பொருள் நிலை மிகவும் கேவலமானதாய் இருக்கிறது.

இவர்களுடைய பொருளாதார நிலை மிக மோசமானதாய் இருப்பதுமன்றி, இவர்களுடைய கல்வி அறிவு நிலையும் மிகத்தாழ்ந்ததாகவே இருக்கிறது. இவர்களில் 100க்குச் சற்றேறக்குறைய 92 பேர் கல்வியறிவில்லாதவர். ஆதலால், இவர்கள் தங்களுடைய நிலைமையை விருத்தி செய்துகொள்ளும் சக்தியற்றவர்களாய் வருந்துகின்றார்கள்.

விவசாயிகட்குப் பல காரியங்களுக்காகப் பணம் வேண்டி இருக்கிறது. மத்திய பாங்குக் கமிட்டியார் எடுத்துக் காட்டியுள்ளபடி, விவசாயிகளின் கடன்

தேவைக்கும் மற்றவர் தேவைக்கும் சில வித்தியா சங்கள் உண்டு.

விவசாயமல்லாத மற்றத் தொழில்களுக்கு வேண்டிய பணத்தை, ஒரு கம்பெனி ஏற்படுத்தி, அதன் பங்குகளை விற்பதன் மூலம் பெற முடியும். கம்பெனி பலருடைய பொறுப்பின்பேரில் கடன் வாங்க முடியும். விவசாயியோ, தன் சொந்தப் பொறுப்பிலே தானேதான் கடன்கொள்ள முடியும்.

விவசாயம் இயற்கையின் போக்கையொட்டி இருப்பதால், அதைச் சில சமயங்களில் செவ்வை யாக நடத்த முடியும். சில சமயங்களில் அதிக மழை, மழையின்மை முதலிய காரணங்களால் விவ சாயம் நன்கு நடைபெருமற் போயினும், போகும். எனவே, விவசாயிகளுக்குக் கடன் கொடுப்பதில் ஒரு வித அசௌகரியமும் உண்டு.

மேலும், விவசாயிகள் தங்களுடைய விளை பொருள்களின் விலையைத் தங்களுடைய முயற்சி யால் விசேஷமாக மாற்ற முடியாது. ஆலைத்தொழி லாளிகளோ, தாங்கள் உற்பத்தி செய்யும் பொருள் களின் அளவை அவ்வப்போதுள்ள தேவைக்குத் தக்கவாறு மாற்றிக்கொள்ளலாம். ஆனால், விவசா யத்தைப் பொறுத்த வரையில், ஒரு வருஷத்தில் விசேஷமாக விளைவதோ, அல்லது விளைவின்றிப் போவதோ, அவ்வப்போதுள்ள சீதோஷ்ண ஸ்திதி யைப் பொறுத்ததாய் இருக்கிறது.

நீண்டகாலக் கடனாக விவசாயி வாங்க விரும் பினால், நிலத்தின் பேரிலேதான் கடன் வாங்க

வேண்டி இருக்கிறது. நிலத்தின்மேல் சாதாரணப் பாங்குகள் கடன் கொடுப்பதில்லை. மேலும், சாதாரணப் பாங்குகள் கடன் கொடுக்க முடியாததற்கு வேறு பல காரணங்களும் உண்டு.

கூட்டுப் பங்குப் பாங்குகள் (Joint-Stock Banks) பட்டினங்களில் ஆங்காங்கு இருக்கின்றன. அவை கிராமங்கள், நீண்ட தூரத்தில் இருக்கின்றன. அப்பாங்கு அதிகாரிகள், விவசாயி ஒவ்வொருவனுடைய நாணயம் தன்மை முதலியவைகளைப்பற்றித் தெரிந்துகொள்வது கஷ்டம்.

இரண்டாவதாக, அந்தப் பாங்குகளில் பணம் போடுபவர்களிற் பெரும்பாலோர் நீண்ட காலத்திற்கெனப் போடுவதில்லை. பணம் போட்டவர்கள் வேண்டும்போது கேட்டால், அப்பாங்குகள் கொடுக்கக் கடமைப்பட்டிருக்கின்றன. ஆகையால், அப்பாங்குகள் நீண்ட நாட் கடன்கள் கொடுக்க முடியாது.

மூன்றாவதாக, விவசாயிகள் கணக்கு வழக்குகளைச் சரியாக வைத்துக்கொள்ள முடியாதவர்களாய் இருக்கின்றார்கள். அப்பாங்குகள் விரும்பும் முறையில் விவசாயிகள் தங்கள் கணக்குகளை எழுத அசக்தர்களாயும் இருக்கின்றார்கள்.

எனவே, கூட்டுப் பங்குப் பாங்குகள் (Joint-Stock Banks) விவசாயிகட்குப் பயன்படாதவைகள்.

இவை போன்ற பல காரணங்களால் விவசாயிகளின் தேவைக்கான பணங் கொடுப்பதற்குச் சாதாரணப் பாங்குகளையல்லாத வேறு பாங்குகள்

தேவையாயிருக்கின்றன. இந்திய நாட்டில் மாத்திரமன்றி, அநேக நாடுகளில் விவசாயிகளின் தேவைக்கான பணத்தைத் தனிப்பட்ட பாங்குகளே கொடுக்கின்றன.

நிக்கல்சன் (Nicholson) என்பவர் விவசாயிகட்குக் கடன் கொடுப்பதற்கென ஏற்படுத்தும் ஸ்தாபனங்களே அவர்கட்குச் சிக்கனத்தைக் கற்றுக் கொடுப்பனவாய் இருக்க வேண்டுமெனக் கூறியிருக்கிறார். எனவே, விவசாயிகட்கென ஏற்படும் பாங்குகள் கடன் கொடுப்பதோடு நின்றுவிடாமல், விவசாயிகள் சிக்கன முறைகளால் பணம் சேர்க்கும்படியும் செய்ய வேண்டும். அவ்வாறன்றி விவசாயிகள் சுலபமாகக் கடன் வாங்குவதற்கு மாத்திரம் போதுமான சாதனங்களை ஏற்படுத்தினால், அவ்விவசாயிகள் கணக்கு வழக்கில்லாமல் செலவு செய்யக்கூடும்.

### (உ) விவசாயிகளின் கடன் தேவைகள்

விவசாயிகள் வாங்கும் கடன்களை இரண்டு விதமாகப் பிரிக்கலாம் :

(1) சில நாள் கடன் அல்லது குறுகிய காலக் கடன் (Short term Credit) :—விவசாயிகள் ஆண்டுதோறும் விவசாயம் நடத்துவதற்கு வேண்டிய செலவுகட்காகப் பணம் வேண்டி இருக்கிறது. அதற்காகப் பெரும்பாலும் அவர்கள் கடன் வாங்க வேண்டி இருக்கிறது. விவசாயச் செலவுகளென்பவை, உழவு மாடு வாங்கல், விரை, தசுக் கூலிச் செலவு, எரு,

முதலியவை வாங்கல் இவற்றிற்கேற்படும் செலவுக ளாகும். மேலும், வாய்க்கால் வெட்டல், வடிகால் வெட்டல், வேலி போடுதல், தண்ணீர் இறைப்பதற் கான கருவிகளை வாங்கல் முதலியவற்றிற்கு நேரி டும் செலவுகளையும் இவைகளில் சேர்க்கலாம்.

(2) **பல நாள் கடன் அல்லது நீண்ட நாள் கடன் (Long term Credit)** :—விவசாயிகள் சில சாஸ்வத மான காரியங்களுக்காகவும் செலவிட வேண்டி இருக்கிறதல்லவா? அவைகளுக்காகவெல்லாம் வாங் கும் கடன் நீண்ட நாள் கடனாகும். நிலம் வாங்கல், விவசாயத்திற்கான விலையுயர்ந்த யந்திரங்களை வாங் கல், பழங்கடன் கொடுத்தல் முதலியவைகளுக்காக வாங்கும் கடன்களும் இதில் அடங்கும்.

சென்னை மாகாணப் பாங்குக் கமிட்டியார் இக் குறுகிய காலக் கடன் எத்தன்மையதாக இருக்க வேண்டுமென்பதைப்பற்றிச் சில கருத்துகளை வெளி யிட்டிருக்கின்றனர்.

(1) இக்கடன்கள் விவசாயச் செலவு, சில்ல றைச் செலவுகள் இவைகளுக்காகவே வாங்கப்படுகின் றன. ஆகையால், சிறு தொகைகளே கடனாக வாங் கப்படுகின்றன. இக்கடன்கள் சுமார் எட்டு ஒன்பது மாதத் தவணையில் கொடுக்கப்பட வேண்டும். ஒவ் வொரு வருஷத்திலும் அறுவடை ஆனபிறகே இக் கடன் வசூலிக்கப்பட வேண்டும்.

(2) இக்கடன்கள் வேண்டும்போது, சிலநாட் களுக்குள், விவசாயி வாங்கக்கூடியனவாக இருக்க வேண்டும். உதாரணமாக, ஒரு மழை பெய்ததும்

ஒரு விவசாயி விதை விதைக்க விரும்புகிறதாக வைத்துக்கொள்வோம். அவனுக்கு மழையின் ஈரம் காய்வதற்கு முன்னுவது அவசியம் பணம் கிடைக்க வேண்டுமல்லவா ? உழவு, நடவு முதலிய சமயங்களில் சீக்கிரம் பணம் கிடைக்காவிட்டால் விவசாயிக்குக் கஷ்டம் உண்டாகுமல்லவா ?

(3) கொடுக்கப்படும் கடன் விவசாயியின் சாகுபடிக்குப் போதுமான பணமாக இருக்க வேண்டும். ஒரு விவசாயிக்கு உழவுக்குப் பணம் கிடைத்து, விதைக்குப் பணம் கிடைக்காவிட்டால், அவன் அவஸ்தைப்படத்தானே வேண்டும் ?

(4) இக்கடன்கட்கு வட்டி குறைவாக இருக்க வேண்டும். விவசாயிகட்கு விவசாயத்தில் வரும் இலாபம் மிகக்குறைவு. அப்படி இருக்க, அதிக வட்டிக்குப் பணம் வாங்கும் விவசாயிகட்கு நஷ்டமல்லவா ஏற்படும் ?

சாதாரணமாக இக்கடன்கள் சாகுபடிக் காலத்திற்கு முன் கொடுக்கப்பட வேண்டும். சாகுபடி முடிந்து அறுவடை ஆனதும் விவசாயிகள் இக்கடன்களைத் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும். ஒருக்கால் பயிர்ச் சேதமேற்பட்டால்தான், கடன் திருப்பிக்கொடுக்கும் தவணையை நீட்டிக்கொள்ளலாம்.

### நீண்ட காலக் கடன்

இக்கடன்கள் விவசாயத்தைத் திறம்பட நடத்துவதற்கெனக் கொடுக்கப்படுகின்றன. பழைய

கடனைத் தீர்க்கவும் இக்கடன்கள் வாங்கப்படுகின்றன. பொதுவாக, விவசாயிகள் நீண்ட காலக் கடன் வாங்கினால், விவசாயத்தில் வரும் இலாபத்திலிருந்து வருஷாவருஷம் கொஞ்சங் கொஞ்சமாகக் கொடுத்துச் சில வருஷங்களில் கடனை அடைத்துவிட வேண்டுமெனவே எதிர்பார்க்கப்படுகிறது. எனவே, எவ்வளவு காலத்தில் கடனைத் திருப்பிக் கொடுக்க வேண்டுமென்பது, கடன் எதற்காக வாங்கப்படுகிறதென்பதற்கும், வாங்கும் விவசாயி எத்தனை ஆண்டுகளில் கொடுக்கும் சக்தி உள்ளவன் என்பதற்கும் ஏற்ப, நிர்ணயிக்கப்படுகிறது.

பல தேசங்களில் இந்நீண்ட காலக் கடன் பல வருஷங்கள் வரையிலும் கொடுக்கப்படுகின்றன. பின்லந்தில் 30 வருஷத்திற்கும், ஆஸ்திரேலியாவில் 42 வருஷத்திற்கும், இட்டாலி ஜப்பான் முதலிய தேசங்களில் 50 வருஷத்திற்கும், ஸ்விட்ஜர்லந்தில் 57 வருஷத்திற்கும், ஹங்கேரியில் 63 வருஷத்திற்கும், அயர்லந்தில் $68\frac{1}{2}$ வருஷத்திற்கும், பிரான்சில் 75 வருஷத்திற்கும் இக்கடன்கள் கொடுக்கப்படுகின்றன.

குறுகிய காலக் கடன்களை இந்தியாவில் விவசாயிகள் கூட்டுறவுப் பாங்குகளிடமிருந்து பெறலாம்; நீண்ட காலக் கடன்களைக் கூட்டுறவு நில அடைமானப் பாங்குகளிடமிருந்து பெறலாம்.

இந்தியாவில் இவ்விரு விதக் கூட்டுறவு ஸ்தாபனங்களும் எப்படி எப்போது தோன்றி எவ்வாறு வளர்ந்திருக்கின்றன என்பதை இனிக் கவனிப்போம்:

## (௩) இந்திய கூட்டுறவு இயக்க வரலாறு

இந்தியாவிலே கூட்டுறவு இயக்கமானது உண்டானதற்கு முக்கியமானவராய் இருந்தவர் அரசினரே. அரசினர் உதவியாலேயே கூட்டுறவு இயக்கம் இன்னும் வளர்ந்துகொண்டு வருகிறது.

1883-ஆம் ஆண்டிலேயே பம்பாய் மாகாணத்தில் ஒரு விவசாய பாங்கு ஏற்படுத்த வேண்டுமென்று முயற்சி செய்யப்பட்டது.

1892-ஆம் ஆண்டிலே சென்னை அரசினர் கூட்டுறவை ஸ்தாபிக்க முயற்சி செய்தனர். **ஸர். பிரடரிக் நிக்கல்சன் (Sir Frederick Nicholson)** என்பவர், மேல் நாடுகளிலுள்ள கூட்டுறவு முறைகளைப் பரிசீலனை செய்து, இம்முறைகளை நம் நாட்டில் எவ்வளவு தூரம் கையாளலாமென ஆராய்ச்சி செய்தார். முக்கியமாக விவசாயிகளின் கடன் தொல்லையை எப்படி நீக்கலாம் என்பதே அவர் கவனித்த விஷயமாகும். நிக்கல்சன் இவ்விஷயங்களைப்பற்றி எழுதிய அறிக்கை இன்றும் சிறப்பும் பயனும் உடையதாய் இருக்கின்றது. ஜெர்மனியிலுள்ள கூட்டுறவுப் பாங்குகளைப்போல இந்தியாவிலும் ஏற்படுத்தல் நலமென அவர் அபிப்பிராயப்பட்டார். அரசினர் அவருடைய சிபாரிசுகளை அமுலுக்குக் கொண்டுவர உடனே முயற்சி செய்யவில்லை.

1900-ஆம் ஆண்டில் ஐக்கிய மாகாணத்து அரசியல் அதிகாரிகளில் ஒருவரான **ஹெச். டூபேர்**

னெக்ஸ் (Dupernex, I.C.S.) என்பவர், 'வட இந்தியா வின் ஜனங்களின் பாங்குகள்' என்னும் ஒரு நூலை எழுதினர். இப்புத்தகம் எளிய நடையில் அழகாய் எழுதப்பட்டிருந்தது. இதனைப் பலரும் விரும்பிப் படித்தனர். இதனுல் பலரும் கூட்டுறவு முறையைப் பாராட்டுவாராயினர்.

இந்தியாவின் வைஸ்ராயாகக் கர்சன் பிரபு (Lord Curzon) வந்ததும், அவர் இவ்விஷயத்தில் மிகுந்த அக்கறை எடுத்துக்கொண்டார். அவர், ஸர். எட்வர்டு லா (Sir Edward Law) என்பவரின் தலைமையில் ஒரு கமிட்டியாரை நியமித்தார். அக்கமிட்டியார், கூட்டுறவு விஷயங்களைப்பற்றி ஆராய்ச்சி செய்து, ஓர் அறிக்கையை வெளியிட்டனர். அதை அடிப் படையாக வைத்துக்கொண்டுதான் 1904-ஆம் வருஷத்தில் முதல் கூட்டுறவுச் சட்டம் இந்தியாவில் ஏற் படுத்தப்பட்டது.

(அ) இந்தியாவில் கூட்டுறவு முறையில் சில முயற்சிகள்

முதல் முதல் பஞ்சாபிலே 1892-ஆம் வருஷம் சில கிராம வாசிகள் கூடி, ஒரு கூட்டுறவு ஸ்தாப னத்தை ஏற்படுத்தினர்கள். கிராமத் தலைவர் முதலி யோர் கூடி நிருவாகக் கமிட்டி ஒன்றை ஏற்படுத்தி, ஊர்ப் பொது நிலத்தை விருத்தி செய்ய முயன்றுர் கள்; பொது நில வரும்படியைக் கொண்டு, அந் நிலத்தை மிகவும் செம்மைப்படுத்தி, அந்நிலம் பய னுள்ளதாகும்படி செய்தார்கள். இம்முயற்சி, கிராம வாசிகளிடையே பெரிய மன மாற்றத்தை உண்டாக்கியது.

இவைகளையன்றிச் சில அரசாங்க உத்தியோகத்தினருடைய முயற்சியாலும் சில சங்கங்கள் தோன்றின. 1898-ஆம் ஆண்டிலே பஞ்சாபிலே **'பரஸ்பர உதவிச் சங்கங்கள்'** (Mutual help Associations) சில ஏற்படுத்தப்பட்டன. இச்சங்கங்களின் அங்கத்தினர்கள், தங்களுக்குள்ளேயே நிருவாகஸ்தர்களைத் தேர்ந்தெடுத்தார்கள். ஒவ்வோர் அங்கத்தினரும் வருஷந்தோறும் தமது அறுவடையிலிருந்து அல்லது விளைபொருளிலிருந்து நூற்றுக்கு $2\frac{1}{2}$ வீதம் சாமானுகவே கொடுத்துவிடுவது என ஏற்பாடு செய்யப்பட்டது. அப்படிக் கொடுக்கப்பட்ட சாமான்களை விற்று, அந்தப் பணத்தை அவரவர் பெயரில் இச்சங்கங்கள் வைத்துக்கொள்ளலாயின. இச்சங்கங்கள் இப்பணத்தைத் தபாலாபீஸ் சேவிங்க்ஸ் பாங்குகளில் (Post office savings Banks) போட்டுவைப்பது வழக்கம். அதுவுமல்லாமல், இப்பணத்தில் சில பகுதியைக் கடன் கொடுத்து வைப்பதுமுண்டு.

ஐக்கிய மாகாணங்களில் **ஹேச். டுபேர்னேக்ஸ்** (H. Dupernex I. C. S.) என்பவர் 1901-ஆம் வருஷத்தில், **'ஜனங்களுடைய பாங்குகள்'** (Peoples' Banks) என்னும் ஒரு நூலை எழுதியதோடமையாது, சில குறித்த கிராமங்களில், ஜெர்மனித் தேசத்திலுள்ள ரெய்பசின் (Raiffeisen) பாங்குகளைப்போன்ற சில கூட்டுறவுப் பாங்குகளை உண்டாக்கினர்.

இவைகளையன்றி, அவர் ஒவ்வொரு ஜில்லாவிலும் பல **'ஏற்பாட்டுச் சங்கங்கள்'** (Organisation

Societies) என்பவைகளை உண்டாக்கினர். அச்சங்கங்களின் நோக்கங்கள் நான்கு எனக் கூறப்பட்டன. அவையாவன, (1) ஒவ்வொரு ஜில்லாவிலும் கூட்டுறவைப்பற்றிய அறிவு பரவும்படி செய்தல், (2) கிராம பாங்குகளை ஏற்படுத்தி அவைகளை மேற்பார்த்தல், (3) ஒவ்வொரு கிராம பாங்குக்கும் பணம் கடன் கொடுத்தல், (4) கிராம பாங்குகள் கணக்கு முதலியவைகளைச் சரியாக வைத்துள்ளனவா எனக் கண்காணித்தல் என்பன.

இவை சிலகாலம் இருந்து, பின் இறந்தொழிந்தன. இவை அழிந்ததற்குக் காரணங்கள் பல. இந்தக் கூட்டுறவுப் பாங்குகளை ஏற்படுத்திய கிராம வாசிகட்கும், பல உத்தியோகத்தினருக்கும் கூட்டுறவு முறைகளைப்பற்றிய விஷயங்கள் யாவும் தெரியவில்லை; கூட்டுறவு ஸ்தாபனங்களை நடத்தும் அநுபவமும் இல்லை. மேலும், இந்தப் பாங்குகட்கு என ஏற்படுத்திய விதிகள், சட்டதிட்டங்கள், கிராம வாசிகளுக்கு எளிதில் தெரிந்துகொள்ள முடியாத அவ்வளவு சிக்கலாய் இருந்தன. அதுவுமன்றி, இந்தப் பாங்குகளுக்காக வாங்கப்பட்ட பணங்கள் உத்தியோகத்தினருடைய செல்வாக்கின் பேரில் குறைந்த வட்டிக்கு வாங்கப்பட்டன; குறைந்த வட்டிக்குத்தான் அங்கத்தினர்கட்கும் கொடுக்கப்பட்டன. எனவே, தரும எண்ணத்தை ஆதாரமாகக்கொண்ட இப்பாங்குகள், நீண்ட நாள் இல்லை.*

* John Matthai—Agricultural Co-operation, 14.

## (ஆ) இந்திய கூட்டுறவுச் சட்டங்கள்

### (1904, 1912 - ஆம் வருஷத்தியவை)

1904-ஆம் வருஷத்திலே இந்தியாவில் முதல் முதலாகக் கூட்டுறவு இயக்கச் சட்டம் உண்டாக்கப் பட்டது.

இச்சட்டத்தின்படி கூட்டுறவு ஸ்தாபனங்கள் (பாங்குகள்) இரண்டு வகையாகப் பிரிக்கப்பட்டன. அவை, (1) நகரச் சங்கங்கள் (2) கிராமச் சங்கங்கள் என்பன. நகரச் சங்கங்களில் ஐந்தில் நான்கு பங்கு அங்கத்தினர்களாவது விவசாயிகளல்லாத வர்களாதல் வேண்டும். கிராமச் சங்கங்களில் ஐந் தில் நான்கு பங்கு அங்கத்தினர்களாவது விவசாயி களாய் இருத்தல் வேண்டும்.

இரு வகைச் சங்கங்களிலும் உள்ள அங்கத்தி னரின் பரஸ்பர உதவியாலேதான் பல காரியங் களைச் சாதிக்கக்கூடும் என்பதை இச்சட்டம் வற் புறுத்தியது.

இச்சட்டம் கூட்டுறவுப் பாங்குகளை நியமிப்ப தற்குத்தான் இடங்கொடுத்தது; மற்றும் பல வகைக் கூட்டுறவுச் சங்கங்களை ஏற்படுத்த இச்சட் டத்தில் எவ்வித ஏற்பாடும் செய்யப்படவில்லை. காரணம், கூட்டுறவு முறையே இந்தியாவுக்குப் புதி யது. மேலும், கூட்டுறவுப் பாங்கு நிருவாகம் மற் றைய கூட்டுறவு ஸ்தாபனங்களின் நிருவாகம் போல அவ்வளவு சிரமமானது அன்று. அல்லாமலும், இந்திய விவசாயிகளின் பெரிய தொல்லை, கடன்

தொல்லேயே. அதை ஒரு வகையாக ஒழிக்கக் கூட்டுறவுப் பாங்குகளே முதலில் அவசியம் ஏற்பட வேண்டும். ஆகையாலேதான் 1904-ஆம் வருஷச் சட்டம் கூட்டுறவுப் பாங்குகளின் அமைப்பையே விரும்பியது.

ஏதாவது ஓர் ஊரில் உள்ள பத்துப் பேராவது, அவர்களுக்கு மேற்பட்டவராவது ஒன்று சேர்ந்து ஒரு சங்கத்தை ஏற்படுத்தலாம். ரெஜிஸ்டிராரின் (பதிவாளர்) உத்தரவு பெற்றால், ஒரே ஜாதியினர் சேர்ந்தும் தமக்கென ஒரு கூட்டுறவுப் பாங்கை ஏற்படுத்திக்கொள்ளலாம்.

மேலே கூறப்பட்ட பாகுபாட்டின்படி சங்கங்கள் (1) நகரச் சங்கங்கள், (2) கிராமச் சங்கங்கள் என இரு வகைப்படும். நகரச் சங்கங்களின் பொறுப்புப் பெரும்பாலும் வரையறுக்கப்பட்டது. கிராமச் சங்கங்களின் பொறுப்போ, வரையறுக்கப்படாதது.

கிராமச் சங்கத்தின் இலாபம் சேம நிதியில் சேர்க்கப்பட வேண்டும். அந்நிதியைச் சாதாரணமாகப் பங்கிட்டுக்கொடுப்பது இல்லை. சில சமயங்களில் இலாபத்தை வட்டி குறைவுக்காக உபயோகிக்கலாம்.

நகரச் சங்கங்கள் மொத்த இலாபத்தில் நானகில் ஒரு பங்கையாவது சேம நிதிக்கு ஒதுக்கி வைக்க வேண்டும். இச்சங்கங்கள் தங்களுடைய அங்கத்தினருக்குத்தான் கடன் கொடுப்பது வழக்கம். ரெஜிஸ்டிரார் உத்தரவின்பேரில், வேண்டுமானால் கிராமச் சங்கத்துக்கும் கடன் கொடுக்கலாம்.

எந்த அங்கத்தினரும் 1000 ரூபாய்க்கு மேற் பட்ட மதிப்புள்ள பங்குகளை வாங்கக் கூடாது; எந்த அங்கத்தினருக்கும் ஓர் ஓட்டுக்கு (Vote) மேற் கிடையாது.

இச்சங்கங்கள், தங்களுக்கு வேண்டிய முதலை, பிரவேசக் கட்டணம், அங்கத்தினரின் பங்குத் தொகை, அங்கத்தினரின் விடுமுதல் (Deposits), வெளியிலிருந்து வாங்கும் கடன் முதலியவைகளால் சேகரிக்கலாம். அந்தப் பணமெல்லாம் அங்கத் தினருக்கு மாத்திரந்தான் கடனைக் கொடுக்கப் படலாம்.

இச்சங்கங்களைக் கவனிக்க ரெஜிஸ்டரார் (பதி வாளர்) நியமிக்கப்பட்டார். கட்டாயமாகக் கணக் குப் பரிசோதனை செய்தல், அவசியமானால் ஒரு சங் கத்தைக் கலைத்தல், சங்கங்களுக்கான சட்ட திட்டங் களை ஏற்படுத்தல் முதலிய அதிகாரங்கள் அரசினர் கையில் இருந்தன.

அரசாங்கத்தினர் இச்சங்கங்கள் விருத்தி அடைவதற்குப் பல வித விசேஷ சலுகைகள் காட்டி உள்ளனர்.

இச்சட்டம் ஏற்பட்டதன் பின், கூடிய சீக்கி ரம் நாட்டின் பல பாகங்களிலும் இச்சங்கங்கள் பல தோன்றின. இவைகளின் தோற்றமும் வளர்ச்சியும் மிக விரைவாகவே இருந்த நடை முறையில் 1904-ஆம் வருஷச் சட்டத்தில் பல குறை பாடுகள் காணப்பட்டன. பல கூட்டுறவுச் சங்கங் களும் தங்களுக்குள் யூனியன்களையும், மத்திய

அமைப்புகளையும் ஏற்படுத்திக்கொண்டு வெளியி லிருந்து பணம் பெறுவதற்கான ஏற்பாடு, இச்சட் டத்தில் இல்லை. சங்கங்களை மேற்பார்வை பார்ப்ப தற்கும் சங்கங்களே சில ஸ்தாபனங்களை ஏற்படுத் திக்கொள்வதற்கும் இல்லை.

நகரச் சங்கங்களையும், கிராமச் சங்கங்களையும் பிரிக்கும் முறை அவ்வளவு சௌகரியமானதாகக் காணப்படவில்லை. வரையறுக்கப்பட்ட பொறுப் புடையதா அல்லவா என்பதையொட்டிய பிரிவே செம்மையானது என நடை முறையில் காணப் பட்டது.

1904-ஆம் வருஷச் சட்டத்தில் கூட்டுறவுப் பாங்குகள் தவிர, வேறு வகைச் சங்கங்கள் ஏற்படுத் தச் சட்டத்தில் இடம் இல்லை.

இந்தக் குறைபாடுகளையும் வேறு சில குறை பாடுகளையும் நீக்குவதற்கு 1912-ஆம் ஆண்டில் புதியதொரு கூட்டுறவுச் சட்டம் ஆக்கப்பட்டது.

### (இ) 1912-ஆம் வருஷக் கூட்டுறவுச் சட்டம்

இச்சட்டம் எல்லா வகைக் கூட்டுறவு ஸ்தாப னங்களும் ஏற்படுவதற்கு இடங்கொடுத்தது. விளை பொருள்களை விற்றல், இன்ஷியூரன்ஸ், பால் சப்ளை, எரு விவசாயக் கருவிகள் முதலியவைகளை வாங்கல், சாதாரண தேவைப் பொருள்களைக் கொள்ளல் ஆகிய இவை போன்ற பல காரியங்களுக்கும் கூட்டுறவுச் சங்கங்களை ஏற்படுத்தலாம் என இச் சட்டம் அநுமதித்தது.

இச்சட்டத்தின்படி பாங்கின் தொடர்புடைய ஸ்தாபனங்கள் மூவகையாக நிறுவப்பட்டன. முதலாவது வகையைச் சேர்ந்தவை, யூனியன்கள். இவைகள், சங்கங்களே தங்களுக்குள் பரஸ்பர உதவிக்காகவும், கணக்குச் சோதனைக்காகவும் ஏற்படுத்தக் கூடியவை. இரண்டாவது வகையைச் சேர்ந்தவை, மத்திய பாங்குகள். இவைகள், பல கூட்டுறவுச் சங்கங்களும் (பாங்குகள்), தனிப்பட்டவரும் சேர்ந்து நிறுவத்தக்கவை. மூன்றாவது வகையைச் சார்ந்தவை, மாகாண பாங்குகள். இவைகள் பெரும்பாலும் தனிப்பட்டவர்கள் சேர்ந்து உண்டாக்கக் கூடியவைகள்.

இலாபத்தில் பங்கு வீதம் செய்துகொள்வதில் இச்சட்டத்தில் சில மாறுதல்கள் செய்யப்பட்டன. இலாபத்தில் 100க்கு 25 பங்கு சேம நிதிக்காக ஒதுக்கி வைக்கப்பட வேண்டும். மீதியில் நூற்றுக்குப் பத்துப் பங்குக்கு மேற்படாத தொகை கல்வி முதலிய பொது நன்மைகளுக்காக உபயோகிக்கப்பட வேண்டும். பாக்கி இலாபம், அங்கத்தினரிடையே இலாபமாகப் பங்கிடப்படலாம். இந்த இலாபம், வரையறுக்கப்படாத பொறுப்புள்ள சங்கங்களின் பங்குத் தொகையின் பேரில் அங்கத்தினருக்குள் பிரித்துக் கொடுக்கப்படலாம். இந்த முறையை அநுஷ்டிக்க அநுமதித்ததன் காரணம், சென்னை, பஞ்சாபு, பர்மா முதலிய மாகாணங்களில் அங்கத்தினர்கள் கொடுத்துள்ள பங்குத் தொகை மிக அதிகமாக இருந்ததேயாகும்.

1914-ஆம் வருஷத்தில் **ஸர். எட்வர்டு மாக்லேகன் (Sir Edward Maclagan)** என்பவரின் தலைமையில் கூட்டுறவு இயக்கத்தின் முன்னேற்றத்தைப் பற்றி ஆராய்வதற்கு ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டது. அக் கமிட்டியார் கூறியுள்ள விஷயங்களிற் பல இன்னும் மிக உபயோகமானவை.

இந்தக் கூட்டுறவுச் சங்கங்கள் 1919-ஆம் ஆண்டு அரசியல் திருத்தங்கள் வரையில் மத்திய அரசாங்கத்தின் கவனிப்பில் இருந்தன. ஆனால், அதற்குப் பிறகு மாகாண அரசாங்கங்களின் ஆதிக்கத்தின் கீழும் ஆதரவின் கீழும் இருக்கின்றன. சிற்சில மாகாணங்களில் மாகாண நிலைக்கேற்பத் தனிச் சட்டங்களால் இச்சங்க முறைகளில் சிற்சில மாறுதல்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன.

மற்றத் தேசங்களைவிட இத்தேசத்திலே இச் சங்கங்கள் மிக விரைவாகவே வளர்ந்துள்ளன. ஜெர்மனி தேசத்திலே, ஆரம்ப காலத்தில் கூட்டுறவு இயக்கத்திற்கு இடையூறுகள் பல இருந்தன; அங்கே முதல் முப்பது வருஷங்களில் முப்பது சங்கங்களே ஏற்பட்டன; ஆஸ்திரியாவிலே முதல் பத்து வருஷங்களில் பதினைந்து சங்கங்களே தோன்றின; இந்தியாவிலே முதல் பத்து வருஷங்களில் சுமார் 18 ஆயிரம் சங்கங்கள் உண்டாயின.

## (ச) கிராமச் சங்கங்கள் அல்லது ஆரம்பச் சங்கங்கள் (The Primary Societies)

ஓர் ஊரில் பத்துப் பேருக்குக் குறையாமல் கூடி ஒரு சங்கத்தைத் துவக்கலாம். அவர்கள்

ஒருவரை ஒருவர் நன்றாக அறிந்திருக்க வேண்டும். ஓர் ஊரில் பல நிலைமையில் இருப்பவர்களும், பல தொழிலில் ஈடுபட்டவர்களும் இச்சங்கங்களில் ஒன்றுசேரக் கூடும். இச்சங்கங்களால் பலரிடையே சகோதர உணர்ச்சி உண்டாகிறது.

பெரும்பாலும் இச்சங்கங்கள் ரெய்பசின் (Raiffeisen) சங்கங்களையொட்டியே ஏற்படுத்தப் பட்டுள்ளன.

இந்தச் சங்கங்களின் அமைப்பு மிகவும் சாதாரணமானது. ஒரு கிராமத்திலுள்ள ஒவ்வொருவரும், மற்றவர்களால் ஒழுங்கானவரென்று கருதப் பட்டால் இச்சங்கங்களின் அங்கத்தினராகக் கூடும். எல்லா அங்கத்தினருடைய சொத்து விவரங்களும் வருஷந்தோறும் கணக்கிடப்படுகின்றன. அந்த விவரங்களெல்லாம் ஒரு பட்டியலில் குறித்து வைக்கப்படுகின்றன. ஒரு சங்கம் செவ்வையாக நடப்பதற்கு இப்பட்டியல் மிகவும் முக்கியமானது.

சாதாரணமாக எந்தச் சங்கத்திலும் பத்துப் பேருக்குக் குறையாத அங்கத்தினர் உண்டு. பெரும்பாலும் 100 அங்கத்தினருக்குமேல் இருப்பதில்லை. சங்கம் மிகப்பெரியதாகிவிட்டால், அங்கத்தினர் ஒருவரையொருவர் நன்றாக அறிந்துகொள்ள முடியாது.

அநேகமாக இந்தச் சங்கங்களில் அங்கத்தினரின் பொறுப்பு வரையறுக்கப்படுவதில்லை. ஏதாவது ஒரு சங்கத்திற்கு நஷ்டமேற்பட்டால், அங்கத்தினர் கொடுக்க வேண்டிய பங்குத் தொகையில்

பாக்கி கொடுபடாது நின்றால், அதை வசூலித்து அதிலிருந்து ஈடு செய்யப்படும். அது போதாவிட்டால், ஆளுக்கு இவ்வளவென்று வீதப்படி பணம் வசூலிக்கப்பட்டு அதிலிருந்துநஷ்டஈடு செய்யப்படும்.

அரசாங்கத்தின் விசேஷ உத்தரவிருந்தால் தான் இச்சங்கங்களின் பொறுப்பானது வரையறுத்து வைக்கப்படும்.

இப்படிப்பட்ட வரையறுக்கப்படாத பொறுப்பு முறை ஏற்படுத்தப்பட்டிருப்பதால், ஒவ்வொருவரும் சங்கத்தின் நஷ்டத்தை (ஏதாவது நஷ்டமேற்பட்டால்) ஈடு செய்ய வேண்டி இருக்கிறது. எனவே, ஒவ்வொருவரும் மற்றவர்களுடைய காரியத்தையும், சங்கத்தின் விஷயங்களையும் கவனிப்பர்.

## (1) முதல் தொகை

இச்சங்கங்களின் முதல் தொகை, அங்கத்தினர் பங்குத் தொகை, அங்கத்தினரும் மற்றவர்களும் கொடுக்கும் கடன்கள், போடுமுதல்கள்; வேறு சங்கங்கள் மத்திய சங்கங்கள் முதலியவைகளிடமிருந்து பெறும் பணம் ஆகிய இவைகளால் ஆகியது.

சில இடங்களில் அங்கத்தினர்கள் பங்குத் தொகை (Share Capital) கொடுக்க வேண்டுமென்னும் கட்டாயம் இருக்கிறது; வேறு சில இடங்களில் பங்குத் தொகை கொடுக்க வேண்டுமென்னும் நியதி இல்லை.

பஞ்சாபு, ஐக்கிய மாகாணங்கள், சென்னை, பர்மா முதலிய மாகாணங்களில் அநேகமாக எல்

லாச் சங்கங்களும் பங்குத் தொகையை வசூலிக்கின்றன. மற்றைய மாகாணங்களில் பங்குத் தொகையை வசூலிக்கும் சங்கங்களும், அதை வசூலிக்காத சங்கங்களும் ஆகிய இரு வகைச் சங்கங்கள் காணப்படுகின்றன.

ஒரு சங்கத்தில் அங்கத்தினராக விரும்பும் எவரும், சாதாரணமாகப் பங்குத் தொகையைக் கொடுக்க வேண்டும். அந்தப் பங்குத் தொகை, அச் சங்கத்தை விட்டு வரும்போது, அந்த அங்கத்தினருக்குத் திருப்பிக் கொடுக்கப்படும். ஒரு சமயம் நஷ்டமேற்பட்டால், அப்பங்குத்தொகைப்பணத்தை அச்சங்கம் உபயோகித்துக்கொள்ளலாமென்பது இத்திட்டத்தின் நோக்கம்.

சில மாகாணங்களிலே அங்கத்தினர்கள் பத்து வருஷகாலம் வரையில், ஆறு மாதத்திற்கு ஒரு முறையாவது அல்லது வருஷத்திற்கு ஒரு முறையாவது, குறித்த தொகையைக் கொடுத்து வர வேண்டும். பத்தாவது வருஷக் கடைசியில் ஒரு பெரிய தொகை சேர்ந்ததும், அந்த உறுப்பினர் அத்தொகையைப் பெற்றுக்கொள்ளலாம். சில சங்கங்கள் இந்தப் பங்குத் தொகைக்கு இலாபம் கொடுப்பதில்லை. வேறு சில, இலாபத்தில் காற்பங்கைச் சேம நிதிக்கென ஒதுக்கி வைத்துவிட்டு, பாக்கியை அங்கத்தினருக்குப் பங்கிட்டுக் கொடுக்கின்றன.

இச்சங்கங்கள் பங்குத் தொகையை வசூலிப்பது நன்மையா தீமையா என்பதைப்பற்றி ஒரே வித அபிப்பிராயம் காணப்படவில்லை. பங்குத் தொகை

யை வாங்குவதில் கீழ்க்கண்ட நன்மைகள் உண்டென டாக்டர் மேத்தாய் (Dr. Matthai) கூறி இருக்கின்றார்: (1) சிறு விவசாயிகள் நீண்ட நாளைக்குப் பணம் போட்டுவைக்க அது உதவியாக இருப்பதால், விவசாயிகளிடையே சிக்கனக் குணத்தை அது வலுப்படுத்துகிறது, (2) பங்குத் தொகை கூட்டுறவுச் சங்கத்தின் வலிமையைக் காட்டுகிறது. ஆகையால், வெளியார் பணம் போடுவதற்கு அது தூண்டுகோலாய் இருக்கின்றது. (3) கஷ்டமான நிலைமையுள்ள காலங்களில், அங்கத்தினர்களின் சொத்து மதிப்புக் குறைந்துபோம்; ஆனால், பங்குத் தொகை அப்படியே இருக்கும். (4) அங்கத்தினர் பங்குத் தொகையைக் கொடுத்திருந்தால், ஏதாவது நஷ்டம் ஏற்படும்போது, அந்த நஷ்டத்தை அப் பங்குத் தொகையிலிருந்து ஈடு செய்துகொள்ளலாம். அதுவுமன்றி, அந்தச் சமயத்தில் அங்கத்தினரிடமிருந்து வசூலித்து நஷ்ட ஈடு செய்வதென்றால் கஷ்டமாக இருக்கும். (5) சேமநிதி ஏற்படுத்தப்பட்டாலும் ஏற்படுத்தப்படாவிட்டாலும், பங்குத் தொகையே ஒரு விதச் சேம நிதியாய் உபயோகப்படுகிறது.

பல சங்கங்களில் இலாபத்திலிருந்து சேம நிதி ஏற்படுத்தப்படுகிறது. இந்தியாவில் வட்டி வீதம் அதிகமாய் இருப்பதால், இச்சங்கங்கள் நல்ல இலாபத்தைப் பெறுகின்றன.

பொதுவாக இச்சங்கங்கள் அங்கத்தினர்களிடமிருந்தே விடுமுதல் தொகையை அதிகமாகப் பெற வேண்டுமெனக் கருதப்படுகிறது.

## (2) போடுமுதல் (விடுமுதல்) (Deposit)

அங்கத்தினர்கள் இது வரையில் தங்களுடைய சிக்கனத்தால் பணம் சேர்த்து அதிக தொகையை இச்சங்கங்களிற் போடுவதைக் காண முடியவில்லை. அங்கத்தினர் பலரும் பணம் சேர்த்து இச்சங்கங்களில் போட வேண்டுமென்பதே இவைகளின் முக்கிய நோக்கம். ஆனால், அது இன்னும் கைகூடவில்லை.

இச்சங்கங்களிற் சில சேவிங்க்ஸ் பாங்குகள் (Savings Banks) ஆக நடக்க வேண்டுமெனச் சிலர் கருதுகின்றனர். சேவிங்க்ஸ் பாங்காக நடக்கும் சங்கத்தில் எந்தச் சமயத்திலும் பணம் கேட்டால் கொடுக்கும்படி பெரிய தொகையை எப்போதும் வைத்திருக்க வேண்டும். அதில் மோசடிகள் ஏற்படுவதற்கு இடமிருக்கிறது. மேலும், அரசாங்கத் தபாலாபீஸ் சேவிங்க்ஸ் பாங்குகள் இருக்கும்போது இவை அத்துணை அவசியமானவை அல்ல.

சில சங்கங்கள், கட்டாயமாக ஒவ்வொருவரும் குறித்த காலம் வரையில் ஒரு தொகையைப் போடுமுதலாகப் போட வேண்டுமென விதி ஏற்படுத்தி உள்ளன. இதிலுள்ள சௌகரியம் அதிகமன்று; கடன் வாங்க வரும் அங்கத்தினர் இப்பணம் கட்ட முடியாததால் கஷ்டப்படவும் நேரிடுகிறது.

அங்கத்தினரல்லாதவரை இச்சங்கங்களில் பணம் போடும்படி செய்வது கூடுமா கூடாதா என்பதைப்பற்றி ஒரு வகைப்பட்ட அபிப்பிராயமும் இல்லை. என்றாலும், சங்கத்தின் ஆரம்ப காலத்தில் அங்கத்தினர் போட்டு வைக்கும் பணம் மாத்திரம்

கடன் வாங்கும் அங்கத்தினருக்குக் கொடுக்கப் போதுமானதாக இராது ஆதலால், வெளியார் போடும் பணத்தையும் இச்சங்கங்கள் பெற்றுக் கொண்டு, அதற்கு ஒரு குறித்த வட்டியைக் கொடுக்கலாம். அப்படி வெளியார் போடும் பணத்துக்குக் கொடுக்கப்படும் வட்டி, அங்கத்தினர் போடும் பணத்திற்குக் கொடுக்கப்படும் வட்டியைவிட அதிகமாய் இருக்கக் கூடாது. ஏனென்றால், அங்கத்தினராய் இருந்து பணம் போடுவதைவிட, வெளியாராயிருந்து பணம் போடுவதில் அதிக வட்டி கிடைக்குமானால், அங்கத்தினராவதற்குப் பலர் முன் வரமாட்டார்.

இச்சங்கங்கள் நான்கு இடங்களிலிருந்து கடன் வாங்கக் கூடும். அக்கடன் வகைகள்: (1) கவர்ன் மெண்டாரிடமிருந்து பெறும் கடன், (2) மத்திய பாங்குகள், மாகாண பாங்குகள் இவைகளிடமிருந்து வாங்கும் கடன், (3) வேறு சங்கங்களிடமிருந்து வாங்கும் கடன், (4) தனிப்பட்ட மனிதர்களிடமிருந்தாவது, தனிப்பட்ட ஸ்தாபனங்களிடமிருந்தாவது வாங்கப்படும் கடன் என்பனவாம்.

ஒரு சங்கமானது மற்றொரு சங்கத்துக்கு நேரே கடன் கொடுப்பது அவ்வளவு சிறந்த முறை அன்று. அப்படிக் கொடுக்க வேண்டி நேரிட்டால், அச்சங்கம் மத்திய பாங்கின் மூலமாகக் கொடுப்பதே நல்லது. ஆனாலும், இந்திய கூட்டுறவுச் சட்டப்படி ஒரு சங்கம் மற்றொரு சங்கத்துக்கு நேரே கடன் கொடுக்கலாம். ஆனால், அதற்கு ரெஜிஸ்டராரின் அநுமதி வேண்டும்.

(3) சேம நிதி

இக்கூட்டுறவுச் சங்கத்தின் இலாபம், சேம நிதியாகச் சேர்த்து வைக்கப்படுகிறது. எச்சங்கமும், தான் வாங்கும் பணத்துக்குக் கொடுக்கும் வட்டி, தான் கொடுக்கும் தொகைக்கு வாங்கும் வட்டியை விடக் குறைவாகக் கொடுக்கிறது. தான் கொடுக்கிற வட்டிக்கும் வாங்குகிற வட்டிக்கும் உள்ள வித்தியாசந்தான், சங்கத்திற்குக் கிடைக்கும் இலாபமாகும்.

"சங்கம் குறைந்த வட்டிக்கே ஏன் கடன் கொடுக்கக் கூடாது? உயர்ந்த வட்டிக்குக் கொடுத்து ஏன் இலாபம் சேர்க்க வேண்டும்?" எனச் சிலர் கேட்கலாம். கூட்டுறவுச் சங்கங்கள், அந்த அந்தப் பிரதேசத்தில் சாதாரணமாகக் கடன்களுக்கு எவ்வளவு வட்டி கொடுக்கப்படுகிறதோ, அதைவிட மிகக் குறைவான வட்டிக்குக் கொடுத்தால், சில அங்கத்தினர்கள் கூட்டுறவுச் சங்கங்களில் கடன் வாங்கி, அதிக வட்டிக்கு வெளியிலே கடன் கொடுத்து, தங்கள் சொந்த முறையில் இலாபம் சம்பாதிக்க முயலலாம். ஆகவே, சங்கம் மிகக் குறைவான வட்டிக்குக் கடன் கொடுப்பதில்லை.

ஜெர்மனியிலே ரெய்பசின் இச்சங்கங்களை நிறுவிய போது, வரும் இலாபத்தைச் சேம நிதியாகவே ஒதுக்கி வைக்க வேண்டுமென்று ஏற்பாடு செய்தார். அப்படி இலாபத்தைச் சேம நிதியாக ஒதுக்கி வைக்காவிட்டால், கடன் வாங்குகிற அங்கத்தினர்கட்கும், கடன் வாங்காது பணம் போட்

டிருக்கிற அங்கத்தினர்கட்கும் மனக் கசப்பு உண்டாகக் கூடும். கடன் வாங்குகிற அங்கத்தினர்கள் "இலாபம் எதற்கு? வட்டியை இன்னும் ஏன் குறைக்கச் கூடாது?" என்று சொல்லக்கூடும். கடன் வாங்காத அங்கத்தினர்கள் வட்டியை உயர்த்தி வைப்பதன் மூலம் அதிக இலாபம் பெற முயலலாம். ஆகவே, அக்கஷ்டம் நேரிடாதவாறு ரெய்பசின் இலாபம் முழுவதையும் சேமிப்பு நிதியாக வைக்க வேண்டும் என்று திட்டம் வகுத்துள்ளார்.

வருகிற இலாபம் எல்லாம் தனிப்பட்ட மனிதருடையதன்று; சங்கத்துக்கே பொதுவான ஒரு தொகை. ஒரு சமயம் ஒரு சங்கம் கலைந்துபோனால் நஷ்ட ஈடு செய்யவும், சங்கம் கொடுக்க வேண்டிய தொகையைக் கொடுக்கவும், இன்னும் இதுபோன்ற காரியங்களைச் செய்யவும், இச்சேம நிதி உபயோகப்படுகிறது.

1912-ஆம் வருஷச் சட்டப்படி இந்த இலாபத்தில் ஒரு பகுதியைத் தரும காரியங்கட்கும் கல்விக்கும் உபயோகிக்கலாம். பங்குத் தொகையை வாங்கும் சங்கங்கள், ஒரு குறித்த விகிதத்திற்கு மேற்படாத தொகையைப் பங்காளர்களுக்கு இலாபப் பங்காகக் கொடுக்கலாம்.

சங்கங்கள் பங்குத் தொகையை வாங்குவதில்லையானால், இலாபம் முழுவதும் சேம நிதிக்கெனவே ஒதுக்கி வைக்கப்படும். பங்குத் தொகை உள்ள சங்கங்களிற்கூட நூற்றுக்கு 25 பங்குக்குக் குறையாத

தொகையைச் சேம நிதிக்கென ஒதுக்கி வைத்த பிறகுதான், இலாபப் பிரிவினை செய்யப்படும்.

இந்தச் சேம நிதியானது கூட்டுறவு மத்திய பாங்குகளில் விட்டுவைக்கப்படுகிறது. எச். டபிள்யூ. உல்பு (H. W. Wolff) என்பவர், இச்சேம நிதியை அங்கத்தினருக்குக் கடன் கொடுக்கவும் உதவலாம் என்று அபிப்பிராயப்படுகிருர். அப்படிச் செய்தால், சங்கம் உபயோகிக்கும் பணம் அதிகமாக இருக்கிறது; சங்கம் துணிந்து சில காரியங்களைச் செய்ய அது உதவுகிறது. பொதுவாகக் கூறுமிடத்து, இச்சங்கங்கள் ஆரம்ப காலத்தில் வேண்டுமானல் சேம நிதியை வெளியிடங்களில் போட்டு வைக்காமல் உபயோகிக்கலாம்; ஆனல், நாளடைவில் இச்சேம நிதி வெளிக் கூட்டுறவுப் பாங்கிலேதான் போட்டு வைக்கப்படல் வேண்டும்.

## (4) கடன் கொடுத்தல்

இச்சங்கங்களின் அங்கத்தினர்கள், பல காரணங்களுக்காகக் கடன் வாங்குகிருர்கள். சில, பயனுள்ள செலவு செய்வதற்காகவும், வேறு சில, பயனில்லாச் செலவுக்காகவும், மற்றுஞ் சில, பழங் கடன் கொடுத்துத் தீர்ப்பதற்காகவும் வாங்கப்படுகின்றன. விவசாயிகளின் முக்கியமான தேவைகள், (1) விவசாயச் செலவு (பயிர்ச்செலவு) செய்தல், (2) மாடு முதலியவைகள் வாங்கல், (3) பழங் கடன் தீர்த்தல். இவையல்லாமல் விவசாயி இன்னும் பல காரியங்களுக்காகவும் கடன் வாங்குகிருன்.

அவைகளுட் சில: நில வாய்தா கொடுத்தல், குடும்பச் செலவு செய்தல், சுபாசுப காரியங்களுக்காகச் செலவு செய்தல், கோர்ட்டில் வழக்காடல், பிள்ளையைப் படிக்க வைத்தல், வேறு பல வகைச் செலவு செய்தல் என்பனவாம்.

விவசாயிகள் விவசாயச் செலவுக்காகவோ, விவசாய சம்பந்தமான வேறு செலவுக்காகவோ வாங்கின கடனைத்தான் சுலபமாகத் திருப்பிக் கொடுக்க முடியும். பல வகைப் பயனில்லாத செலவு செய்வதற்காகக் கடன் வாங்கினால், அக்கடனை அவ்விவசாயி கொடுத்துத் தீர்க்க முடியாது. ஏனெனில், வாங்கிய கடனை விவசாயத்திற்கெனச் செலவிட்டால், அதில் வரும் ஆதாயத்திலிருந்து கடனைத் திருப்பிக் கொடுத்துவிடலாம். இல்லையேல், அதை எப்படித் திருப்பிக் கொடுக்க முடியும்?

இச்சங்கங்களில், ஆரம்ப காலத்தில் பயனுள்ள செலவுக்கு மாத்திரம் கடன் கொடுக்கப்பட்டது. நல்லநாள் கெட்ட நாட்களிற் செய்யும் செலவுக்கும், பல அவசியச் செலவுகட்கும் இச்சங்கங்கள் கடன் கொடுக்க விரும்பவில்லை. அந்த ஏற்பாட்டினால் ஒரு பெரிய கஷ்டம் உண்டாயிற்று. எந்த விவசாயியும் ஆதாயமுள்ள செலவுக்கெல்லாம் கூட்டுறவுச் சங்கங்களில் கடன் வாங்கிக்கொண்டால், மற்றைச் செலவுகட்கு என்னசெய்வது? ஏனைய செலவுகட்கு மாத்திரம் இலேவாதேவிக்காரர்களிடம் கடன் வாங்கப்போனால், அவர்கள் கடன் கொடுக்க மறுத்தார்கள்; அல்லது வட்டிக்குப் பணம் கொடுக்க உடன்

பட்டார்கள். இலேவாதேவிக்காரரின் கைப்பிடியி லிருந்து விவசாயிகளை விடுவிப்பதற்காக ஏற்பட்ட கூட்டுறவுச் சங்கங்கள், விவசாயிகளை மறுபடியும் அந்த இலேவாதேவிக்காரர்களின் கூட்டிலேயே அடைத்து வைக்க உதவியாயிருப்பதென்றால், அது மிக வருந்தத்தக்க விஷயமல்லவா? ஆகையால், மிகவும் முடையான காலங்களில், ஆதாயமற்ற செலவுக்காவலும், இச்சங்கங்கள் விவசாயிகட்குக் கடன் கொடுக்க வேண்டி நேரிடுகிறது.

பழங்கடன் கொடுத்துத் தீர்ப்பதற்காக இக் கூட்டுறவுச் சங்கங்கள் கடன் கொடுப்பது, அசாத் தியமான காரியமாகும். விவசாயிகள் ஏராளமாகக் கடன் வாங்கி இருப்பதால், அவைகளை இச்சங்கங் கள் கொடுத்து அடைப்பதென்பது முடியாத காரி யம். அதுவுமன்றிப் பழங்கடன் கொடுத்து அடைப் பதற்காகக் கடன் கொடுப்பதென்றால், நீண்ட நாளைக்குக் கடன் கொடுக்க வேண்டி வரும். அப் படி நெடுநாட்கடன்களை இச்சங்கங்கள் கொடுக்க முடியாது. அப்படிக் கொடுப்பதென்றாலும், பல ருக்கு உதவி செய்ய முடியாது.

கூடுமானவரையில் இக்கூட்டுறவுச் சங்கங்கள் அநாவசியமான செலவுகள் செய்யாதவாறு விவ சாயிகளைத் தடுத்து, அவர்கட்குச் சிக்கன முறை களைக் கற்பிக்க முயல வேண்டும்.

ஒவ்வொரு விவசாயியும், தான் எந்தக் காரி யத்துக்கெனக் கடன் வாங்குகிறானோ, அந்தக் காரி யத்துக்கே அதைச் செலவிட வேண்டும். அந்த

விவசாயிக்கு ஜாமீனாக (Surety) நிற்பவர்களும் ஏனைய அங்கத்தினர்களும் கடன் வாங்கிய பணத்தைக் குறித்த காரியத்துக்கே அவன் செலவிடும்படி கவனிக்க வேண்டும். ஒருவன் மாடு வாங்குவதற்கெனக் கடன் வாங்கி, மச்சானுக்கு வெகுமதி கொடுத்தால், அது சரியான முறையாகுமா? எனவே, ஒவ்வொருவரும் முறையுடன் நடக்க வேண்டும்.

## (5) கடனைத் திருப்பிக் கொடுத்தல்

ஒரு குறித்த கூட்டுறவுச் சங்கமானது சரியாக நடக்கிறதா இல்லையா என்பதை அச்சங்கத்தின் அங்கத்தினர் எல்லோரும் குறித்த காலத்தில் கடனைத் திருப்பிக் கொடுத்து வருகிறார்களா இல்லையா என்பதைக் கொண்டுதான் நிர்ணயிக்க வேண்டும். கூட்டுறவு ஸ்தாபனங்களில் கடன் வாங்குவோர், தவணைக் காலத்தில் தவறாது பணங்கட்டிவிட வேண்டும். ஏதாவது உண்மையாகக் கஷ்டம் ஏற்பட்டாலொழிய, தவணைப் பணத்தைக் கட்டாமல் தவக்கப்படுத்தக் கூடாது. கடனைத் திருப்பிக் கொடுத்தது போலவும், திரும்பக் கடன் வாங்கியது போலவும் பொய்க் கணக்குகளை எக்காரணத்தை முன்னிட்டும் உண்டாக்கக் கூடாது.

சாதாரணமாக ஒரு விவசாயி கடன் வாங்கினால், அந்தப் பணத்தை ஒரு பயனுள்ள காரியத்துக்காக உபயோகித்து, அதன் வருவாயிலிருந்து அக்கடனைக் கொடுக்க வேண்டுமென்பதுதான் இச்சங்கங்களின் நோக்கம். பயனில்லாச் செலவுக்காக

வாங்கிய கடன்களை எப்படி அவ்வாறு திருப்பிக் கொடுக்க முடியும் ?

ஒரு விவசாயி கடன் வாங்கினுல், அந்தக் கடனை எவ்வளவு காலத்துக்குள் திருப்பிக் கொடுத்து விட வேண்டுமென்பது பல விஷயங்களைக் கொண்டு தீர்மானிக்க வேண்டி இருக்கிறது. அவ் விஷயங்களுள் முக்கியமானவை மூன்று : (1) எக் காரணத்திற்காகக் கடன் வாங்கப்படுகின்றதென் பது. (2) கடன் தொகை எவ்வளவென்பது. (3) கடன் வாங்கியவன் நிலைமை, அதாவது அவன் கஷ்டமில்லாமல் வருஷந்தோறும் எவ்வளவு கொடுக்க முடியும் என்பது. இவ்விஷயங்களைக் கொண்டு நிருவாகக் கமிட்டியார் எவ்வளவு காலத்தில் கடனைத் திருப்பிக் கொடுத்துவிட வேண்டு மென்பதை நிர்ணயிக்கின்றனர்.

பொதுவாகக் கூறுமிடத்து, பயனில்லாத செலவுகட்கென வாங்கப்படும் கடன்களைச் சீக்கிரம் கொடுத்துவிடும்படியே ஏற்பாடு செய்ய வேண்டும். அப்படிச் செய்தால்தான், அவ்வகையான கடன் களை விவசாயிகள் அதிகமாக வாங்கமாட்டார்கள்.

ஒரு வருஷத்திற்குக் குறைந்த காலத்திற்கு வாங் கும் கடனைக் ‘ குறுகிய காலக் கடன் ’ என்று கூற லாம். அதற்கு மேற்பட்ட காலத்திற்கு வாங்கும் கடனை ‘ நெடுநாட் கடன் ’ என்று வழங்கலாம். விவ சாயச் செலவு, நிலவரி கொடுத்தல், சுபாசுப காரியச் செலவு முதலியவற்றுக்குக் கொடுக்கப்படும் கடன், குறுகிய காலக் கடனுகவே இருத்தல் வேண்டும்.

ஏனையவை, நீண்ட காலக் கடனாக இருக்கலாம். பழங் கடனைக் கொடுத்தல், மாடு வாங்கல், நிலத்தில் சாசுவத விருத்தி செய்தல் இவைபோன்ற செலவு கட்கு நீண்ட நாட் கடனையே வாங்க வேண்டும். இச் சங்கங்களில் நீண்ட காலத்திற்கெனப் பணம் போடு பவர் பலர் இருந்தாற்றான், இவை நீண்ட காலக் கடனைக் கொடுக்க முடியும். இல்லாவிட்டால், இச் சங்கங்கட்குப் பண முடை உண்டாகும்.

## (6) வட்டி

ஒரு குறித்த இடத்தில் எந்த வட்டி வழக்கமாக வாங்கப்படுகிறதோ, அதை ஒட்டிய வட்டியைத் தான் இச்சங்கங்களும் வாங்குகின்றன. ஒரு பிர தேசத்தில் வழக்கத்திலிருக்கும் வட்டியைவிட மிகக் குறைவான வட்டிக்கு இச்சங்கங்கள் கடன் கொடுப்ப தென்றால், அப்படிச் செய்வதில் சில கஷ்டங் கள் இருக்கின்றன. சங்கங்கள் மிகக் குறைவான வட்டிக்குக் கடன் கொடுப்பதானால், அச்சங்கங் களில் பிறர் போடும் பணத்திற்கு அதைவிடக் குறைவாகவே வட்டி கொடுக்க வேண்டி வரும். அப் படி இச்சங்கங்கள் குறைந்த வட்டிக்குப் பணம் வாங்க வேண்டுமானால், பணம் கொடுப்பவர் கிடைப் பது அரிதாகிவிடும்.

அதுவுமன்றி, இச்சங்கங்கள் தாங்கள் வாங்கும் பணத்திற்குக் கொடுக்கும் வட்டிக்கும், தாங்கள் கொடுக்கும் கடனுக்கு வாங்கும் வட்டிக்கும் வித்தியா சம் இருந்தாற்றான் இலாபம் கிடைக்கும். அப்படி

இலாபம் கிடைத்தாற்றான் சேம நிதியைத் திரட்டி வைக்க முடியும். அப்போதுதான் கூட்டுறவுச் சங்கத்திற்குத் தக்க பலம் உண்டாகும்.

## (7) கடன் ஆதாரங்கள்

இச்சங்கங்கள் கொடுக்கும் கடன்களுக்கு முக்கிய ஆதாரம், விவசாயியின் நாணயப் பொறுப்புதான். நல்ல குணமுள்ள விவசாயி தன் சொந்தப் பொறுப்பிலேயே கடன் வாங்கலாம். இருந்தாலும், அந்தக் கடனுக்கு இன்னும் இரண்டுபேர் ஜாமீன் (Surety) தர வேண்டும்.

கடன் வாங்குபவனுடைய நற்குணத்தையல்லாமல், வேறு ஆதாரங்களையும் இச்சங்கங்கள் விரும்பலாம். விவசாயியின் ஸ்தாவர சொத்துகளின் பேரிலும், சங்கம சொத்துகளின் பேரிலுங் கூடக் கடன் கொடுக்கப்படலாம்.

நில ஜாமீன் பேரில் கடன் கொடுத்தாலும், கடன் வாங்குபவனுடைய நாணயப் பொறுப்பிற்காகவேதான் கடன் கொடுக்கப்படுகிறது. சென்னை, பர்மா, பம்பாய் மாகாணங்களில் விவசாயிக்குச் சொத்தில் முழு உரிமையும் இருக்கிறது. அந்த மாகாணங்களில் நில ஜாமீன் பயனுள்ளதாய் இருக்கும். வங்காளம், ஐக்கிய மாகாணம், மத்திய மாகாணம் முதலிய இடங்களில் நிலப்பாத்திய முறைகள் மிகவும் சிக்கலாய் இருக்கின்றன. அந்த இடங்களில் நில ஜாமீன் அவ்வளவு சௌகரியமானதன்று.

அசையும் பொருள்கள் (சங்கம சொத்துகள்) பேரிலும் இச்சங்கங்கள் கடன் கொடுக்கின்றன. இச்சங்கம சொத்துகள் மாடுகள், நகைகள், வண்டி முதலியவைகளாகும். நகைகள் நல்ல ஆதரவானவை. ஏனெனில், சிறிய அளவில் பெரிய மதிப்பு உடைய அவைகளை ஆதாரமாக இச்சங்கங்கள் சுலபமாக வைத்துக்கொள்ளக் கூடும். மாடுகள் அவ்வளவு நல்ல ஆதாரமல்ல. ஏனெனில், இந்நாட்டில் மாடுகள் நோய்வாய்ப்பட்டு இறப்பது சகஜம். மேலும், நமது நாட்டில் மிருகங்களை இன்ஷியூர் செய்வதுமில்லை.

பொதுவாகக் கூறுமிடத்து, இச்சங்கங்கள் மனிதனுடைய யோக்கியப் பொறுப்பின்மேற் கடன் கொடுப்பதுதான் நல்லது.

## (8) இச்சங்கங்களின் நிருவாகம்

இச்சங்கங்களின் அங்கத்தினர்கள், தங்களுடைய கூட்டத்தில் சங்கங்களின் எல்லாக் காரியங்களையும் கவனிக்கிறார்கள். தங்களுடைய அதிகாரத்தை ஒரு சிலரிடம் ஒப்புவிக்காமல், அங்கத்தினர்களே எல்லா அதிகாரத்தையும் வைத்துக்கொண்டிருப்பது தான் நல்லது. அங்கத்தினர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட கமிட்டியார் சிற்சில காரியங்களைக் கவனித்துக் கொள்ளுகின்றனரெனினும், பொதுவான அதிகாரம் அங்கத்தினர்கள் கையிலேதான் இருக்கிறது.

சாதாரணமாக வருஷத்தில் ஒரு முறை அல்லது இரண்டு முறை, அங்கத்தினரின் பொதுக்கூட்

டம் நடைபெறும். ஏதானும் அவசியம் நேரிட்டாலும், மொத்த அங்கத்தினரில் ஐந்தில் ஒரு பங்கினர் விரும்பினாலும் விசேஷமான பொதுக் கூட்டம் கூட்டப் படலாம்.

வருஷாந்தரக் கூட்டத்திலேதான் சங்கத்தின் பல காரியங்கள் கவனிக்கப்படுகின்றன: சங்க நிருவாகத்தினர் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர்; முன் ஆண்டில் சங்கத்தின் நிலை எப்படி இருந்தது என்பது பரிசோதிக்கப்படுகிறது; வரப்போகும் வருஷத்தில் மொத்தக் கடன் எவ்வளவு வாங்கலாம், அதற்குச் சங்கம் எவ்வளவு வட்டி கொடுக்கலாம் என்பவை நிர்ணயிக்கப்படுகின்றன; ஒவ்வோர் உறுப்பினரும் எவ்வளவு கடன் வாங்கலாம் என்பது வரையறுக்கப்படுகிறது; சங்க வேலைக்காரருக்கு என்ன வெகுமானம் கொடுக்கலாமென்பது அநுமதிக்கப்படுகிறது; குறித்த சில அங்கத்தினரைச் சேர்க்கலாமா அல்லது நீக்கலாமா என்பதும் தீர்மானிக்கப்படுகிறது. *

**நிருவாகக் கமிட்டி**:—பெரும்பாலும் ஐந்து பேர் அடங்கிய நிருவாகக் கமிட்டி, இப்பொதுக் கூட்டத்தில் தேர்ந்தெடுக்கப்படுகிறது. அந்தக் கமிட்டிக்குப் '**பஞ்சாயத்து**' என்பது பெயர். சில இடங்களில் விஷயந் தெரிந்தவராய் ஐந்து பேர் கிடைப்பது கஷ்டம்; அம்மாதிரி சந்தர்ப்பங்களில் இன்னும் குறைந்த எண்ணுள்ளவர் பஞ்சாயத்தினராக ஏற்படுத்தப்படுவர்.

* Matthai 75

பஞ்சாயத்தார் சாதாரணமாக மாதம் ஒரு முறை கூடிச் சங்கக் காரியங்களையெல்லாம் கவனிப்பார்கள். இக்குழுவினரே கடன் விண்ணப்பங்களைக் கவனித்து, யார் யாருக்கு எவ்வளவு எவ்வளவு கடன் கொடுக்கலாம் என நிச்சயிப்பர். அங்கத்தினர்களைச் சேர்ப்பது நீக்குவது முதலிய அதிகாரங்கள் இவர்களுக்கு உண்டு. சங்கத்துக்குச் சேர வேண்டிய பணத்தைக் கொடுக்காதவர்களிடம் எப்படி வசூலிப்பது என்பது இவர்கள் தீர்மானிக்க வேண்டிய விஷயமாகும். மேலும், கணக்கு வழக்குகள் சரியாய் இருக்கின்றனவா எனப் பார்த்து, அவைகளைச் செம்மையாக வைப்பதும் இவர்கள் கடமையாகும்.

ஒவ்வொரு சங்கத்திற்கும் தலைவர் ஒருவர் உண்டு. அவரன்றி, காரிய தரிசியும், பொக்கிஷதாரும் இருக்கின்றனர். சில சமயம் காரியதரிசியின் வேலையையும், பொக்கிஷதாரின் வேலையையும் ஒருவரே பார்ப்பதும் உண்டு. இவர்கட்குப் பெரும்பாலும் ஒரு வித ஊதியமும் இல்லை. சில சமயம் காரியதரிசிக்குச் சிறு ஊதியம் கொடுப்பதுமுண்டு.

ஜெர்மனி முதலிய சில தேசங்களிலே 'மேற்பார்வைச் சபை' (Board of Supervisors) என்னும் ஒரு சபை இருக்கிறது. அச்சபை மேலே கூறப்பட்ட கமிட்டியாரின் வேலையைக் கவனிப்பதாகும். இந்தியாவிலும் சிற்சில இடங்களில் இம்முறை அநுஷ்டிக்கப்பட்டது; ஆனால், இது அத்துணை நன்மை பயக்கவில்லை.

## 5. நகரப் பாங்குகள்

நகரக் கூட்டுறவுச் சங்கங்கள் பட்டினங்களிலே தான் சாதாரணமாகக் காணப்படுகின்றன. இவை ஜர்மானிய **சூல்ஸ் டெலீஷ்** பாங்குகளைப் போலவே அமைக்கப்பட்டு, அவைகளின் நடை முறைகளையே பின்பற்றி வருகின்றன. 1904-ஆம் வருஷக் கூட்டுறவுச் சட்டத்தில் **கிராமப் பாங்குகள், நகரப் பாங்குகள்** என்னும் இரு வகைக் கூட்டுறவுப் பாங்குகளையும் ஏற்படுத்தப் போதிய சட்ட வசதிகள் இருந்தன. இவ்விரண்டனுள் கூட்டுறவு நகரப் பாங்குகளைவிட, கிராமப் பாங்குகளே விசேஷமாகப் பரவலாயின. கிராமப் பாங்குகளுக்கே அரசினருடைய விசேஷ ஆதரவும் இருந்தது.

இந்நகரப் பாங்குகள் சென்னை மாகாணத்திலும் பம்பாய் மாகாணத்திலும் விசேஷமாகக் காணப்படுகின்றன.

இந்நகரப் பாங்குகள் சிறு வியாபாரிகள், நடுத்தர வகுப்பைச் சேர்ந்தவர்கள் முதலியவர்கட்கு விசேஷக் கடன் உதவி கொடுத்தல் வேண்டும். இந்நகரப் பாங்குகள் பண விஷயத்தில் மிகவும் வன்மை பெற்றிருக்கின்றன. இப்பாங்குகளில் அநேகர் தம்முடைய பணங்களைப் போட்டு வைக்கின்றனர். அநேக பாங்குகளில் அங்கத்தினர்களை விட ஏனையோர் அதிக பணத்தைப் போட்டு வைத்திருக்கின்றனர்.

இந்நகரப் பாங்குகளின் முயற்சியால் அநேக இடங்களில் வட்டி மிகவும் குறைந்து இருக்கிறது.

இப்பாங்குகளில் நல்ல இலாப வீதாசாரம் கிடைக்க வேண்டுமென்பது சாதாரணமாக விரும்பப்படுகிறது. ஆனால், கடன் கொடுக்கும் தொகைக்கு நல்ல வட்டியை அங்கத்தினர்களிடமிருந்து வாங்கினாற்றானே நல்ல இலாப விகிதம் கொடுக்க முடியும்? இலாபத்துக்காக வட்டி வீதத்தை உயர்வாக வைத்திருப்பது அவ்வளவு சரியன்று.

பம்பாய் மாகாணத்திலே '**சம்பளம் வாங்குவோரின் சங்கங்கள்**' இருக்கின்றன. அவைகளில் உறுப்பினராய் இருப்பவரெல்லாம் அநேகமாக ஒரே வேலையைச் செய்பவராய் இருக்கலாம்; ஒரே கம்பெனியில் வேலை பார்ப்பவர்களாய் இருக்கலாம்.

பொதுவாக நகரப் பாங்குகளெல்லாம் வரையறுத்த பொறுப்புடையவை. எல்லாப் பாங்குகளும் நல்ல பங்குத் தொகையுடனும், விசேஷ சேம நிதியுடனும் இருக்கின்றன. இவைகளின் நடை முதல் மூன்று வகையாகக் கிடைக்கின்றன: அவை, (1) சொந்த முதல் (பங்கு முதலியவை விற்பதால் உண்டாவது), (2) கடன்கள், (3) விடு முதல்கள் என்பன.

அநேகமாக மத்திய பாங்கிலிருந்து இந்நகர சபைகள் வாங்கும் பணத்தைவிட, தனிப்பட்டவர்கள் இச்சபைகளில் போடும் 'விடு முதலே' அதிகமாய் இருக்கிறது.

சொந்த ஜாமீன் பேரிலும், நகைகள் வெள்ளி தங்கம் முதலியவைகளின் பேரிலும் இப்பாங்குகள் கடன் கொடுக்கின்றன.

இந்நகர பாங்குகள் மிகப் பெரியவைகளாய் இருக்கக் கூடாதென முதலில் எண்ணப்பட்டது. ஆனல், நாளாக ஆகப் பெரிய பாங்குகளாகவும் இவை இருக்கலாம் என்னும் எண்ணம் பரவ ஆரம்பித்து இருக்கிறது. இந்திய பாங்கு விசாரணைக் கமிட்டியார், "இந்நகரப் பாங்குகள் பெரியனவாக வளருவதை ஆதரிக்க வேண்டும்," என்று அபிப்பிராயப்பட்டிருக்கின்றனர். பெரிய பாங்குகளாக இவைகளை ஏற்படுத்துவதில் அநேக நன்மைகள் இருக்கின்றன.

---

## 6. கூட்டுறவுச் சங்கங்களின் கூட்டமைப்புகள்

(கூட்டுறவுப் பாங்குகளின் கூட்டமைப்புகள்)

1904-ஆம் வருஷத்திய கூட்டுறவுச் சட்டத்தில் இக்கூட்டமைப்புகளைத் தோற்றுவித்துக் கொள்வதற்கு ஏற்பாடொன்றும் இல்லை. 1912-ஆம் வருஷச் சட்டத்திலேதான் இவைகளை ஏற்படுத்தச் சட்ட அநுமதி கிடைத்தது.

சங்கங்களின் கூட்டமைப்புகள் மூவகைப்படும். அவையாவன, (1) கூட்டுச் சங்கங்கள் அல்லது ஐக்கிய சங்கங்கள், (2) மத்திய பாங்குகள், (3) மாகாணப் பாங்குகள் என்பவை. இக்கூட்டமைப்புகள் தனிச் சங்கங்களின் வலிமையை உயர்த்துகின்றன.

(க) கூட்டுச் சங்கங்கள்

சில சங்கங்கள் ஒன்று சேர்ந்து தங்களுக்குள் பரஸ்பர நன்மைகளைச் செய்துகொள்வதற்காகவே இக்கூட்டுச் சங்கங்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. இவைகளை மூவகையாகப் பிரிக்கலாம். முதல் வகை, பர்மாவிலுள்ளவற்றைப் போல உறுதியளிக்கும் சங்கங்கள். இரண்டாம் வகை, சென்னை மாகாணத்திலும் பம்பாய் மாகாணத்திலும் உள்ள மேற்பார்வைச் சங்கங்கள். மூன்றாம் வகை, பஞ்சாபு மாகாணத்திலுள்ளவற்றைப் போன்ற பாங்கு சங்கங்கள் (Banking Unions).

சாதாரணமாக ஒவ்வொரு கூட்டுச் சங்கத்திலும் ஐந்தாறு சங்கங்கள் அங்கங்களாய் இருக்கின்றன. சாதாரணமாக ஐந்தாறு மைல் வட்டத்திலுள்ள கூட்டுறவுச் சங்கங்கள் ஒன்று சேரக்கூடும்.

இக்கூட்டுச் சங்கங்கள் தங்கள் எல்லைக்குள் இருக்கும் சங்கங்களின் உண்மைப் பொருள் நிலையைக் கவனிக்கின்றன. மத்திய பாங்குகள், தனிப்பட்ட கூட்டுறவுச் சங்கத்திற்குக் கடன் கொடுக்கும்போது, இக்கூட்டுச் சங்கங்களின் சிபாரிசின்மேல் கொடுக்க விரும்புகின்றன; ஏனெனில், இக்கூட்டுறவுச் சங்கங்களால் எந்தச் சங்கத்தின் உண்மை நிலையையும் கூற முடியும். இக்கூட்டுச் சங்கத்தின் காரியங்களை ஒரு காரியதரிசி கவனிப்பார். அவருக்குச் சம்பளம் கொடுக்கப்படுகிறது. இக்கூட்டுச் சங்கத்தின் செலவுக்கு வேண்டிய பணம், மத்திய பாங்குகள் கொடுக்கும் பணத்தாலும், தனிப்பட்ட

சங்கங்கள் கொடுக்கும் வட்டியில் ஒரு சிறு தொகையாலும் கிடைக்கிறது.

உறுதியளிக்கும் சங்கங்கள் (Guaranteeing Unions) பர்மாவிலே விசேஷமாகக் காணப்படுகின்றன. பம்பாய் மாகாணத்திலும் சில ஏற்படுத்தப்பட்டன. இவற்றின் முக்கிய வேலை தனிப்பட்ட கூட்டுறவுச் சங்கங்கள் வாங்கும் கடனுக்கு உறுதி அளிப்பதாகும். இந்த உறுதியளிக்குஞ் சங்கங்களே ஒவ்வொரு கூட்டுறவுச் சங்கமும் எவ்வளவு கடன் வாங்கலாம் என்பதை வரையறுக்கின்றன. பொதுவாகக் கூறுமிடத்து இவ்வுறுதியளிக்குஞ் சங்கங்கள் அவ்வளவு நன்ருக நடக்கவில்லை என்றே கூற வேண்டி இருக்கிறது.

மேற்பார்வைச் சங்கங்கள் (Supervising Unions) தமக்குள் இருக்குஞ் சங்கங்களின் கணக்கு முதலியவைகளைக் கவனித்தல், அவை எப்படி நடக்க வேண்டுமென்பதைப்பற்றி ஆலோசனை கூறல், கணக்குச் சோதனை செய்ய ஏற்பாடு செய்தல் முதலிய காரியங்களைச் செய்கின்றன. இவ்வகைக் கூட்டுச் சங்கங்களே நமது மாகாணத்தில் உள்ளவை.

## (உ) மத்திய பாங்குகள்

அநேகமாக இம்மத்திய பாங்குகள் ஜில்லா ஒன்றுக்கு ஒன்று வீதம் இருக்கின்றன. இவைகளின் முக்கிய வேலை அந்தந்த ஜில்லாவிலுள்ள கூட்டுறவுச் சங்கங்கட்கு வேண்டிய பண உதவியைக் கடன் கொடுப்பதன் மூலம், செய்ய வேண்டுவது.

இப்போதுள்ள நிலையில் ஒவ்வொரு கூட்டுறவுச் சங்கமும் அதற்கு வேண்டிய பணத்தை அந்த ஊரி லேயே பெற முடியாமல் கஷ்டப்படுகிறது. அதற்கு வேண்டிய தொகையைப் பெறுவதென்றால் வெளி யிடத்திலிருந்துதான் வாங்க வேண்டி இருக்கிறது. அப்படி வெளியிடத்திலிருந்து பணம் வாங்குவதற்கு உதவியாக இருப்பதே மத்திய பாங்கு ஆகும்.

ஒரு ஜில்லாவில் பல கூட்டுறவுச் சங்கங்கள் உண்டான பிறகு இம்மத்திய பாங்கை ஏற்படுத்து வதுதான் பல வகையிலும் சௌகரியமானது.

இம்மத்திய பாங்குகளை, இவைகளின் அமைப் பைக் கொண்டு மூன்று வகைகளாகப் பிரிக்கலாம்: (1) தனிப்பட்ட மனிதர் சேர்ந்து ஏற்படுத்திய மத் திய பாங்கு, (2) சில கூட்டுறவுச் சங்கங்கள் மாத் திரம் சேர்ந்து ஏற்படுத்திய மத்திய பாங்கு, (3) சில தனிப்பட்ட பணக்காரரும், சில கூட்டுறவுச் சங்கங் களும் சேர்ந்து ஏற்படுத்தும் பாங்கு என அவை களை வகைப்படுத்தலாம்.

ஆரம்ப காலத்தில் கூட்டுறவுச் சங்கங்கள் கூடிய மத்திய பாங்குகளை நியமிக்க முடியாவிட்டால், தனிப்பட்டவர் மாத்திரம் கூடிய மத்திய பாங்குகளை ஏற்படுத்திக்கொள்ளலாம். ஆனால், கூட்டுறவுச் சங்கங்கள் மாத்திரம் சேர்ந்த மத்திய பாங்குகளை ஏற்படுத்துவதுதான் இலட்சியமாக இருக்க வேண் டும். பொதுவாகக் கூட்டுறவுச் சங்கங்களும், தனிப் பட்டவர்களும் சேர்ந்த மத்திய பாங்குகளை ஏற்படுத் திக்கொள்வதுதான் சௌகரியமானது.

தனிப்பட்டவர்கள் மாத்திரம் சேர்ந்துள்ள மத்திய பாங்குகள் இலாபத்தையே பெருக்க விரும்புமாதலால், அவைகள் கூட்டுறவு இயக்க நோக்கத்துட்பட்டவைகளும் அல்ல; விரும்பத் தக்கவைகளும் அல்ல.

## (அ) மத்திய பாங்குகளின் நிருவாகம்

இவை ஒரு நிருவாகக் கமிட்டியின் ஆளுகையில் இருக்கின்றன. இக்கமிட்டியாருக்குப் பாங்கி நிருவாக விசேஷ அறிவு அதிகம் உண்டென்று நிச்சயமாகக் கூறுவதற்கில்லை. ஆனல், இவர்கட்குச் செல்வாக்கும், தங்கள் வட்டாரத்தில் அநுபவமும் அதிகமாய் இருக்கும்.

பாங்கின் பொதுக் காரியங்களை டைரக்டர்களின் போர்டு (இயக்குனர் கழகம்) கவனித்துக் கொள்ளுகிறது. அவசர காரியங்களைக் கவனிப்பதற்காக ஓர் உட்கழகம் (Sub-Committee of Directors) இருக்கிறது. மாமூலாகச் செய்யக்கூடிய காரியங்களைத் தலைவராவது, காரியதரிசியாவது, மானேஜராவது கவனித்துக்கொள்ளலாம். டைரக்டர்கள் கௌரவத்திற்காகவே வேலை செய்பவர்கள்; ஊதியத்தை எதிர்பாராதவர்கள். இவர்கள் மாதத்திற்கு ஒரு முறை கூடுவது வழக்கம். சில இடங்களில் ஒவ்வொரு டைரக்டரும் ஒரு சில சங்க விஷயங்களை மாத்திரம் கவனிப்பதுண்டு. பொதுவாக இந்த டைரக்டர்கள் தங்கள் எல்லைக்குட்பட்ட கூட்டுறவுச் சங்கங்களைக் கவனித்துக்கொள்வார்கள்.

ஐரோப்பிய நாடுகளிலுள்ள மத்திய பாங்குகள் பல சங்கங்களில் அதிக பணம் இருந்தால் அதைத் திரட்டி, அதிக பண முடை உள்ள இடங்களில் அப் பணம் உபயோகமாகும்படி செய்கின்றன. இந்தியாவிலோ, மத்திய பாங்குகள் அவ்வேலையைச் செய்வதற்கில்லை. மத்திய பாங்குகள் வெளியிடத்திலிருந்து பணந்திரட்டிக் கூட்டுறவுச் சங்கங்கட்கு உபயோகமாகும்படி செய்கின்றன.

### (ஆ) பாங்கின் பண வருவாய்

மத்திய பாங்குகட்கு வேண்டிய பணம் நான்கு வகையாகக் கிடைக்கின்றது. அவை, (1) கடன்கள், (2) பங்குத் தொகைகள், (3) விடுமுதல்கள், (4) சேம நிதி.

**கடன்கள் :**—இப்பாங்குகட்கு வேண்டிய பணம் வேறு பாங்குகளிடமிருந்தாவது, வேறு மத்திய பாங்குகளிடமிருந்தாவது, மாகாணப் பாங்குகளிடமிருந்தாவது கடனாக வாங்கப்படுகிறது. பெரும்பாலும் மத்திய பாங்குகள் கூட்டுறவின் தலைமை ஸ்தானமான மாகாணப் பாங்குகளிடமிருந்துதான் கடன் வாங்குகின்றன. மத்திய பாங்குகள் ஒன்றுக்கொன்று நேரே கடன் கொடுக்காமல், மாகாணப் பாங்கு மூலமாகவே கொடுக்கும் வழக்கந்தான் ஆதரிக்கப்படுகிறது.

**பங்குத் தொகைகள் :**—மத்திய பாங்கின் அமைப்புக்கேற்ப, தனிப்பட்டவர்களாவது, கூட்டுறவுச் சங்கங்களாவது, தனிப்பட்டவர்களும் கூட்டுறவுச் சங்

கங்களும் சேர்ந்தாவது பங்குகளை வாங்கிக்கொள்ளு கின்றனர். ஒரு தனிப்பட்ட ஆசாமி இத்தனை பங் குக்குமேல் வாங்கக் கூடாதென்ற வரையறை ஒன்று ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இப்பாங்குகளில் அங் கத்தினருடைய பொறுப்பு வரையறுக்கப்பட்டதே. இந்த வரையறுக்கப்பட்ட பொறுப்பிலே பல வகை வேறுபாடுகளும் காணப்படுகின்றன.

விடு முதல் :—தனிப்பட்டவர்கள் இப்பாங்கு களிலே பணம் போடுகிறார்கள். அதுவுமன்றி, சாதாரணமாகக் கூட்டுறவுச் சங்கங்கள், தங்கள் தேவைக்கு அதிகமான பணம் கையில் இருந்தால், அதை இம்மத்திய பாங்கில் போட்டு வைக்கின்றன. மேலும், அச்சங்கங்கள் தங்களுடைய சேம நிதியை யும் இப்பாங்குகளிலேதான் போட்டுவைக்கின்றன.

சேம நிதி :—1912-ஆம் வருஷக் கூட்டுறவுச் சட் டப்படி இப்பாங்குகள் தங்கள் இலாபத்தில் நான்கில் ஒரு பங்கையாவது சேம நிதிக்கென ஒதுக்கி வைக்க வேண்டும். அந்தச் சேம நிதியை ரொக்கமாகவாவது, சுலபத்தில் விற்கக்கூடிய பத்திரங்கள் முதலியவைக ளாகவாவது வைத்திருந்தால்தான் முடைக்குச் சுலப மாகப் பணம் கிடைக்கும்.

### (௲) மாகாணப் பாங்குகள்

ஒவ்வொரு மாகாணத்திலும் கூட்டுறவு மாகா ணப் பாங்குகள் காணப்படுகின்றன. கூட்டுறவு இயக்கத்திலே இவை தலைமை ஸ்தானம் பெற்றுள் ளன. ஒரு மாகாணத்திலே உள்ள பல கூட்டுறவுச்

சங்கங்களின் முறைகளையும் ஒழுங்குபடுத்தவும், எல்லாச் சங்கங்கட்கும் உதவியாயிருக்கவும் இம்மாகாணப் பாங்குகள் அவசியமாய் இருக்கின்றன

இம்மாகாணப் பாங்குகள் ஒவ்வொரு மாகாணத்தில் ஒவ்வொரு முறையாக வளர்ந்து வந்துள்ளன. மாகாணப் பாங்குகளிலும் தனிப்பட்டவர்களும், கூட்டுறவு மத்திய பங்காளர்களாய் இருக்கின்றனர்.

கூட்டுறவுச் சங்கங்களுக்குச் சில காலங்களில் அதிக பணம் வேண்டி இருந்தால், இம்மாகாணப் பாங்குகள், வேறு பாங்குகளிடமிருந்தாவது, தனிப்பட்டவர்களிடமிருந்தாவது, குறுகிய காலத்தில் வேண்டிய பணத்தைத் திரட்ட முடியும். மேலும் மத்திய பாங்குகள் முதலியவைகளில் சில காலங்களில் அதிக பணம் இருந்து உபயோகப்படுத்த முடியாவிட்டால், அதை வாங்கி இம்மாகாணப் பாங்குகள் வேறு பாங்குகட்குக் கடன் கொடுத்தாவது, வேறு வகைகளை அநுஷ்டித்தாவது, அப்பணத்தை உபயோகப்படுத்தலாம்.

இந்த மாகாணப் பாங்குகள் நேரே கூட்டுறவுச் சங்கங்களிடம் கொடுக்கல் வாங்கல் வைத்துக்கொள்ளக் கூடாது. இவை மத்திய பாங்குகளின் மூலந்தான் அச்சங்கங்களுடன சம்பந்தம் வைத்துக் கொள்ளுகின்றன.

சென்னை, பம்பாய், வங்காளம், பீஹார், ஒரிஸ்ஸா, பஞ்சாபு, பர்மா, மத்திய மாகாணங்கள் முதலிய மாகாணங்களிலே இம்மாகாணப் பாங்குகள்

நிறுவப்பட்டு நன்கு வேலை செய்கின்றன. இவை களுள் பம்பாய் மாகாணப் பாங்கு மிகவும் செவ்வை யாக நடக்கிறது என்று கூறப்படுகிறது.

(ச) அகில இந்திய கூட்டுறவுப் பாங்கு

இந்த மாகாணப் பாங்குகள் கூடிய அகில இந் திய கூட்டுறவுப் பாங்கு ஒன்றை நிறுவுதல் நல்ல தென்று **மேக்லாகன் கமிட்டியார்** சொல்லி இருக்கின் றனர்.

---

## 7. அரசினரும் கூட்டுறவு இயக்கமும்

கூட்டுறவு இயக்கமானது மிக விரைவாகப் பரவ வேண்டுமானால், அரசினருடைய உதவி பல விதத்திலும் வேண்டற்பாலதாய் இருக்கிறது. கல்வி அறிவு அதிகமில்லாத இந்தியாவைப் போன்ற தேசத்திலே அரசினருடைய உதவி அவசியம். இந்தியாவில் கூட்டுறவு இயக்கம் இதுகாறும் நன் ருய்ப் பரவுவதற்குக் காரணஸ்தர் அரசினரே.

இந்த விஷயத்தில் இந்தியா அதிர்ஷ்டம் வாய்ந்த நாடென்றே சொல்லலாம். பல ஐரோப் பிய நாடுகளில் அரசாங்கமானது ஆரம்ப காலத் தில் கூட்டுறவு இயக்கத்திற்கு விரோதமாய் இருந்தது.

அதனல், கூட்டுறவு இயக்கம் விரைவாக முன் னேற முடியவில்லை. இந்தியாவிலோ, கூட்டுறவு இயக்கம் அரசாங்கத்தாராலேயே மிக விரைவாக நாடெங்கும் பரவச் செய்யப்படுகிறது.

ஒவ்வொரு மாகாணத்திலும் அரசினரால் நியமிக்கப்பட்ட ரெஜிஸ்டிராரே (பதிவாளர்) மாகாணத்திலுள்ள கூட்டுறவு இயக்க முழுவதையும் கண்காணித்து வருகிறார். கூட்டுறவு இயக்கத்துக்கு அவரே வழி காட்டி; உயிர் நாடி. கூட்டுறவு இயக்கம் செவ்வையாய் நடப்பதற்கு வேண்டிய காரியங்களையெல்லாம் அவரே கவனிக்க வேண்டியவர். கூட்டுறவு ஸ்தாபனங்களை மேற்பார்வை பார்ப்பதற்காக ரெஜிஸ்டிராரின் கீழ்ப் பல உத்தியோகத்தினர் இருக்கின்றனர். நாளடைவில் இவ்வியக்கத்தை அதிகார வர்க்கத்தினர் கையிலிருந்து, கௌரவ உழைப்பாளிகள் பெற வேண்டுமென்பது அரசினரின் விருப்பமாகும்.

கவர்ன்மெண்டார் பிரசாரம் முதலிய காரியங்களைச் செய்வது போதும்; கூட்டுறவு இயக்கத்தின் ஆரம்ப காலத்தில் சிற்சில விஷயங்களில் உதவி செய்வது போதும். கூட்டுறவு இயக்கமானது அரசினரின் உதவியில்லாவிட்டால் நடக்க முடியாது என்ற நிலை இருக்குமானால், அது கூட்டுறவு இயக்கத்துக்குக் கேட்டையே விளைக்கும். நாளடைவிலாவது கூட்டுறவு இயக்கம் தனித்து இயங்கும் தன்மையை அடைய வேண்டும்.

**அரசாங்கம் என்னென்ன வகையில் உதவி செய்யலாம்?** டாக்டர் மேத்தாய் (Dr. Matthai) அவர்கள் கூறுவதைப் போல, அரசினரின் உதவியை ஐந்து வகையாகப் பிரிக்கலாம்: (1) பண உதவி, (2) மேற்பார்வையும் கணக்குச் சோதனையும், (3) சில தனிப்

பட்ட சௌகரியங்களை அளித்தல், (4) பிரசாரம், (5) அரசினரின் இலாக்காக்கள் விசேஷ ஆலோசனை கூறுவது என்பவை அவை.

அரசாங்கமானது கூட்டுறவுச் சங்கத்தை ஆரம்பிக்கும் காலத்தில் முன் பணம் கொடுத்து உதவி செய்யலாம். அதுவுமல்லாமல், மாகாணப் பாங்குகளின் கடன் பத்திரங்களுக்கு (Debenture Bonds) வட்டி கொடுப்பதை உறுதி கூறலாம்.

கூட்டுறவுக்கூட்டு அமைப்புகட்கு(Co-operative Federations) அரசாங்கம் பண உதவி செய்கிறது. அந்த அமைப்புகள் கூட்டுறவுச் சங்கங்களின் கணக்கு வழக்குகளைப் பரிசோதித்தல் முதலிய காரியங்களைச் செய்கின்றன.

கூட்டுறவு இலாக்காவைச் சேர்ந்த உத்தியோகத்தினர் கூட்டுறவு ஸ்தாபனங்களை அப்போதைக்கப்போது சோதிக்கின்றனர்; அவை எப்படியெப்படி நடக்க வேண்டுமெனவும் கூறுகின்றனர்.

மேலும், அரசினரும் பல சலுகைகளைக் காட்டுகின்றனர்:

(1) இந்தக் கூட்டுறவு ஸ்தாபனங்கள் வருமான வரி, ஸ்டாம்பு வரி, ரெஜிஸ்தர் கூலி முதலியவைகளைக் கொடுக்க வேண்டுவதில்லை.

(2) கோர்ட்டின் டிகிரியைக்கொண்டு கூட்டுறவு ஸ்தாபன அங்கத்தினர்களின் பங்குத் தொகையை எவரும் ஜப்தி செய்யக் கூடாது.

(3) ஒருவனிடம் பலர் பணம் வசூலிக்க வேண்டியிருந்தால், அவர்களுக்கு முன் கூட்டுறவு

ஸ்தாபனங்கள் பணம் வசூலிக்கலாம். அதாவது, ஒருவன் கூட்டுறவுச் சங்கத்துக்கும், வேறு பலருக்கும் பணம் கொடுக்க வேண்டியிருக்கிறதென வைத்துக்கொள்வோம். அப்போது, கூட்டுறவு ஸ்தாபனம், தனக்கு வர வேண்டிய பணத்தைப் பெற்ற பின்புதான் அவன் சொத்தை மற்றவர்கள் எடுத்துக்கொண்டு தங்களுக்கு வர வேண்டியதை வசூலிக்கலாம்.

---

## 8. நில அடைமானப் பாங்குகள்

கூட்டுறவுச் சங்கங்கள் விவசாயிகட்குச் சின்னாட்களுக்குத்தான் கடன் கொடுக்க முடியுமென்பதும், நீண்ட நாட்களுக்குக் கடன் கொடுக்க வேறு ஸ்தாபனங்கள் வேண்டுமென்பதும் முன்னே கூறப்பட்டன. அப்படிப்பட்ட ஸ்தாபனங்களே நில அடைமானப் பாங்குகளாகும்.

விவசாயிகள் பழங்கடனைக் கொடுத்துத் தீர்க்கவோ, நிலத்தில் சாசுவதமான திருத்தங்கள் செய்யவோ பெருந்தொகையைக் கடன் வாங்க வேண்டியிருக்கிறது. அப்படி அதிக பணத்தைக் கடன் வாங்கினல், அதைச் சில மாதங்களில் கொடுத்து அடைத்துவிட முடியாது. வருஷா வருஷம் நிலத்திலிருந்துவரும் ஆதாயத்தைக்கொண்டு அக்கடனைத் தீர்ப்பதென்ருல், பல வருஷங்கள் ஆகும். அப்படிப் பன்னாட்கடன் கொடுக்க ஏற்பட்டவைகளே நில அடைமானப் பாங்குகள்.

இலாபத்தைக் கருதித் தனிப்பட்டவர்கள் பணம்போட்டு நில அடைமானப் பாங்குகளை ஏற்படுத்தலாம். அல்லது தங்களுடைய பரஸ்பர நன்மைக்கும் சௌகரியத்துக்கும், பலர் ஒன்றுசேர்ந்து, கூட்டுறவு முறையில் இந்த நில அடைமானப் பாங்குகளை ஏற்படுத்திக்கொள்ளலாம்.

இந்த நில அடைமானப் பாங்குகள் ஒவ்வொரு தேசத்திலும் சிற்சில மாறுதல்களுடன் காணப்படுகின்றன. அவைகளை முக்கியமாக மூன்று வகையாகப் பிரிக்கலாம். அவையாவன, (1) கூட்டுறவுப் பாங்குகள், (2) கூட்டுறவு முறையைச் சேராத பாங்குகள், (3) ஒரு வகையில் கூட்டுறவை ஒட்டிய பாங்குகள் என்பன.

கூட்டுறவுப் பாங்குகளுக்கு உதாரணமாகப் பிரஷ்ய நில அடைமானப் பரஸ்பர நாணயப் பொறுப்புச் சங்கங்களை (The Prussion Farm Mortgage Mutual Credit Associations) எடுத்துக் காட்டலாம். இவைகளைக் கடன் வாங்குபவர்களின் சங்கமெனக் கூறினும் தவறில்லை. இவைகட்குப் பங்குத் தொகை இல்லை. வட்டியோ, மிகக் குறைவு. இலாபம் பெற வேண்டுமென்னும் ஆசையோ, பூஜ்யம். ஒவ்வோர் அங்கத்தினரும், அங்கத்தினராகும்போது சிறு தொகையைப் பிரவேசக் கட்டணமாகக் கொடுத்தல் போதுமானது. இந்த வரும்படியைக் கொண்டு சங்கச் செலவெல்லாம் செய்யப்படுகிறது. இச்சங்கங்கள் தங்களிடம் அடைமானம் வைக்கப்படும் நிலத்தின் மேல், அடைமானப்

பத்திரங்களைத் தயாரித்து, விற்கின்றன. அவைகளைப் பலரும் வாங்குவதால் இச்சங்கங்கட்குப் பணம் எளிதில் கிடைக்கிறது. இந்த நில அடைமானப் பாங்குகள் (Land-schaften) இப்போது மத்திய நிலப் பாங்குடன் (Central Land-schaft) இணைக்கப்பட்டிருக்கின்றன.

ஐரோப்பிய நாடுகள் பலவற்றில் கம்பெனி முறையில் நடத்தப்படும் பல நில அடைமானப் பாங்குகள் இருக்கின்றன. அவை இலாபத்தை விரும்புவன. அரசாங்கத்தினர் இப்பாங்குகளைக் கண்காணித்து வருகின்றனர். இவையெல்லாம் பெரும்பாலும் பிரான்சு தேசப் பாங்கின் திட்டத்தை (Credit Foncier de France) ஒட்டியே ஏற்படுத்தப்பட்டுள்ளன. எகிப்து தேச விவசாய பாங்கும் கூட்டுறவு முறையில் அமைக்கப்பட்டதன்று.

மேலே கூறப்பட்ட இரண்டு முறைகளையும் முற்றிலுஞ் சேராத நில அடைமானப் பாங்குகளும் ஆங்காங்கு இருக்கின்றன.

### (க) நில அடைமானப் பாங்குகளின் வரலாறு

1769-ஆம் வருஷத்திலே ஜெர்மனித் தேசத்திலே சிலீஷியா (Silesia) என்னும் பகுதியிலே பிரடரிக் தி கிரேட்டு (Frederick the Great) என்பவரால் முதல் நில அடைமானப் பாங்கு நிறுவப்பட்டது. அதற்கு 'லாண் ஷாப்டு' (Land-schaft) என்பது பெயர். அதற்கு அரசாங்கம் பண உதவியொன்றும் செய்யவில்லை.

இந்த மாகாணத்தில் நில உரிமையாளர் ஒவ்வொருவரும் இப்பாங்கில் சேர வேண்டுமென்று கட்டாயப்படுத்தப்பட்டனர். கடன் வேண்டியிருந்தாலும், இல்லாவிட்டாலும் சேர வேண்டுமென்ற நியமனமிருந்ததால், இப்பாங்குக்கு வலிவு அதிகமாய் இருந்தது.

இப்பாங்குகளின் நோக்கம் இலாபம் சம்பாதிப்பதன்று. இவை பங்குகளை (Shares) விற்பதில்லை. கடன் வேண்டுமென முயற்சி செய்வோர் பலர் ஒன்று சேர்ந்து தமது நாணயப் பொறுப்பின்மேல் பெருந்தொகைகளைக் கடனாகப் பெறுவதற்கு அநுகூலமான ஸ்தாபனமென இவைகளைக் கூறவுங்கூடும்.

கடன் விரும்பும் ஒரு நில உரிமையாளன் ஒரு சிறு கட்டணத்தைச் செலுத்தி உறுப்பினன் ஆகிறான். அவனுடைய நிலத்தின் மதிப்பைச் சில மதிப்பாளர் கண்டு பிடிக்கின்றனர். நிலத்தின் மொத்த மதிப்பில் மூன்று பங்கில் இரண்டு பங்கிற்கு மேற்படாத தொகையை அந்த நில உரிமையாளன் கடனாக வாங்கலாம். கடன் கொடுக்கும் பாங்கிற்கு அந்தக் கடனாளி தன் நிலங்களை முதல் அடைமானமாக வைக்கிறான். அந்த அடைமானப் பத்திரந்தான் அப்பாங்கிற்கு ஆதாரமாகும்.

‘லாண் ஷாப்டு’ (Land-schaft) அக்கடன் தொகையை ரொக்கமாகக் கொடுப்பதில்லை. அந்தத் தொகைக்குப் பத்திரங்களையே (Bonds) கொடுக்கிறது. கடன் பெற்றவன், அப்பத்திரங்களை அப்

பாங்கின் மூலமாகவாவது, நேரேயாவது விற்று, அந்தத் தொகையை உபயோகப்படுத்திக்கொள்ளுகிறான்.

கடன் வாங்கியவன் அந்தப் பத்திரத்தைக் குறித்த காலத்தில் மீட்டுக்கொள்ள வேண்டும். அதற்காகக் கடன் வாங்கியவன் வருஷந்தோறும் ஒரு குறித்த தொகையைக் கட்டிக்கொண்டு வர வேண்டும்.

இந்த ஜர்மானிய லாண் ஷாப்டுகள் (Land-schaften) ஒரு மத்திய போர்டாரால் ஆளப்படுகின்றன. அந்த போர்டில் ஜட்ஜ் பதவிக்குத் தகுதியான ஒருவர் இருக்கிறார். அவருக்கு மாத்திரம் சம்பளம் கொடுக்கப்பட்டு வருகிறது. உறுப்பினரால் தேர்ந்தெடுக்கப்பட்ட நிருவாக சபை (Council of administration), அங்கத்தினர்களின் பொது அமைப்பு (General assembly) இவைகள் மேற்கூறப்பட்ட மத்திய போர்டாரை மேற் பார்வை பார்த்து வருகின்றன. இந்தப் பாங்கு வேலை செய்யும் முக்கிய பகுதிகளில் ஒவ்வொன்றிற்கும் அநேகமாக ஒரு டைரக்டர் இருக்கிறார். இந்த நிருவாகிகளில் எவரும் ஒரு வித ஊதியமும் பெறுவதில்லை.

ஜெர்மனியிலே 23 கூட்டுறவு நிலப் பாங்குகள் (Land-schaften) இருக்கின்றன. அவைகளுள் 8 பாங்குகள் ஒன்று சேர்ந்து ஒரு மத்திய நிலப் பாங்கை ஏற்படுத்தி உள்ளன.

இந்த ஜர்மானிய பாங்குகளின் அமைப்பை ஒட்டி டென்மார்க்கு, ஹாலந்து, ரஷ்யா முதலிய

நாடுகளில் நிலப் பாங்குகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. ஜெர்மனியிலும் சரி, மற்றைய இந்நாடுகளிலுஞ் சரி, இப்பாங்குகளை அரசினர் கவனித்து உதவி வருகின்றனர்.

பிரான்சு தேசத்திலுள்ள 'கிரடிட் பான்ஷியர்' (Credit Foncier) என்னும் நிலப் பாங்கு முற்றிலும் கூட்டுறவு முறைப்பாங்கு அன்று. ஆனால், இது இவ்வளவுக்கு மேற்பட்ட இலாபத்தை அடையக்கூடாதென ஒரு வரம்பு ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இதற்கு அரசாங்க உதவி அதிகம். இதன் கவர்னரையும் (Governor), சில டைரக்டர்களையும் அரசினரே நியமிக்கின்றனர். இது பெரும்பாலும் பெருநிலக் கிழவருக்குப் பயன் தருவதாக நிற்கின்றது.

## அமெரிக்க கூட்டாட்சியின் நிலக்கடன் திட்டம்

1916-ஆம் ஆண்டில் இத்திட்டம் அமெரிக்க ஐக்கிய நாடுகளிற் புகுத்தப்பட்டது. இந்தத் திட்டப்படி அமைக்கப்பட்ட நில அடைமானப் பாங்குகள் கூட்டுறவு முறையைச் சேர்ந்தவைகளே. ஆனால், இவைகளில் அரசினரின் அதிகாரம் அதிகம் காணப்படுகிறது. நாளடைவில் அதிகார முழுவதும் அரசினரிடமிருந்து உறுப்பினரிடம் சேர வேண்டுமென்னும் நோக்கத்துடனே தான் இவை அமைக்கப்பட்டிருக்கின்றன.

ஒவ்வொரு விவசாயியும் கடன் வாங்கும்போது தான் வாங்கப்போகும் கடன் தொகையில் நூற்

றுக்கு 5 வீதம் கட்டணத்தைச் செலுத்த வேண்டும். நில அடைமானப் பாங்கானது, விவசாயிகட்கு நிலத்தின்மேல் கடன் கொடுக்கிறது. இக்கடன்கள் நான்கு வருஷத் தவணை முதல் நாற்பது வருஷத் தவணை வரையில் கொடுக்கப்படுகின்றன. இக் கடன் தொகை அநேகமாக நிலத்தின் மதிப்பில் பாதிக்கு மேற்படுவதில்லை.

இந்தப் பாங்குகள், ஆங்காங்குள்ள கடன் கொள்வோர் சங்கத்தின் மூலமாகவே கடன் கொடுக்கின்றன.

(உ) இந்திய கூட்டுறவு நில அடைமானப் பாங்குகள்

சிறு விவசாயிகளுக்கேற்ற நில அடைமானப் பாங்குகள், கூட்டுறவுப் பாங்குகளேயாகும். சிறு விவசாயிகள், தங்கட்கு வேண்டிய நீண்ட காலக் கடனை இப்பாங்குகளின்மூலம் சௌகரியமாக வாங்கிக்கொள்ளலாம்.

இந்தியாவில் இதுவரை நியமிக்கப்பட்டுள்ள நில அடைமானப் பாங்குகள் யாவும் கூட்டுறவு முறையை ஒட்டியவையல்ல. ஆனல், கூட்டுறவு முறையே பெரும்பாலும் இவைகளால் அநுஷ்டிக்கப்பட்டிருக்கின்றன. இவற்றில் சில தனிப்பட்ட நபர்களும் உறுப்பினர்களாய் இருக்கின்றார்கள்.

இவை யாவும் வரையறுத்த பொறுப்பை உடையனவே. இவற்றில் ஒவ்வொருவரும் இத்தனை பங்குகளுக்கு மேல் வாங்கக் கூடாதென்ற வரையறை இருக்கிறது. ஒருவருக்கு எத்தனை

பங்கு இருந்தாலும், அவருக்கு ஓர் ஓட்டுக்குமேல் கிடையாது. இலாபத்தில் பங்கு இவ்வளவுக்குமேல் கொடுக்கக் கூடாதென்னும் வரையறையும் இருக்கிறது.

ஒரு கூட்டுறவு நில அடைமானப் பாங்கு கீழ்க் காணும் நோக்கங்களுடன் அமைக்கப்பட வேண்டும் :

(அ) விவசாயியின் நிலம் வீடு இவைகளைக் கடனிலிருந்து மீட்பது.

(ஆ) நிலச் சாகுபடி முறைகளை விருத்தி செய்வது ; விவசாயிகட்கு வீடு கட்டப் பணம் கொடுப்பது.

(இ) பழங்கடனைக் கொடுத்துத் தீர்ப்பது.

(ஈ) ஒவ்வொரு சமயம், புதிதாக நிலம் வாங்குவதற்குப் பணம் கொடுப்பது.

**நிருவாகமும் எல்லையும்:**—இப்பாங்குகள் மிகப் பரந்த எல்லையில் விவகாரங்களை வைத்துக்கொள்ளக் கூடாது. கடன் வாங்கியவர்கள் தவறாமல் பணத்தைத் திருப்பிக் கொடுத்துவிடத்தக்க ஏற்பாடு செய்யப்பட வேண்டும்.

கூட்டுறவு நில அடைமானப் பாங்கு கீழ்க் காணும் காரியங்களுக்காகக் கடன் கொடுக்கலாம் :

(1) நிலம் அல்லது வேறு சொத்தை விருத்தி செய்வதற்காக

(2) விவசாயத்திற்கான செலவு செய்ய

(3) நேரே பயன் தராத காரியங்களுக்காக, உதாரணமாக, நிலத்தைக் கடனிலிருந்து மீட்க,

பழங்கடனைத் தீர்க்க, விவாகம் முதலிய செலவுகட்காக வாங்கும் கடன்கள்.

**இந்தப் பாங்குகள் பல வகையாகப் பணம் பெறலாம்.** அவை வருமாறு:—

(1) பங்குத் தொகைகள், அல்லது ஆரம்பத்திற்கெனப் பலர் கொடுத்த பணம்.

(2) பாதுகாப்புடைய கடன் பத்திரங்கள் (**Debentures**), அடைமானப் பத்திரங்கள் இவைகளை வெளியாருக்கு விற்பதன்மூலம் கிடைக்கும் பணம்.

(3) தனிப்பட்டவர்கள் நீண்ட நாளைக்கு இப் பாங்குகளில் போடும் விடு முதல்கள் (**Deposits**).

(4) சில சமயங்களில் வெளி பாங்குகளிடமிருந்து வாங்கப்படும் கடன்கள்.

(5) சேர்த்து வைக்கப்பட்ட சேம நிதிகள்.

இப்படிப் பல வகையாகக் கிடைக்கும் பணத்தைக்கொண்டு நில ஈட்டின்பேரிலே இவை கடன் கொடுக்கின்றன. சில கூட்டுறவுப் பாங்குகள் நேரே விவசாயிகட்குக் கடன் கொடுக்கின்றன; சில சங்கங்களின்மூலம் கொடுக்கின்றன.

**பணம்**:—ஒவ்வொரு பாங்கும் அதன்பேரில் நல்ல நம்பிக்கை உண்டாவதற்காக, பங்குத் தொகையைச் சேர்க்க வேண்டும். சாதாரணமாக நிலத்தின் மதிப்பில் பாதித் தொகைக்குமேல் கடன் கொடுக்கக் கூடாது.

**சர்க்காரின் உதவி**:—இந்த அடைமானப் பாங்குகள் விற்கும் பாதுகாப்புடைய கடன் பத்திரங்கட்கு (**Debentures**) அரசாங்கமானது, இவ்வளவு வட்டி

யாவது தரப்படும் என்று உறுதி கூறலாம். அப்படி உறுதி கூறினுல், கடன் பத்திரங்களை அநேகர் விரும்பி வாங்குவார்கள்.

அதுவுமல்லாமல், இப்பாங்குகளின் ஆரம்ப காலத்தில் கவர்ன்மெண்டாரே மேற்கூறப்பட்ட கடன் பத்திரங்களை வாங்குவதன் மூலம் இப்பாங்கு கட்கு உதவியளிக்கலாம். அதோடு கவர்ன்மெண் டார் கடன் கொடுத்தும் உதவலாம்.

அரசினர் ஒவ்வொரு நில அடைமானப் பாங் கின் நிருவாக சபையில், தாமே ஒருவரை நியமித்து விவகாரங்கள் சரியாக நடக்கின்றனவா என்று கவனிப்பது நல்லது.

## (அ) சென்னை

இந்த மாகாணத்தில் முதல் முதல் இந்தப் பாங்குகள் 1924, 25-ஆம் ஆண்டில் தொடங்கப் பட்டன. அந்த வருஷத்தில் இரண்டே பாங்குகள் தோன்றின. 1927-ஆம் வருஷத்திற்குள் மேலும் 10 பாங்குகள் உண்டாயின.

இவைகளெல்லாம் ஒருசில கிராமங்கட்காகவே உண்டாக்கப்பட்டன. ஏனெனில், சில கிராமங்க ளானுல், இப்பாங்குகள் எல்லா விவகாரங்களையும் கவனித்தல் எளிது.

இவைகளுக்கு உள்ள பொறுப்பு வரையறுக் கப்பட்ட பொறுப்பேயாகும். அங்கத்தினராக விரும்புபவர் இப்பாங்கின் பங்கை வாங்க வேண்டும். இப்பாங்குகள் தங்களுக்கு வேண்டிய பணத்தை

நில அடைமானத்தாலேற்பட்ட பாதுகாப்புடைய கடன் பத்திரங்களை விற்பதன் மூலம் தயாரித்துக் கொள்ள வேண்டும். இக்கடன் பத்திரங்களை வெளியார் வாங்குகிற அளவு தாங்களும் வாங்குவதாக அரசினர் உறுதி தந்தனர். அதனால், இக்கடன் பத்திரங்களுக்கு மதிப்பு அதிகம் ஏற்பட்டது.

ஆரம்பத்தில் இப்பாங்குகள் ஓர் ஆசாமிக்கு 2000 ரூபாய்க்குமேல் கடன் கொடுக்கவில்லை. ஆனால், இப்போது 5000 ரூபாய் வரையில் கடன் கொடுக்கின்றன. இக்கடன்களுக்குச் சாதாரணமாக 100க்கு 6 வீதம் வட்டி வாங்கப்படுகிறது.

ஓர் அங்கத்தினர் கடனுக்கு மனுச்செய்து கொண்டால், அவருடைய நிலம் மதிப்பு இடப்படும். அவர் எதற்காகக் கடன் வாங்குகிறார் என்பதும் கவனிக்கப்படும். அவர் வருஷா வருஷம் எவ்வளவு திருப்பிக் கொடுக்கக்கூடும் என்பதும் ஆராயப்படும். அதன் பிறகே அவருக்குக் கடன் கொடுக்கப்படும். அப்படிக் கொடுக்கும் கடன், அந்த நில மதிப்பில் பாதிக்கு மேல் இராது.

பிறகு பாங்கானது, அடைமானமாகப் பெற்ற நிலத்தின்பேரில் பாதுகாப்புடைய கடன் பத்திரங்களைத் தயார் செய்து, பொது மக்களுக்கும், கவர்ன்மெண்டாருக்கும் விற்றுப் பணம் பெறும். சாதாரணமாக நன்றாக நடக்கும் பாங்கானால், இக்கடன் பத்திரங்கள் எளிதில் விற்றுப்போகும். இப்பாதுகாப்புடைய கடன் பத்திரங்களுக்கு வட்டி ஆரம்பத்தில் 100க்கு 7 வீதம் என வரையறுக்கப்

பட்டது. ரெஜிஸ்டிராரே இப்பாங்குகள் நன்ருக நடைபெறுகின்றனவா எனக் கவனித்து, இக்கடன் பத்திரங்களை வாங்கி இருப்பவர்களுக்கு எவ்வித இடையூறும் நஷ்டமும் உண்டாகாதவாறு கவனித்து வருகிறார்.

அங்கங்கேயுள்ள நில அடைமானப் பாங்குகள் அங்கங்கே அவற்றின் கடன் பத்திரங்களை விற்பது முதலில் கஷ்டமாய் இருந்தது. ஆகையால், மாகாண முழுவதற்கும் ஒரு மத்திய நில அடைமானப் பாங்கு ஏற்படுத்துவது அவசியமாகக் காணப்பட்டது. கூட்டுறவைப்பற்றி ஆராய்ச்சி செய்த டவுன்செண்டு கமிட்டியாரும் (**The Townsend Committee on Co-operation**, 1927-28), பாங்கு விசாரணைக் கமிட்டியாரும், விவசாய ஆராய்ச்சிக் கமிட்டியாரும், ஒரு மத்திய பாங்கு ஏற்படுத்துவதே நல்லது எனச் சிபாரிசு செய்தனர்.

அவ்வாறே 1929-ஆம் வருஷம் மத்திய நில அடைமானப் பாங்கு சென்னையில் ஏற்படுத்தப்பட்டது. இதில் தனிப்பட்டவர்கள் அங்கத்தினர்களாயிருப்பதுடன் பல நில அடைமானப் பாங்குகளும் அங்கங்களாய் இருக்கின்றன.

கவர்ன்மெண்டார் இப்பாங்குக்குப் பல வகையிலும் உதவி செய்திருக்கின்றனர்; செய்தும் வருகின்றனர். ஆரம்ப காலத்தில் உதவிக்காக வட்டி இல்லாமல், அரசாங்கத்தார் 1500 ரூபாய் கடன் கொடுத்தனர். இப்பாதுகாப்புடைய கடன் பத்திரங்களில் ஒரு கோடி ரூபாய் பெறுமானவை

களுக்கு நூற்றுக்கு ஆறு வீதமாவது வட்டி கொடுக்கப்படுமென்று அரசினர் உறுதி கூறியுள்ளனர். மேலும், இருவர் டேபுடி ரெஜிஸ்டராரும், இருபத்தாறு சப்டேபுடி ரெஜிஸ்டரார்களும் அரசாங்கச் சம்பளம் பெற்றுக்கொண்டு இப்பாங்குக்கு உதவி செய்து கொண்டிருக்கின்றனர். ஒவ்வோர் அடைமானப் பாங்கும் தான் பெறும் அடைமான நிலங்களை மத்திய பாங்குக்கு மாற்றிக்கொள்ளுகின்றது. அந்த நிலங்களின்மேல் மத்திய அடைமானப் பாங்கு, பாதுகாப்புடைய கடன் பத்திரங்களைத் தயாரித்து விற்கின்றது.

சென்னைக் கூட்டுறவு மத்திய நில அடைமானப்பாங்கு

உறுப்பினரின் எண் (தனிப்பட்டவர்) .... 457

(1936-37-ஆம் ஆண்டு)

(ஆரம்ப நில அடைமானப் பாங்குகள்) .... 90

பங்குத் தொகை .... ரூ. 5, 34, 300.

வாங்கியுள்ள தொகை .... ரூ. 11,440,269.

சென்னை மாகாணத்திலே தொண்ணூற்று மூன்று ஆரம்ப நில அடைமானப் பாங்குகள் இருக்கின்றன, இவற்றின் உறுப்பினர் எண், 29,248. பங்குத் தொகை ரூ. 8,63,407. இவை வாங்கியுள்ள கடன் தொகை ரூ. 11,640,257.

## (ஆ) பம்பாய்

இம்மாகாணத்தில் நில அடைமானப் பாங்குகளில் விவசாயிகளே உறுப்பினர்களாய் இருக்கின்

ரூர்கள். முதலில் தர்வார், புரோச்சு (Dharwar and Broach) ஜில்லாக்களில் இவை ஆரம்பிக்கப்பட்டன கவர்ன்மெண்டார், இவற்றுக்குப் பல வகையிலும் உதவி செய்தனர். இந்த அடைமானப் பாங்குகளுக்கு மாகாணக் கூட்டுறவுப் பாங்கு உதவி செய்து வந்தது. மாகாணக் கூட்டுறவுப் பாங்கே, நில அடைமான டிபார்ட்மெண்டு என்னும் ஒரு கிளையை ஸ்தாபித்தது.

முதலில் ஆரம்பித்த அடைமானப் பாங்குகள் நன்றாக வேலை செய்தபடியால், அரசினர் மேலும் மேலும் உற்சாகமூட்டி வந்தனர். மாகாணக் கூட்டுறவுப் பாங்குகளில் பணம் போடுகிறவர்கள் குறுகிய காலத்துக்கே போடுவதால், அந்தப் பாங்குகள் தங்களிடமிருக்கும் பணத்தை நீண்ட காலத்திற்கு நிலத்தின்மேல் கடன் கொடுப்பது அவ்வளவு நல்லதன்று எனக் கருதப்பட்டது. ஆதலால், 1935-ஆம் வருஷத்தில் பம்பாய் மாகாணக் கூட்டுறவு நில அடைமானப் பாங்குகள் துவக்கப்பட்டன. இவற்றின் முக்கிய வேலை ஆங்காங்குள்ள கூட்டுறவு அடைமானப் பாங்குகளுக்குப் பண வசதியை உண்டாக்கிக் கொடுப்பதேயாகும். மேலும், அவற்றின் நடை முறை முதலியவைகளையும் இவை கவனித்து வருகின்றன.

இப்பாங்குகள் கீழ்க் காணும் காரியங்களுக்காகக் கடன் கொடுக்கின்றன :

(1) நிலத்தை விருத்தி செய்தல்; சாகுபடி முறைகளை மேன்மைப்படுத்தல்.

(2) விலையுயர்ந்த விவசாய இயந்திரம் கருவி இவைகளை வாங்கல்.

(3) அடைமானம் வைக்கப்பட்ட நிலம் அல்லது வீட்டை மீட்டல்; பழங்கடன்களைக் கொடுத்தல்.

(4) நில விருத்தி செய்வதற்காக நிலம் வாங்குதல்; சாகுபடி செய்யப்படாத நிலத்தைச் சாகுபடி செய்வதற்காக வாங்குதல்.

எந்த அங்கத்தினருக்கும் 10,000 ரூபாய்க்கு மேல் கடன் கொடுக்கப்படாது என்று இம்மாகாணத்தில் ஒரு திட்டம் அமைக்கப்பட்டிருக்கிறது. எந்தக் கடனையும் 20 வருஷத்திற்குள் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும்.

உறுப்பினர்கள் தாங்கள் வாங்கப் போகும் கடன் தொகையில், நூற்றுக்கு ஐந்து வீதம் பங்குத் தொகையாகச் செலுத்த வேண்டும். அந்தப் பங்குத் தொகையெல்லாம் தனியாகச் சேமித்து வைக்கப் படுகின்றன. அடைமானமாக வைக்கும் நில மதிப்பில் பாதிக்குமேல் கடன் தொகையாகக் கொடுக்கப் படமாட்டாது.

இந்தப் பாங்குகள் இலாபம் சம்பாதிப்பதை முக்கிய நோக்கமாகக் கொள்ளாதவாறு தடுப்பதற்குச் சில ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. அவை, மிச்ச இலாபத்திலே 100க்கு 25 வீதம் சேம நிதிக்கென ஒதுக்கி வைக்கப்படுதல்; பங்குத் தொகையின்பேரில் 100க்கு 6¼ வீதத்திற்குமேல் வட்டி கொடுக்கப்படாமை என்பன.

கடன் பத்திரங்களை வாங்கி இருப்பவர்களின் பாதுகாப்புக்காக ரெஜிஸ்டராராவது, வேறு யாராவது டைரக்டர் சபையில் நியமிக்கப்படுவதுண்டு.

**பம்பாய் மாகாணக் கூட்டுறவு நில அடைமானப் பாங்கு:**—1935-ஆம் வருஷம் டிசம்பர் மாதத்தில் இது தொடங்கப்பட்டது. இதன் பங்குத் தொகை 3,63,020 ரூபாய்.

ஆரம்பப் பாங்குகள் 14 இருக்கின்றன. இவற்றின் உறுப்பினர்களுள்ளே கடன் வாங்காத உறுப்பினரும் இருக்கின்றனர்.

## (இ) பஞ்சாபு

இந்த மாகாணத்தில் 1920-ஆம் ஆண்டிலேயே நில அடைமானப் பாங்கு ஏற்படுத்தப்பட்டது. ஜாங் என்னும் இடத்திலுள்ள கூட்டுறவு நில அடைமானப் பாங்கு மிகவும் பழமையானது. இந்த மாகாணத்தில் இப்போது 12 கூட்டுறவு அடைமானப் பாங்குகள் இருக்கின்றன. இவைகளில் நிலச் சொந்தக்காரர்மட்டுந்தான் உறுப்பினராகச் சேரலாம்.

நிலத்தைக் கடனிலிருந்து மீட்பதற்கும், சில்லறைக் கடன்களைக் கொடுத்து ஒழிப்பதற்கும், நிலத்தை விருத்தி செய்வதற்கும் இப்பாங்குகள் கடன் கொடுக்கின்றன. ஒரு குறித்த நிலத்தின் நிலவரி எவ்வளவு உண்டோ, அதைவிட முப்பது மடங்கு தொகைதான், அந்த நிலத்தின்மேல் கடன் கொடுக்கப்படுகிறது.

இவற்றுள் சிலவற்றில் டைரக்டர்கள் தங்களுக்கும், தங்கள் உறவினர்களுக்கும் தாராளமாகக் கடன் கிடைக்கும்படி செய்துகொள்ளுகின்றார்கள். இம்மாதிரி கடன் கொடுக்கக் கூடாதென ஐந்து பாங்குகள் தடுத்துவிட்டன. இன்னும் ஆறு பாங்குகளில் இப்படிப்பட்ட கடன் வேண்டுமானால், டைரக்டர்களில் மூன்றில் இரண்டு பங்கு எண்ணிக்கையினர் வந்திருந்து அநுமதிக்க வேண்டும்; கவர்ன்மெண்டு அங்கத்தினரும் சம்மதம் அளிக்க வேண்டும் என்னும் விதி ஏற்படுத்தப்பட்டிருக்கிறது.

இக்கூட்டுறவு நில அடைமானப் பாங்குகள் பஞ்சாபு, சென்னை, பம்பாய் மாகாணங்களில் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. ஓரளவு அஸ்ஸாம், வங்காள மாகாணங்களிலும் காணப்படுகின்றன.

## (ஈ) வங்காளம்

இந்த மாகாணத்திலே ஐந்து நில அடைமானப் பாங்குகள் இருக்கின்றன. ஒன்று, 1924-ஆம் வருஷம் ஆரம்பிக்கப்பட்டது; மற்றது, 1927-ஆம் வருஷம் தொடங்கப்பட்டது ஏனையவைபின்.

இவையனைத்தும் கூட்டுறவு அடைமானப் பாங்குகளே. மற்ற மாகாணங்களிற் போலவே இங்கும் சில குறித்த காரணங்களுக்காகவே கடன் கொடுக்கப்படுகிறது.

இவற்றின் பொறுப்பு வரையறுக்கப்பட்டிருக்கிறது.

(உ) அஸ்ஸாம்

கூட்டுறவு முறையில் ஏற்படுத்தப்பட்ட ஐந்து நில அடைமானப் பாங்குகள் இம்மாகாணத்தில் இருக்கின்றன. இவை பெரும்பாலும் 1926-ஆம் வருஷத்திற்குப் பின்பே தொடங்கப்பட்டவை.

மற்ற பாங்குகளைப் போலவே இவைகளும் குறித்த காரியங்களுக்காகக் கடன் கொடுக்கின்றன. மற்ற நடை முறைகள் எல்லாம் ஒரே மாதிரியானவைகளே.

---

## 8. இந்திய கூட்டுறவைப்பற்றிய சில புள்ளி விபரங்கள்*

1. கூட்டுறவு ஸ்தாபனங்களின் எண் (1935 - 36)

| | | |
|---|---|---|
| மத்திய சங்கங்கள் (மாகாணப் பாங்குகள், மத்திய பாங்குகள், பாங்கு ஐக்கிய சங்கங்கள்) | .... | 626 |
| மேற்பார்வை பார்க்கும், உறுதி கூறும் ஐக்கிய சங்கங்கள் | .... | 731 |
| விவசாயச் சங்கங்கள் | .... | 94,433 |
| விவசாயச் சங்கங்களல்லாதவை | .... | 12,167 |
| மொத்தம் | | 107,957 |

* இந்திய அரசினர் புள்ளி விவரங்கள் 1935-36.

## கூட்டுறவு ஸ்தாபனங்களின் நடை முதல்

| மாகாணம் | | பங்குத்தொகை கொடுக்கப் பட்டது (1000 கணக்கில்) | மொத்தப் பணம் பழக்கத்திலிருப்பது (ஆயிரக் கணக்கில்) | ஆள் ஒன்றுக்கு எவ்வளவு சராசரி முதல் என்பது அணாக்கள் |
|---|---|---|---|---|
| சென்னை | .... | 22495 | 167367 | 55 |
| பம்பாய் | .... | 19645 | 148739 | 125 |
| சிந்து | ... | 4689 | 32854 | 125 |
| வங்காளம் | .... | 23279 | 189905 | 58 |
| பீஹார், ஒரிஸ்ஸா | .... | 5973 | 58669 | 24 |
| ஐக்கிய மாகாணங்கள் | | 6312 | 24136 | 8 |
| பஞ்சாபு | .... | 19978 | 184894 | 117 |
| பர்மா | .... | 9211 | 23846 | 27 |
| மத்தியமாகாணம்பீஹார் | | 3512 | 54061 | 53 |
| அஸ்ஸாம் | .... | 868 | 9205 | 16 |
| வடமேற்கு எல்லை மாகாணம் | | 391 | 2282 | 15 |
| கூர்க்கு | .... | 352 | 1688 | 135 |
| ஆஜ்மீர், மார்வாரா | .... | 781 | 5483 | 146 |
| ஹைதராபாத்து ஆட்சிப் பிரதேசம் | | 265 | 1309 | 105 |
| டில்லி | ... | 328 | 3108 | 71 |
| மொத்தம் (பிரிட்டிஷ் இந்தியா) | ... | 118079 | 904546 | 51 |
| மைசூர் | .... | 5260 | 23607 | 55 |
| பரோடா | .... | 912 | 8190 | 50 |
| ஹைதராபாத்து | .... | 5422 | 23270 | 24 |
| போபால் | ... | 132 | 2231 | 51 |
| குவாலியர் | .... | 1290 | 8949 | 39 |
| இந்தூர் | ... | 712 | 9080 | 104 |
| காஷ்மீரம் | ... | 2433 | 9396 | 40 |
| திருவாங்கூர் | .... | 3573 | 9192 | 26 |
| கொச்சி | ... | 355 | 2548 | 31 |
| மொத்தம் (சமஸ்தானங்கள்) | .... | 20089 | 96463 | 37 |
| ஆக மொத்தம் | .... | 138168 | 1001009 | 49 |

கூட்டுறவு ஸ்தாபனங்களின் எண்ணும் நிலையும் (மாகாண வாரியாக)

| மாகாணம் | ஜனத் தொகை (மில்லியன்) | மத்திய மாகாணப் பாங்குகள். மத்திய பாங்குகள், பாங்கு ஐக்கிய சங்கங்கள் | மேற்பார்வை பார்க்கும், உறுதி கூறும் ஐக்கிய சங்கங்கள் | விவசாயச் சங்கங்கள் | விவசாயச் சங்கம் அல்லாதவை | மொத்தம் | 100000 மனிதருக்கு எத்தனை சங்கம் |
|---|---|---|---|---|---|---|---|
| சென்னை .... | 49·1 | 33 | 301 | 11482 | 1463 | 13284 | 27·1 |
| பம்பாய் .... | 19·1 | 14 | 96 | 3913 | 824 | 4847 | 25·4 |
| சிந்து .... | 4·2 | 1 | 18 | 1000 | 250 | 1269 | 30·2 |
| வங்காளம் .... | 51·9 | 118 | 3 | 21112 | 2279 | 23512 | 45·3 |
| பீஹார், ஒரிஸ்ஸா.... | 39·7 | 67 | 29 | 8502 | 330 | 8928 | 22 5 |
| ஐக்கிய மாகாணங்கள் | 50·0 | 73 | 3 | 6924 | 421 | 7421 | 14·8 |
| பஞ்சாபு .... | 25 2 | 119 | .... | 18559 | 3820 | 22498 | 89·3 |
| பர்மா .... | 13·9 | 11 | 228 | 1734 | 177 | 2150 | 15·5 |
| மத்திய மாகாணங்கள், பேரார் | 16·4 | 36 | 6 | 3662 | 116 | 3820 | 23·3 |
| அஸ்ஸாம் .... | 9·3 | 21 | .... | 1301 | 93 | 1415 | 15·2 |
| வடமேற்கு எல்லை மாகாணம் | 2·5 | 3 | .... | 569 | 50 | 622 | 24·9 |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| கூர்க்கு .... | 0·2 | 1 | 13 | 230 | 38 | 282 | 141·0 |
| ஆஜ்மீர், மார்வாரா.... | 0·6 | 7 | 2 | 617 | 124 | 750 | 125·0 |
| ஹைதராபாத்து ஆட்சிப்பிரதேசம் | 0·2 | .... | 1 | .... | 26 | 27 | 13·5 |
| டில்லி .... | 0·7 | 1 | .... | 217 | 76 | 294 | 42·0 |
| மொத்தம் (பிரிட்டிஷ் இந்தியா) .... | 283·0 | 505 | 700 | 79822 | 10092 | 91119 | 32·2 |
| மைசூர் .... | 6·9 | 12 | .... | 1451 | 441 | 1904 | 27·6 |
| பரோடா .... | 2·6 | 8 | 1 | 901 | 201 | 1111 | 42·7 |
| ஹைதராபாத்து .... | 15·5 | 40 | 1 | 2435 | 475 | 2951 | 19 0 |
| போபால் .... | 0·7 | 22 | .... | 919 | 22 | 963 | 137·6 |
| குவாலியர் .... | 3·7 | 18 | .... | 4183 | 43 | 4244 | 114·7 |
| இந்தூர் .... | 1·4 | 5 | .... | 662 | 58 | 725 | 51·8 |
| காஷ்மீரம் ... | 3·8 | 14 | .... | 2578 | 359 | 2951 | 77·7 |
| திருவாங்கூர் .... | 5·7 | 1 | 29 | 1355 | 358 | 1743 | 30·6 |
| கொச்சி .... | 1·3 | 1 | .... | 127 | 118 | 246 | 18·9 |
| | 41·6 | 121 | 31 | 14611 | 2075 | 16838 | 40·5 |
| ஆக மொத்தம் .... | 324·6 | 626 | 731 | 94433 | 12167 | 107957 | 33·2 |

## கூட்டுறவு ஸ்தாபன உறுப்பினர்கள்

| மாகாணம் | மத்திய சங்கங்கள் | மேற்பார்வை பார்க்கும், உறுப்பு கூடும் ஐக்கிய சங்கங்கள் | விவசாயச் சங்கங்கள் | ஏனைய சங்கங்கள் | ஆரம்பச் சங்க உறுப்பினர் | 1000 பேருக்கு எத்தனை பேரென்பது |
|---|---|---|---|---|---|---|
| சென்னை .... | 16180 | 8364 | 585401 | 302287 | 887688 | 18·1 |
| பம்பாய் .... | 13649 | 2796 | 263113 | 274351 | 537464 | 28·1 |
| சிந்து .... | 2623 | 692 | 31155 | 39675 | 70830 | 16·9 |
| வங்காளம் .... | 25736 | 257 | 506610 | 289478 | 796088 | 15·3 |
| பீஹார், ஒரிஸ்ஸா ... | 11353 | 9240 | 229044 | 33143 | 262187 | 6·6 |
| ஐக்கிய மாகாணங்கள் | 12185 | 169 | 163662 | 43113 | 206775 | 4·1 |
| பஞ்சாபு .... | 36165 | .... | 632348 | 145050 | 777398 | 30·8 |
| பர்மா .... | 1582 | 1600 | 36868 | 37342 | 74210 | 5·3 |
| மத்திய மாகாணங்களும், பேராரும் | 43140 | 7021 | 51715 | 21454 | 73169 | 4·5 |
| அஸ்ஸாம் .... | 2015 | .... | 46274 | 15313 | 61587 | 6·6 |
| வடமேற்கு எல்லைப் புறம் | 531 | .... | 19441 | 2882 | 22323 | 8·9 |
| கூர்க்கு .... | 406 | 229 | 12891 | 4689 | 17580 | 87·9 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ஆஜ்மீர், மார்வாரா.... | 1693 | 45 | 14168 | 7385 | 21553 | 35.9 |
| ஹைதராபாத்து அட்மினிஸ்ட்ரேடிவ் ஏரியா | .... | 26 | .... | 10431 | 10431 | 52·2 |
| டில்லி .... | 484 | .... | 5670 | 6430 | 12,100 | 17·3 |
| மொத்தம் (பிரிட்டிஷ் இந்தியா) .... | 167742 | 30379 | 2598360 | 1233023 | 3831383 | 13.5 |
| மைசூர் .... | 2856 | .... | 64178 | 77425 | 141603 | 20·5 |
| பரோடா .... | 2551 | 39 | 29151 | 19165 | 48316 | 18·6 |
| ஹைதராபாத்து .... | 5374 | 2372 | 49284 | 27950 | 77234 | 5·0 |
| போபால் .... | 2218 | .... | 17738 | 538 | 18276 | 26·1 |
| குவாலியர் .... | 6701 | .... | 75228 | 686 | 75914 | 20·5 |
| இந்தூர் .... | 2076 | .... | 11,000 | 10868 | 21868 | 15·6 |
| காஷ்மீரம் .... | 3414 | .... | 46618 | 6327 | 52945 | 14·0 |
| திருவாங்கூர் .... | 3665 | 1613 | 149206 | 68329 | 217535 | 38 2 |
| கொச்சி .... | 149 | .... | 9571 | 14084 | 23655 | 18·2 |
| | 29004 | 4024 | 451974 | 225372 | 677346 | 16·3 |
| ஆக மொத்தம் .... | 196746 | 34403 | 3050334 | 1458395 | 4508729 | 13·9 |

# விவசாயச் சங்கங்கள்

விவசாயிகள் எல்லாவிதக் கூட்டுறவுச் சங்கங்களையும் தங்கட்குப் பயனுள்ளவைகளாகச் செய்து கொள்ளலாம். முதலிற் கூறப்பட்ட கூட்டுறவுப் பண்டசாலைகள் விவசாயிகட்கு வேண்டிய எல்லாப் பண்டங்களையும் வாங்கிக்கொள்ள உபயோகமாய் இருக்கும். பின்பு கூறப்பட்ட கூட்டுறவுப் பாங்குகளும் விவசாயி தனக்கு வேண்டிய கடனைப் பெறுவதற்கும், பணம் சேமித்து வைப்பதற்கும் அநுகூலமாய் இருக்கின்றன.

இப்போது கூறப்படும் சங்கங்கள், முக்கியமாக விவசாயி வேளாண்மைத் தொழிலை நடத்துவதற்கு உதவியான சங்கங்களாகும். விவசாய சம்பந்தமான எல்லாக் காரியங்களையும் செவ்வனே செய்வதற்கும், விளை பொருள்களையும் விவசாயிகள் உண்டுபண்ணும் மற்றைய பொருள்களையும் நல்ல விலைக்கு விற்பதற்கும் இச்சங்கங்கள் துணை நிற்கின்றன.

விவசாயிகள் கூட்டுறவு முறைகளைக் கைக்கொண்டமையால், விவசாயத்திலேயே பெரிய மாறுதல்கள் உண்டாயிருக்கின்றன.

நிலங்களுக்குச் செயற்கை உரம் (எரு) போடுவதென்னும் முறையே, கூட்டுறவு இயக்கம் பரவிய

தால், பல இடங்களில் கையாளப்படுகின்றது. பல செயற்கை உரங்களை விவசாயிகள் கூட்டுறவு முறைகளைக் கையாளுவதால், குறைந்த விலைக்கு வாங்க முடிகிறது. அந்தந்த நிலத்திற்கேற்ற எருவையும் இப்போது விவசாயிகள் உபயோகிக்கின்றார்கள்.

விவசாயிகள் அநேக விலை உயர்ந்த இயந்திரங்களை உபயோகிப்பதற்கு, இக்கூட்டுறவுச் சங்கங்கள் மிகவும் அநுகூலமாய் இருக்கின்றன. அதிக விலையுள்ள இயந்திரங்களை விவசாயிகள் கூட்டுறவுச் சங்கத்திற்கென வாங்கி, எலலோரும் உபயோகிக்கின்றனர். பல விவசாயக் கருவிகளுங் கூடக் கூட்டுறவுச் சங்கங்களின் மூலந்தான் வாங்கப்படுகின்றன. அதனால், விவசாயிகளுக்கு இலாபம் அதிகம்.

விவசாயிகள தங்களிடமுள்ள விளை பொருள்கள் முதலியவைகளைக்கொண்டு, வேறு பல பொருள்களை உண்டாக்கி, அவைகளின் மூலம் விசேஷ இலாபத்தையும் அடைகிறார்கள். வெண்ணெய், பாலேட்டுக்கட்டி முதலியவைகளை விவசாயிகள் விசேஷமாக உண்டாக்கி, விற்பனை செய்து, நல்ல இலாபம் பெறுகிறார்கள். அவர்கள் அப்படி இலாபம் பெறுவதற்குக் காரணமாய் உள்ளவைகள் கூட்டுறவுச் சங்கங்களேயாகும்.

விவசாயிகள் தங்கள் விவசாயப் பொருள்களைக் கூட்டுறவு முறைகளால் நல்ல விலைக்கு விற்கலாம். அப்படி விற்பதால் விவசாயிகள் விசேஷப் பயனை அடைகிறார்கள்.

விவசாயிகள் கூட்டுறவு முறைகளை அநுஷ்டிப்பதால், தனிப்பட்ட மனிதர்களுக்கு உண்டாகும் அசௌகரியங்களெல்லாம் அவர்களை விட்டு நீங்கி விடுகின்றன.

---

## 1. விவசாயச் சங்கங்களின் வரலாறு

பதினென்காம் நூற்றாண்டிலே **ஸ்விட்ஜர்லந்து** தேசத்திலே விவசாயிகளின் சங்கங்கள் முதலில் தோன்றின. அச்சங்கங்கள், பல விவசாயிகளின் பாலை ஒன்று திரட்டி, அதைப் பாலடைக்கட்டி (Cheese) ஆக்குவதற்கென ஏற்பட்டவை. அவற்றிற்குப் **பாலடைக் கட்டியைச் செய்யும் சங்கங்கள்** (Cheese making Societies) அல்லது **புரூடேரீஸ்** (Fruitieres) என்பது பெயர்.

அடுத்தபடியாக விவசாயிகளின் சங்கங்களைப் பதினெட்டாம் நூற்றாண்டில் அயர்லந்து தேசத்தில் காண்கிறோம். அந்தக் கூட்டுறவுச் சங்கங்களுக்கு **நாட்டு** (Knot) என்பது பெயர். அவை சிறு விவசாயிகட்கு வேண்டிய கலப்பை முதலிய விவசாயக் கருவிகளை வாங்குவதற்கு உபயோகமாய் இருந்தன.

மிகவும் சிறந்த முறையில் விசேஷமாகக் கூட்டுறவு முறைகளை அநுஷ்டித்த விவசாயிகள் **டென் மார்க்குத்** தேசத்தினர்களே. டென்மார்க்குத் தேச விவசாய நிலையை முற்றிலும் மாற்றியது, கூட்டுறவு இயக்கந்தான். டென்மார்க்குத் தேசத்தினர் கூட்டுறவு முறைகளை அநுஷ்டிப்பதற்கு முன்பு சாதா

ரண தானியங்களைத்தான் பயிரிட்டார்கள். சாஸ்திரீய முறையில் அவர்கள் பயிரிடவில்லை. ஆனால், 1858-ஆம் வருஷத்திற்குப் பின் அவர்கள் சிற்றுண்டிக்கு வேண்டிய உணவுப் பொருள்களையும், மாட்டிறைச்சியையும் (Meat), வெண்ணெயையும் விசேஷமாகத் தயாரித்தார்கள். அப்படி அவர்கள் ஏராளமாக அப்பொருள்களைத் தயாரிப்பதற்கும், அவைகளை நல்ல விலைக்கு விற்பதற்கும் இன்றியமையாத சாதனமாய் இருந்தது கூட்டுறவு இயக்கமே. கூட்டுறவு முறைகளை டென்மார்க்குத் தேச விவசாயிகள் கைக்கொண்டிராவிட்டால், அவர்கள் இவ்வளவு முன்னேறி இருக்க முடியாது.

புரபசர் செகல்கி (Professor Segelcke) என்பவர், சாஸ்திரீய முறையில் நல்ல வெண்ணெயைத் தயாரிப்பதற்கான முறைகளைக் கண்டுபிடித்தார். இன்னும் பல விஞ்ஞான அறிஞர்களும் மற்றவர்களும் எவ்விதச் சேதமுமின்றிச் சுத்தமான வெண்ணெயை ஏராளமாக எப்படி உண்டாக்குவது என்பதை ஆராய்ச்சி செய்து வந்தார்கள். அரசாங்கமும் பேருதவி புரிந்தது. அதனாற்றான் டென்மார்க்குத் தேசத்தில் விவசாயிகள் முழுப்பயனையும் பெற்றார்கள்.

1882-ஆம் வருஷத்திலே டென்மார்க்குத் தேசத்திலே முதல் கூட்டுறவுப் பாற்பண்ணை (Dairy) ஏற்படுத்தப்பட்டது. அது மிகவும் நன்றாக வேலை செய்தபடியால், டேனிஷ் விவசாயிகள்

கூட்டுறவு முறையை மற்றத் துறைகளிலும் கையாளத் தொடங்கினார்கள்.

1887-ஆம் வருஷத்திலே முதல் முதல் கூட்டுறவுப் பன்றிப் பக்கமாமிசச் சாலை (Bacon factory) ஏற்படுத்தப்பட்டது. வெளி நாடுகட்கு ஏற்றுமதி செய்யப்படும் பன்றி மாமிசம் நல்ல முறையில் தயாரித்தனுப்பப்பட வேண்டுமென்பதே இத்தொழிற் சாலை ஏற்பட்டதன் காரணம். இந்தக் கூட்டுறவுப் பன்றி மாமிசத் தொழில் நிலையத்தின் உறுப்பினர் அனைவரும் தம் பன்றிகளை இத்தொழிற்சாலைக்கே கொடுக்க வேண்டும்; அப்படிச் செய்யாமல் எந்த அங்கத்தினராவது வெளியார் யாருக்கேனும் விற்றால், அப்படி விற்ற ஒவ்வொரு பன்றிக்கும் பத்து ஷில்லிங்கு வீதம் அபராதம் கட்ட வேண்டும்.

1895-ஆம் வருஷத்திலே டேனிஷ் விவசாயிகள் **முட்டை ஏற்றுமதிச் சங்கம்** ஒன்றை ஏற்படுத்தினார்கள். எல்லா அங்கத்தினர்களிடமிருந்தும் இச்சங்கம் முட்டைகளைச் சேகரித்தது; அவைகளைத் தரம் வாரி செய்து பிரித்தது; பின்பு அவைகளை நல்ல விலைக்கு விற்றது.

டென்மார்க்குத் தேசத்துக் கூட்டுறவு இயக்கத்தின் தனிச் சிறப்பு என்னவென்றால், அங்கே பிரசாரமின்றி, பலருடைய தூண்டுதலின்றி, கூட்டுறவு இயக்கமானது விவசாயிகளிடையே தோன்றி வளர்ந்துள்ளதேயாகும். டேனிஷ் விவசாயி எந்தச் சாமானை வாங்க வேண்டி இருப்பினும், அல்லது விற்க வேண்டி இருப்பினும், கூட்டுறவு ஸ்தாப

னத்தை ஏற்படுத்தி, அதன் மூலமாகவே தன் காரியத்தைச் செய்ய வேண்டுமென்று தானே முன் வரும் சிறந்த குணத்தை அணிகலமாகக்கொண்டு நிற்கின்றான்.

இவ்விவசாயிகள் தங்களுக்கு வேண்டிய வீட்டுச் சாமான்களை, அநேகமாக ஒவ்வோர் ஊரிலும் இருக்கும் கூட்டுறவுப் பண்டசாலையிலேயே வாங்குகின்றார்கள். அந்தப் பண்டசாலைகட்கு வேண்டிய பொருள்களை '**ஐக்கியக் கூட்டுறவு சப்ளைச் சங்கம்**' (The United Co-operative Supply Association) கொடுக்கிறது. விவசாயக் கருவிகள், எரு, விதைகள் முதலியவைகளை வாங்குவதற்கும், அநேகமாக ஒவ்வொரு காரியத்திற்கும், ஒவ்வொரு கூட்டுறவுச் சங்கத்தை ஏற்படுத்தி, அவைகளின் மூலமே அவர்கள் வாங்குகிறார்கள்.

**ஜெர்மனி** :—ஜெர்மனித் தேசந்தான் கூட்டுறவுப் பாங்கு முறைக்கு வழி காட்டியாய் நின்றது என்பதை முன்பு கண்டோம். அந்தேசத்தில் கூட்டுறவுச் சங்கங்கள் ஏனைய காரியங்களுக்காகவும் தோன்றின.

1872-ஆம் வருஷத்திலே **பிரிட்பேர்கு**(**Friedberg in Hesse**) என்னும் இடத்தில் முதல் முதல் ஒரு சப்ளைச் சங்கமும் (**Supply Society**), வேறு பல சங்கங்களும் ஏற்படுத்தப்பட்டன. 1871-ஆம் வருஷ முதல் 1895-ஆம் வருஷம் வரையில் தானியங்களைச் சேமித்து வைப்பதற்கும், தானிய இயந்திரங்களை (Mills) ஏற்படுத்துவதற்கும், ரொட்டிகளைச் சுடுவ

தற்கும் கூட்டுறவு சங்கங்கள் ஏற்படுத்தப்பட்டன. உருளைக்கிழங்கிலிருந்து சாராயம் (Spirit) இறக்கு வதற்கும் சில சங்கங்கள் தோன்றின. 1877-ஆம் வருஷம் பல சங்கங்கள் சேர்ந்து, ஒரு கூட்டமைப்பை (Federation) ஏற்படுத்தின.

1883-ஆம் வருஷம் இந்தக் கூட்டமைப்புகள் பல சேர்ந்த ஓர் அகில தேச விவசாயக் கூட்டுறவுக் கூட்டமைப்பு (National Federation of German Agricultural Co-operative Societies) ஏற்பட்டது.

1905-ஆம் வருஷத்திலேதான் எல்லாக் கூட்டுறவு ஸ்தாபனங்களும் தேசீயக் கூட்டமைப்பில் (National Federation) ஐக்கியமாயின.

ஜெர்மனியிலே கூட்டுறவுப் பாங்குகளும், கூட்டுறவு சப்ளைச் சங்கங்களுமே மிகவும் முக்கியமானவை. இவைகளல்லாத மற்றைய கூட்டுறவு ஸ்தாபனங்கள் சற்றுப் பிற்பட்ட காலத்திலேதான் தோன்றின.

1888-ஆம் வருஷம் ஹெஸ்ஸி (Hesse) என்னும் இடத்தில் கூட்டுறவு வெண்ணெய்ப் பண்ணை ஏற்படுத்தப்பட்டது.

1868-ஆம் வருஷத்தில் கூட்டுறவுத் திராக்ஷை ரசச் சாலைகள் (Co-operative Vintries) ஏற்படுத்தப்பட்டன. இத்திராக்ஷை ரசச் சாலைகள், அங்கத்தினரிடமிருந்து திராக்ஷைப் பழங்களைச் சேகரித்து, திராக்ஷை ரசத்தை (Wine) உண்டாக்கி, அதை விற்கின்றன. இவைகள், வெண்ணெய்ப்

பண்ணைகள் எப்படி அங்கத்தினர்களிடமிருந்து பாலை வாங்கி, வெண்ணெய் எடுத்து, அதை விற்கின்றனவோ, அப்படியே திராக்ஷை ரசத்தை உண்டாக்கி விற்கின்றன.

அத்தேசத்திலே தானிய விற்பனைச் சங்கங்களும் பல உண்டு. சில கூட்டுறவுப் பாங்குகளும் தானிய விற்பனை செய்கின்றன.

மேலும், கூட்டுறவு மிருகச் சங்கங்களும் சில உண்டு. இவைகளில் சில, விலங்குகளை நன்றாகப் போஷித்து வளர்க்கும் வேலையில் ஈடுபட்டிருக்கின்றன; வேறு சில, விலங்குகளின் மாமிச வியாபாரத்தைச் செய்கின்றன.

**அயர்லந்து**:—விவசாயிகளுக்குக் கூட்டுறவு ஸ்தாபனங்களால் உண்டாகக் கூடிய நன்மைகளைக் காண வேண்டுமானால், விவசாயிகள் கூட்டுறவு இயக்கத்தை எப்படி எப்படியெல்லாம் பயன்படுத்திக் கொள்ளலாமென்பதை அறிய வேண்டுமானால், டென்மார்க்கு, அயர்லந்து என்னும் இரண்டு தேசங்களின் கூட்டுறவு இயக்கத்தைப்பற்றி அறிந்துகொள்ள வேண்டும்.

விவசாய நிலைமை டென்மார்க்கில் உள்ளது போலவே அயர்லந்திலும் இருக்கிறது. இரண்டு தேச விவசாயிகளும் சிறு குடித்தனக்காரர்கள்; கொஞ்சம் கொஞ்சம் நிலத்தை வைத்துக்கொண்டு ஜீவிப்பவர்கள். இரண்டு தேசங்களிலும் மிருகங்களை வளர்ப்பதற்கும், பாற்பண்ணைகள் வைப்பதற்கும் சாதனங்கள் பல இருக்கின்றன.

அயர்லந்தின் கூட்டுறவு இயக்கத்திற்குத் தாய் போன்றவர், ஸர். ஹொரேஸ் பிளன்கெட்டு (Sir Horace Plunkett) என்பவர். அவரும், அவருடைய நண்பர்களும் கூட்டுறவைப்பற்றிய பிரசாரத்தை மிகவும் மும்முரமாகச் செய்தார்கள். அவர்களுடைய தீவிர முயற்சியால், 1894-ஆம் வருஷம் டப்ளின் (Dublin) நகரத்தில் அயர்லந்து விவசாய ஏற்பாட்டுச் சங்கம் (The Irish Agricultural Organisation Society) ஒன்று ஏற்படுத்தப்பட்டது. அதற்குச் சாதாரணமாக ஐ. ஏ. ஓ. எஸ். (I.A.O.S.) என்பது பெயர். அந்தச் சங்கத்தின் முயற்சியாலேதான் அயர்லந்தில் கூட்டுறவு இயக்கம் பரவிற்று.

இந்த நாட்டிலே பாலேடு வெண்ணெய்ப் பண்ணைகள் உண்டாயின. பின் விவசாயிகட்குத் தேவையான விவசாயப் பொருள்களை வாங்கும் சங்கங்கள் தோன்றின. பிறகு முட்டை விற்பனைச் சங்கங்கள் முதலியவை ஏற்பட்டன.

பல வெண்ணெய்ச் சங்கங்கள் சேர்ந்து கூட்டுறவுக் கூட்டமைப்பை ஏற்படுத்தியுள்ளன. அதற்குக் கூட்டுறவுப் பாலேட்டு ஏஜன்ஸி (Co-operative Creamery Agency) என்பது பெயர். அயர்லந்து விவசாய மொத்த வியாபாரச் சங்கமும் அங்கே உண்டு.

அயர்லந்திலே கூட்டுறவு இயக்கமானது பல கஷ்டங்களுக்கிடையே பரவ வேண்டி இருந்தது. அரசியல் வாதிகள் ஒரு பக்கமும், வியாபாரிகள் ஒரு பக்கமும் இந்த இயக்கம் வலுவடையவொட்டாது

தடை செய்து நின்றனர். எனினும், நாளடைவில் இவ்வியக்கம் பலம் பெற்று, இப்போது அயர்லந்து தேசத்திற்குப் பெரிய சேவை செய்து வருகிறது.

**பின்லந்து**:—அயர்லந்து தேசத்தில் I. A. O. S. என்ன வேலை செய்கிறதோ, அந்த வேலையைப் **பின்லந்து** தேசத்திலே **பெல்லெர்வோ** (Pellervo) என்னும் ஸ்தாபனம் செய்துகொண்டிருக்கிறது. இந்த ஸ்தாபனத்தின் மகத்தான வேலையாலேதான் விவசாயிகள் தங்களுக்கு வேண்டிய கூட்டுறவுச் சங்கங்களை ஏற்படுத்திக்கொள்ளலானார்கள். இந்த ஸ்தாபனம், 1899-ஆம் வருஷத்தில் நிறுவப்பட்டது.

இந்தத் தேசத்திலே அரசாங்கமானது முதலிலிருந்தே இவ்வியக்கத்திற்கு ஆதரவளித்துள்ளது. அநேக அறிஞர்களும் இவ்வியக்கத்தை வளர்த்தார்கள்.

**பிரான்சு**:—நீண்ட காலமாகவே பிரான்சு தேசத்திலே பழத் தொழிற்சாலைகள் (Fruitieres) இருந்து வந்தன. இவைகளையன்றி, விவசாயிகள் தங்களுக்கான கூட்டுறவுச் சங்கங்களை **சிண்டிகட்ஸ் அக்ரிகோலஸ்** (Syndicats Agricoles) என்ற சங்கத்தின் மூலம் ஏற்படுத்திக்கொண்டிருக்கிறார்கள்.

**ஹாலந்து**:—இங்கே 1890-ஆம் வருஷமுதல் விவசாயிகள் தாங்களாகவே கூட்டுறவுச் சங்கங்களை ஏற்படுத்திக்கொள்ளலானார்கள். பல சங்கங்கள் வெண்ணெய் உற்பத்திக்கெனவே உண்டானவைகள். இச்சங்கங்கள் **வெண்ணெய்ப் பரிசோதனைத் திட்டத்தை** (Butter Control System) உபயோகித்

துக்கொள்ளுகின்றன. இப்படிப்பட்ட முறையால் வெண்ணெய் நன்றாய்ப் பரீக்ஷிக்கப்பட்டு வியாபாரத்திற்கு அனுப்பப்படுகிறது.

**இட்டாலி:**—கிட்டத்தட்டக் கூட்டுறவு முறையை ஒட்டிய ஒருவகையான பால் பண்ணை இத்தேசத்தில் நீண்ட காலமாய் இருந்தது. இந்நாட்டின் பல முக்கிய பட்டினங்களிலும் பால் சப்ளைக்காகக் கூட்டுறவுச் சங்கங்கள் ஏற்பட்டுள்ளன.

இவைகளையல்லாமல், **காவே சோஷலி** (Cave Sociali) என்னும் சங்கங்களும் இந்நாட்டில் உண்டு. இவை அங்கத்தினர்களிடமிருந்து திராக்ஷைப் பழத்தைத் திரட்டி, ஒரே தன்மையுதான திராக்ஷை ரசத்தை (Wine) உண்டாக்குகின்றன. திராக்ஷைப் பழச் சக்கையிலிருந்து பிராந்தி காய்ச்சும் சங்கங்களும் உண்டு.

---

## 2. விவசாயிகள் கூட்டுறவு முறையால் வேண்டிய சாமான்களை வாங்கல்

## (Co-operative Supply)

கூட்டுறவுப் பண்டசாலைகள் நடப்பதைப் போலத்தான் கூட்டுறவு சப்ளைச் சங்கங்களும் நடைபெறுகின்றன. ஆனால், கூட்டுறவு சப்ளைச் சங்கங்கள் ஒரு சில சாமான்களையே வாங்கி விற்கின்றன. இந்தச் சங்கங்களில் அடுத்தடுத்து உள்ள பல ஊரிலுள்ளவர்கள் சேரலாம். விவசாயத்துக்கு

வேண்டிய எரு, விதை முதலியவைகளை விவசாயி கள் சில மாதங்களிலேதான் வாங்குவார்கள். இந் தச் சாமான்கள் ஒவ்வொருவருக்கும் எவ்வளவு வேண்டி இருக்கும் என்பது ஒவ்வொரு விவசாயிக் கும் முன்னமே தெரியும். ஆதலால், இம்மாதிரிச் சங்கங்களை நடத்துவதில் கஷ்டம் அதிகமில்லை. இச் சங்கங்களுக்குப் பெரிய கட்டடங்களும் தேவை இல்லை. பட்டினங்களில் உள்ள பண்டசாலைகளைப் போல் இவை பெரியனவாய் இருக்க முடியாது. ஏனெனில், விவசாயிகளின் தேவைகள் மிகக் குறைவானவை.

அநேகமாக இச்சங்கங்கள் விவசாயிகளின் தேவையை அறிந்துகொண்டு, மொத்த வியாபாரச் சங்கத்திடமிருந்து சாமான்களை விலை கொடுத்து வாங்கிவிடுகின்றன. பிறகு அவைகளை விவசாயி கட்குக் கடை விலைக்கு விற்கின்றன. அதனுல் ஏற்படும் இலாபத்தைக் கூட்டுறவுப் பண்டசாலை களைப் போல, அவரவர் வாங்கிய சாமான்களுக் கேற்ப, பங்கிட்டுக் கொடுக்கின்றன.

முதலில் பெரும்பாலும் இச்சங்கங்கள் விவ சாயிகளுக்கான சாதாரணச் சாமான்களையே வாங்கி விற்கின்றன ; பிறகுதான் விவசாய இயந்திரங்கள், கருவிகள் முதலியவைகளையும் விற்க முன் வரு கின்றன.

இவைகளிற் சில, வரையறுக்கப்பட்ட பொறுப் புடையவை ; சில, வரையறுக்கப்படாத பொறுப் புடையவை.

சாதாரணப் பண்டசாலைகள் தங்களுக்கு வேண்டியவைகளை மொத்தமாக வாங்குவதற்கு மொத்த வியாபாரச் சங்கங்களை ஏற்படுத்திக்கொண்டிருப்பது போலவே, இச்சங்கங்களும் மொத்த வியாபாரச் சங்கங்களை ஏற்படுத்திக்கொண்டிருக்கின்றன.

விவசாயப் பொருள்களைச் சப்ளை செய்யும் சங்கங்கள் விவசாயிகளிடம் பரவுவதற்கு இடையூறுகள் பல இருந்தன. பெரும்பாலும் விவசாயிகள் மாறுதலை விரும்பாதவர்கள். யாரேனும் ஒரு விவசாயி புது முறைகளை அநுஷ்டித்து அவற்றால் பலன் கண்டாற்றான், மற்றவர்கள் அவைகளைக் கைக்கொள்வார்கள். ஆகலால், இந்தச் சங்கங்கள் விவசாயிகட்கு வேண்டிய பொருள்களை வாங்கிக் கொடுத்ததல்லாமல், அவைகளை எப்படித் திறம்பட உபயோகிப்பது என்பதையும் சொல்லிக் கொடுக்க வேண்டி நேரிட்டது.

விவசாயிகள் தங்களுக்கு உபயோகமான விவசாய இயந்திரங்களைக் குறைந்த விலையாக இருந்தால், சொந்தத்திற்கே வாங்கிவிடுகிறார்கள். சாதாரணமாக ஒரு விவசாயி வாங்க முடியாத அவ்வளவு அதிக விலையுள்ள இயந்திரங்களும் இருக்கின்றன அல்லவா ? இவைகளைப் பலருக்கும் உபயோகமாகும்படி ஒரு கூட்டுறவுச் சங்கத்திற்கென விவசாயிகள் வாங்குகிறார்கள்.

தங்களுடைய சொந்த உபயோகத்திற்கென வாங்குவதானாலும், பொது உபயோகத்துக்காக

வாங்குவதாலும், விவசாயிகள் அதற்கெனக் கூட்டுறவுச் சங்கங்களை ஏற்படுத்திக்கொள்ளுகிறார்கள்.

இயந்திரங்களைப் பொது உபயோகத்திற்கென வாங்குவதானால், ஒவ்வொரு விவசாயியும் தனக்கு உள்ள நிலத்திற்கேற்ப, கூட்டுறவுச் சங்கத்தின் பங்குகளை வாங்கிக்கொள்ளுகிறான். ஒவ்வோர் அங்கத்தினரும் அந்த இயந்திரம் தமக்கு எப்போது வேண்டுமென்பதைத் தபால் மூலம் தெரிவித்துக் கொள்ள வேண்டும். அவரவர் கேட்ட வரிசைப்படி அவரவருக்கு இயந்திரம் கொடுக்கப்படும். ஒவ்வொருவரும் அவ்வியந்திரத்தை எத்தனை நாள் வைத்துக்கொள்ளலாம், அதற்காக எவ்வளவு வாடகை கொடுக்க வேண்டும் என்பவற்றை எல்லாம் சங்க விதிகளில் காணலாம்.

இந்தச் சங்கங்கள் முதலில் இயந்திரங்களை வாங்குவதற்குப் பங்குப் பணம் போதாமற் போய் விட்டால், வேறு சங்கங்களிடம் கடன் வாங்குகின்றன; சில சமயம், அரசாங்கமும் உதவி செய்கின்றது.

இச்சங்கங்கள் இம்மாதிரி இயந்திரங்களை வாங்கி வாடகைக்குக் கொடுப்பதில் இரண்டு முக்கிய கஷ்டங்கள் இருக்கின்றன. முதலாவது, பல அங்கத்தினர்களும் ஒரே இயந்திரத்தை ஒரே சமயத்தில் கேட்கலாம். இரண்டாவது, இவ்வியந்திரங்களை விவசாயிகள் தாங்களாகவே ஓட்ட முடியாது. ஆகையால், அதற்கென ஓர் ஆசாமியை

வேலைக்கு வைத்துக்கொள்ள வேண்டி இருக்கிறது. இவ்விரண்டு கஷ்டங்களையும் இச்சங்கங்கள் சமாளித்துக்கொள்ளுகின்றன.

---

## 3. கூட்டுறவு விவசாயப் பொருளுற்பத்திச் சங்கங்கள்

விவசாயிகள் தாங்கள் உண்டாக்கும் பொருள்களைக்கொண்டு, வேறு பொருள்களை உற்பத்தி செய்தாவது, தங்களுடைய பொருள்களைச் சுத்தி செய்து வகைப்படுத்தியாவது, விற்பனைக்குக் கொண்டுவருகிறார்கள். இக்காரியங்களுக்காகக் கூட்டுறவுச் சங்கங்களையும் ஏற்படுத்தி இருக்கிறார்கள்.

உதாரணமாக, விவசாயிகளின் பாற்பண்ணை, சாராயங்காய்ச்சும் சாலை முதலியவை விவசாயிகளுடைய பொருள்களை வேறு பொருள்களாக மாற்றி விற்பனைக்குக் கொண்டுவருவன. முட்டைச் சங்கங்கள், தானியச் சங்கங்கள், பழச் சங்கங்கள் முதலியவை விவசாயிகளின் பொருள்களை நல்ல விலைக்கு விற்பதற்கென ஏற்படுத்தப்படுபவை.

பாற்பண்ணை முதலிய பொருளுற்பத்திச் சங்கங்களில் கூலியாட்களை வைத்து வேலை நடத்த வேண்டி இருக்கிறது. அந்த முறையில் அவை சாதாரணத் தொழிற்சாலைகளைப்போன்றே நடக்க வேண்டியவைகளாய் இருக்கின்றன. இப்படிப்பட்ட சங்கங்கள் பெரும்பாலும் தனிப்பட்ட சங்கங்

களாகவே நடைபெறுகின்றன. இவை வேறு காரியங்களுக்கென ஏற்பட்டுள்ள சங்கங்களின் கிளைச் சங்கங்களாய் இருப்பது அரிது.

இந்தச் சங்கங்களில் சில, வருஷ முழுவதும் வேலை செய்யக் கூடும். வேறு சில, அறுவடைக் காலத்திலேதான் வேலை செய்ய முடியும். உதாரணமாகப் பாற்பண்ணை, முட்டைச் சங்கம் முதலியவைகளுக்கு வேண்டிய மூலப் பொருள்கள் வருஷ முழுவதும் கிடைக்கும்; தானியச் சங்கம், பழச் சங்கம் முதலியவை அந்த விளை பொருள்களின் மாருல் காலத்திலேதான் நடைபெறக் கூடும். இச்சங்கங்களிற் பாற்பண்ணைதான் மிகவும் நன்ருக நடைபெறுவது.

## (1) கூட்டுறவுப் பாற்பண்ணைகள்

ஒரு சிறிய பாற்பண்ணையைவிடப் பெரிய கூட்டுறவுப் பாற்பண்ணைக்கு எத்தனையோ சௌகரியங்கள் இருக்கின்றன என்று புரபசர் பே (Prof. Fay) கூறி இருக்கிருர்.

பாற்பண்ணைக்கு அநேக விலையுயர்ந்த இயந்திரங்கள் தேவையாயிருக்கின்றன. அவ்யந்திரங்களின் உதவியாற்ருன் நல்ல வெண்ணெயைத் தயாரிக்க முடியும்.

ஒவ்வொரு நாளும் காலையில் குடியானவர்கள் தங்கள் தங்களிடமுள்ள பாலை இப்பண்ணைக்குக் கொண்டுவருகிருர்கள். ஒவ்வொருவருடைய பாலும் எப்படி இருக்கிறதெனப் பரிசோதிப்பதற்காக, ஒவ்

வொருவருடைய பாலிலும் கொஞ்சம் மாதிரிப் பால் எடுத்து வைக்கப்படுகிறது. பிறகு இயந்திர சக்தியைக்கொண்டு பால் வேறாகவும், ஏடு வேறாகவும் பிரிக்கப்படுகின்றன. ஏடெடுத்த பாலை விவசாயிகள் வாங்கிக்கொண்டு போய்விடுகிறார்கள். பின்பு வேறு சில இயந்திர உதவியால் ஏட்டிலிருந்து மோர் பிரிக்கப்பட்டு, வெண்ணெய் வேறாக எடுக்கப்படுகிறது. அவ்வெண்ணெய், பின்பு சிப்பங்களாகத் தயாரிக்கப்பட்டு, வெளியூர்கட்கு அனுப்பப்படுகின்றது.

அநேகமாக விவசாயிகளிடமிருந்து இப்பாற்பண்ணைகளே பாலைத் திரட்டுவதற்கான ஏற்பாடுகளைச் செய்துள்ளன. ஒவ்வொரு பாற்பண்ணையிலிருந்தும் நாள்தோறும், வண்டியொன்று குறித்த நேரத்தில் புறப்பட்டு, எந்த எந்த இடங்களில் உறுப்பினர் இருக்கின்றனரோ, அந்த அந்த இடங்களுக்கெல்லாம் செல்லுகிறது. அந்த இடங்களிலுள்ள உறுப்பினர்கள் தங்களிடமுள்ள பாலைத் தயாராகச் சாலையில் வைத்துக்கொண்டு இருப்பார்கள். வண்டியில் போகிறவர்கள் அப்பாலையெல்லாம் வாங்கிக்கொண்டு, பண்ணைக்கு ஒரு குறித்த நேரத்தில் போய்ச் சேருவார்கள். மாலையிலும் இதே மாதிரி நடக்கிறது. அவ்வண்டிகளே ஏடு எடுக்கப்பட்ட பாலைத் திரும்பவும் உறுப்பினர்கட்குக் கொண்டு போய்ச் சேர்க்கின்றன.

ஓர் இடத்திற் பாற்பண்ணை ஏற்படுவதானால், அங்கே பெரிய பண்ணை நடப்பதற்குப் போதுமான

பால் கொடுக்கக் கூடிய விவசாயிகள் இருத்தல் வேண்டும். மாடுகளை வைத்திருக்கும் விவசாயிகளும் பாற்பண்ணைக்கு அதிக தூரத்தில் இருக்கக் கூடாது; ஏனெனில், அதிக தூரத்திலிருந்து பால் வருவதானால், தூக்குக்கூலி அதிகமாய்விடும்.

இப்பாற்பண்ணைகளில் சில வெண்ணெயைத் தாங்களே நேரில் விற்கின்றன. ஆனால், பல பாற்பண்ணைகள் ஒன்று சேர்ந்து கூட்டமைப்பை ஏற்படுத்தி, அதன் மூலம் விற்றால், இலாபம் அதிகமாகக் கிடைக்கும். ஆகையால், பல பண்ணைகள் அவ்வாறே செய்கின்றன.

முக்கியமாக வெண்ணெயை வெளி நாட்டிற்கு அனுப்பி விற்பனை செய்ய வேண்டுமானால், பல கூட்டுறவுப் பாற்பண்ணைகள் ஒன்று சேர்வது மிகவும் நல்லது. பல ஒன்று சேர்வதால், செலவு குறைவாகும்; அதிகமான வெண்ணெயை அனுப்பினால், இரயில் சார்ஜ் முதலியவைகளில் சலுகை பெறலாம்; ஒரே வியாபாரக் குறிபோட்டு வெளியூருக்கு அனுப்பலாம்; போட்டியும் இல்லாமற்போகும்; வெளி நாட்டின் கடை நிலைமையைத் தெரிந்து கொண்டு அதற்கேற்ற வியாபார முறைகளை அநுஷ்டிக்கலாம். இன்னும் இவை போன்ற சௌகரியங்கள் பல.

இயந்திரங்களின் உதவியால் வெண்ணெய் தயாரிக்கப்படுவதால், சாதாரண முறையில் கிடைப்பதைவிட இதில் அதிக வெண்ணெய் கிடைக்கிறது. கிடைக்கும் வெண்ணெயும் மிகவும் சுத்தமானதாய்

இருக்கிறது. வெண்ணெய் எடுத்தபின் பாலும் பல வகையில் உபயோகப்படுகிறது.

இந்தப் பாற்பண்ணைகளுக்கு விவசாயிகள் நல்ல பாலை அனுப்பினாற்றான் வெண்ணெயும் நன்றாய் இருக்கும். கூட்டுறவுப் பாற்பண்ணையில் ஒவ்வொரு விவசாயியும் நல்ல பாலை அனுப்ப முயலுகிறான்; அக்கம்பக்கத்தாரையும் அவ்வாறே செய்யும்படி தூண்டுகிறான். விவசாயிக்கு நல்ல பாலைத் தயாரிக்கும் அநுபவம் இல்லாவிட்டால், இப் பண்ணைகள் அவன் எம்முறைகளைக் கையாள வேண்டுமென்பதைக் கற்பிக்கின்றன. நல்ல பால், மாட்டின் தன்மையாலும், அதற்குத் தரும் உணவாலும் ஏற்படுவது. ஆகையால், அவ்விரண்டிலும் கவனம் செலுத்தினால், நல்ல பாலே கிடைக்கும். ஐரோப்பாவில் அநேக இடங்களில், பாலில் உள்ள வெண்ணெய்ச் சத்துக்கு ஏற்றவாறு, காலன் (gallon) ஒன்றுக்கு இவ்வளவு விலை என்னும் முறையே பால் வாங்குவதற்காக அநுஷ்டிக்கப்படுவதாகும்; இதுவே சிறந்த முறையும் ஆகும்.

இப்பாற்பண்ணைகள் இருப்பதால், விவசாயிகளின் பாலுக்கு நல்ல விலை கிடைக்கிறது; அதுவுமன்றிப் பாற்பண்ணையின் இலாபத்தில் பங்கும் கிடைக்கிறது. ஏடு எடுத்த பாலையும் மோரையும் விவசாயிகளுக்கு இப்பண்ணைகள் கொடுப்பதால், விவசாயிகள் இலாபம் பெறுகிறார்கள்.

பண்ணைகளின் நிருவாகம்

**முதல் :—** இப்பண்ணைகளுடன் சம்பந்தம் வைத்திருக்கும் ஒவ்வொரு விவசாயியும் ஒரு பங்காவது (Share) வாங்குவது அவசியம். இதையன்றி, வேறு கூட்டுறவு ஸ்தாபனங்களும் இப்பண்ணைகளுக்கான முதல் தொகையைக் கொடுக்கக் கூடும். இஃது ஒவ்வொரு தேசத்தில் ஒவ்வொரு மாதிரியாய் இருக்கிறது.

**இலாபம் :—** இந்தப் பண்ணைகளில் பங்குத் தொகைக்கு ஒரு குறித்த வட்டி கொடுக்கப்படுகிறது; மிச்ச இலாபத்தில் ஒரு பகுதி சேம நிதிக்காக (Reserve Fund) ஒதுக்கி வைக்கப்படுகிறது. பாக்கி இலாபப் பணத்தை, விவசாயிகளுக்கு அவரவர்கள் எவ்வளவு பால் கொடுத்து வந்தார்களோ, அந்த வீதப்படி பங்கிட்டுத்தரப்படுகிறது.

சில தேசங்களில் இப்பண்ணைகளில் தொழிலாளிகட்கும் இலாபத்தில் ஒரு பங்கு தரப்படுகிறது.

பாற்பண்ணையின் நிருவாகம் முழுவதும் அங்கத்தினர் பொதுக் கூட்டத்திலே நிர்ணயிக்கப்படுகிறது. அங்கத்தினரின் பொதுக் கூட்டம், சாதாரணமாக ஆறு மாதத்திற்கு ஒரு முறை கூட்டப்படுகிறது. ஓர் அங்கத்தினருக்கு எத்தனை பசுக்கள் இருந்தாலும், ஒரே ஓட்டுதான் (Vote) உண்டு.

பாற்பண்ணையின் நிருவாகக் கமிட்டியார், கணக்கு வழக்குகளைக் கவனிக்கின்றனர்; அன்

ரூட விவகாரங்களைக் கவனிக்கின்றனர். இக்கமிட்டி சாதாரணமாக இரண்டு வருஷத்திற்கு ஒரு முறை நியமிக்கப்படுகிறது. இக்கமிட்டியாரின்கீழ் மானேஜர் ஒருவர் சம்பளத்திற்கு நியமிக்கப்படுகிறார்.

**விவசாயிகள் பால் கொடுத்தல்:**—எந்த விவசாயியும் தன் வீட்டுக்கு உபயோகமான பால் போக மிச்சமான பால் அவ்வளவையும் இந்தக் கூட்டுறவுப் பண்ணைக்கே கொடுப்பது வழக்கமாய் இருக்கிறது. டென்மார்க்கில் எந்த அங்கத்தினரும் தவறாமல் இப் பண்ணைக்கே பாலை விற்கவேண்டும். அப்படி விற்கத் தவறினால், அந்த விவசாயிக்கு அபராதம் விதிக்கப்படுகிறது. விவசாயி சரியான உணவைக்கொண்டு தன் மாடுகளைப் போஷிக்காவிட்டாலும், பாலில் ஏதாவதொன்றைக் கலந்தாலும், அவனுக்குக் கடுமையான அபராதம் விதிக்கப்படும்.

## (2) பாலேட்டுக்கட்டிகள் உண்டுபண்ணும் சங்கங்கள்

இவற்றிற்கும் பாற்பண்ணைகட்கும் அதிக மாறுபாடு இல்லை. இவற்றின் நடை முறை, இலாப விகிதம் முதலிய எல்லா விஷயங்களும் பாற்பண்ணைகளுக்கு உரியவைகளைப் போலவே இருக்கின்றன.

## (3) கூட்டுறவுப் பாற்சங்கங்கள்

மக்களுக்குரிய உணவுப் பொருளில் பால் மிகவும் முக்கியமானது. அந்தப் பால், அநேக பட்டினங்களில் சுத்தமாகவே கிடைப்பதில்லை. அதிலும், முக்கியமாக நம் நாட்டுப் பட்டினங்களில் இப்போ

துள்ள நிலையில் மிகவும் மோசமான பாலே கிடைக்கிறது. அநேகமாகப் பட்டினங்களுக்குச் சுற்றுப் பக்கங்களிலுள்ள ஊர்களிலிருந்து பால் கொண்டு வரப்படுகிறது. பெரும்பான்மையான பால்வியாபாரிகள் சுகாதாரத்துக்கான முறைகளைச் சரியாகக் கவனிப்பதில்லை.

அவர்கள் பாலை நன்றாக மூடிக்கொண்டு வருவதில்லை. பாலைப் பாத்திரத்தில் வைத்து, வைக்கோலால் வாயை மூடுகிறது சாதாரணமான வழக்கம். அந்த வைக்கோலில் எவ்வளவோ அசுத்தம் இருக்கலாம். அந்தப் பாலைப் பட்டினத்துக்குக்கொண்டு வரும்போதும், விற்கும்போதும், பாலில் பல வகைக் கிருமிகள் சேருவதற்கு இடம் இருக்கிறது. இக்குறைபாடுகளையெல்லாம் நீக்கி, நல்ல பாலைச் சாஸ்திரீய முறையில் ஒவ்வொரு தேவையாளுக்கும் கொண்டு வந்து தரும் வேலையைக் கூட்டுறவுப் பாற்சங்கங்கள் செய்துவருகின்றன.

இந்தியாவில் சிறிது காலத்திற்கு முன்பே ஏற்படுத்தப்பட்ட பாற்பண்ணைகள், காசிக் கூட்டுறவுப் பண்ணைச் சங்கம், லக்னோ பாரப்-கானு கூட்டுறவுப் பண்ணை, அலகபாத்துக் கூட்டுறவுப் பண்ணை (U.P.), ஆலிபாருக் கூட்டுறவுப் பண்ணை (வங்காளம்), பெல்காம் கூட்டுறவுப் பண்ணை (பம்பாய்), தானுக் கூட்டுறவுப் பண்ணை (பம்பாய்), தெலிங்கேரிப் பண்ணை (மத்திய மாகாணம்) முதலியவைகளாம்.

ஐக்கிய மாகாணத்திலே நெய் விற்பனை உற்பத்திச் சங்கங்கள் பல காணப்படுகின்றன.

வங்காளப் பால் விற்பனைச் சங்கங்கள் மிகவும் பெயர் பெற்றவை.

சென்னை மாகாணத்திலே பல பால் விற்பனைச் சங்கங்களும் தனிப்பட்டவர்களும் ஒன்று சேர்ந்து **சென்னைக் கூட்டுறவுப் பால் சப்ளை யூனியன் (Madras Co-operative Milk Supply Union)** ஒன்றை ஏற்படுத்திக்கொண்டு, நல்ல வேலை செய்து வருகின்றார்கள்.

1936-37-ஆம் ஆண்டில் சென்னைக் கூட்டுறவுப் பால் சப்ளை யூனியன் நன்றாக வேலை செய்ததெனச் சர்க்கார் அறிக்கை கூறுகிறது. இந்த யூனியனில் சேர்ந்தவர்கள், 13 சங்கங்களும் 13 தனிப்பட்டவர்களுமாவார்கள். இவ்வாண்டில் 581911 படி பாலை இச்சங்கம் வாங்கியுள்ளது. 43 இடங்களில் இப்பால் விற்கப்படுகிறது. சில பாற்சங்கங்களுக்கு நல்ல மாடுகளை வாங்குவதற்குக்கூட இந்த யூனியன் பணங்கொடுத்து உதவுகிறது. இச் சப்ளை யூனியனின் கொடுபட்ட பங்குத் தொகை 16908 ரூபாய்.

பம்பாய் மாகாணத்திலும் இவ்வகைச் சங்கங்கள் சில இருக்கின்றன.

## (4) மிருக இன்ஷியூரன்ஸ் சங்கங்கள்

கூட்டுறவு முறையில் விவசாயிகள் தங்களுடைய மிருகங்களை இன்ஷியூர் செய்துகொள்ளலாம். இச் சங்கங்கள் சாதாரண இன்ஷியூரன்ஸ் கம்பெனிகளைவிட நன்றாக நடைபெறக் கூடும். ஓர் இன்ஷி

யூரன்ஸ் சங்கத்தைத் தொடங்க வேண்டுமானல், இன்ஷியூர் செய்யப்படக்கூடிய 50 மிருகங்களாவது இருக்க வேண்டும். டென்மார்க்கிலே சாதாரணமாக ஒவ்வொரு சங்கத்திலும் 200 மிருகங்களாவது இன்ஷியூர் செய்யப்பட்டிருக்கின்றன.

இன்ஷியூரன்ஸ் கட்டணம், அந்தந்த மிருகத்தின் தன்மையையும், அந்தந்த ஜில்லா அல்லது மாகாணத்தில் சராசரி மிருக மரண விகிதத்தையும் கொண்டு நிர்ணயிக்கப்படுகிறது.

இச்சங்கங்கள் மிகக் குறைவான செலவுதான் செய்ய வேண்டும். மிருகங்களை இன்ஷியூர் செய்யும்போது மிகவும் நன்ருக அவைகளைப் பரிக்ஷித்த பிறகுதான் சேர்த்துக்கொள்ள வேண்டும்.

இவை டென்மார்க்கு, ஜெர்மனி, பிரான்சு முதலிய தேசங்களில் மிக விசேஷமாகக் காணப்படுகின்றன.

இவ்வித இன்ஷியூரன்ஸ் சங்கங்கள் முதலில் பர்மாவிலும் கூர்க்கு (Coorg) பிரதேசத்திலும் ஏற்படுத்தப்பட்டன. அவை அவ்வளவு நன்ருக நடப்பதில்லை.

வங்காளத்தில் சில சங்கங்கள் நடைபெற்று வருகின்றன.

## (5) மிருக விருத்தி சங்கங்கள்

இவை டென்மார்க்கு, ஸ்விட்ஜர்லந்து முதலிய தேசங்களில் விசேஷமாய் இருக்கின்றன.

சமீப காலத்திலேதான் பம்பாய் மாகாணத்தில் இவ்விதச் சங்கங்கள் தொடங்கப்பட்டன. இப்போது அம்மாகாணத்தில் இச்சங்கங்கள் பல காணப்படுகின்றன. பஞ்சாபு மாகாணத்திலே இவ்விதச் சங்கங்கள் நல்ல வேலை செய்கின்றன. வங்காள மாகாணத்தில் ஏற்படுத்தப்பட்ட சங்கங்கள் அவ்வளவு நன்றாக நடைபெறவில்லை.

### (6) பன்றி மாமிசச் சங்கங்கள்

இவை டென்மார்க்குத் தேசத்திலே விசேஷமாய் இருக்கின்றன.

---

## 4. கூட்டுறவுப் பொருள் விற்பனைச் சங்கங்கள்

விவசாயிகள் தங்களுடைய பொருள்களை நல்ல விலைக்கு விற்க வேண்டுமானால், கூட்டுறவு விற்பனைச் சங்கங்களின் மூலம் விற்றலே நல்லது. அநேகமாக, எல்லா நாடுகளிலும் விவசாயிகள் தங்கள் விளை பொருள்களை நல்ல விலைக்கு விற்க முடியாமல் கஷ்டப்படுகிறார்கள். அவர்கட்குச் சேர வேண்டிய இலாபத்தை இடையில் உள்ள அநேக வியாபாரிகள் கொள்ளை கொண்டு போய்விடுகிறார்கள். ஆகையாற்றான், விவசாயிகள் தங்கள் சாமான்களை விற்கக் கூட்டுறவுச் சங்கங்களை ஏற்படுத்திக்கொண்டிருக்கின்றார்கள்.

**(அ) முட்டை விற்கும் சங்கங்கள்:**—இவை முக்கியமாக டென்மார்க்குத் தேசத்தில் காணப்படுகின்

றன. இந்தத் தேசத்திலே ஒவ்வொரு விவசாயியின் வீட்டிலும் கோழிகள் வளர்க்கப்படுகின்றன. அவைகளின் முட்டைகள் கூட்டுறவுச் சங்கங்கட்கு விற்கப்படுகின்றன. அச்சங்கங்கள் அம்முட்டைகளைக் கூட்டுறவு முட்டை ஏற்றுமதிச் சங்கத்திற்கு விற்கின்றன. அங்கே முட்டைகள் தராதரப்படி விற்கப்பட்டு, வெளி நாட்டிற்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றன.

**(ஆ) கூட்டுறவுப் பழ விற்பனைச் சங்கங்கள் :**—இவை பெரும்பாலும் பழங்களை டின்களில் அடக்கம் செய்து வெளியூர்களுக்கு அனுப்புவதற்காக ஏற்பட்டுள்ளவை.

**(இ) தானிய விற்பனைச் சங்கங்கள் :**—விவசாயிகள் தானியங்களைத் தாங்களே விற்பனை செய்வதை விடக் கூட்டுறவுச் சங்கங்களின் மூலம் விற்பது இலாபகரமானது. தானியங்களை வாங்கி விற்பதில் போட்டி அதிகம். தானியங்களை வாங்கி விற்கும் போது நஷ்டம் ஏற்பட்டாலும், ஏற்படலாம். ஆகையால், இச்சங்கங்களை நடத்துபவர்கள் திறமைசாலிகளாய் இருத்தல் வேண்டும்.

இச்சங்கங்களின் அங்கத்தினர்களான விவசாயிகள், தாங்கள் விற்கவேண்டிய அத்தனை தானியத்தையும் இச்சங்கங்களின் மூலந்தான் விற்க வேண்டும். ஒவ்வொரு சமயம் விற்று, வேறு சமயங்களில் சங்கங்களுக்கு விற்காவிட்டால், விற்பனைச் சங்கங்கள் தங்களுக்கு எவ்வளவு தானியம் வரும்

என்பதை முன்னரே தெரிந்து, அதற்கேற்ற ஏற்பாடுகளைச் செய்ய முடியாது.

இவ்விற்பனைச் சங்கங்கள் தானியத்தை விலை கொடுத்து வாங்கி, பிறகு நல்ல விலைக்கு விற்கலாம்; அல்லது அங்கத்தினர்களான விவசாயிகளுக்காகக் கமிஷனுக்கும் விற்கலாம். இவ்விரண்டு முறைகளும் ஆங்காங்குக் காணப்படுகின்றன.

சில இடங்களில் தானிய விற்பனைக்கென்று தனிச் சங்கங்கள் இருக்கின்றன. சில இடங்களிலோ, விவசாயிகள் தங்களுடைய தானியங்களைக் கூட்டுறவுப் பாங்குகளின் மூலம் விற்கின்றார்கள். அப்படி விற்பதிலும் சில சௌகரியங்கள் உண்டு.

**(4) நமது நாட்டில் உள்ள கூட்டுறவு விளைபொருள் விற்பனைச் சங்கங்கள்:**—விவசாயிகள் கஷ்டப்பட்டு உண்டாக்கும் விளைபொருள்களை நல்ல விலைக்கு விற்றாலல்லவா இலாபம் கிடைக்கும்? நல்ல விலைக்குத் தங்கள் விளைபொருள்களை விற்க முடியாவிட்டால், அவர்கள் தங்களுடைய கஷ்டத்தின் முழுப் பயனையும் அடைய முடியாதல்லவா?

இப்போதுள்ள நிலையில் விவசாயிகளின் சிரமத்தின் பயனை வியாபாரிகள் அடித்துக்கொண்டு போய்விடுகிறார்கள். கிராமங்களில் உள்ள விவசாயிகள், உள்ளூர் வியாபாரியிடம் விற்பனை செய்கிறார்கள். அந்தச் சரக்குகள் பல கைகளில் மாறிக் கடைசியாகப் பட்டினங்களிலுள்ள மொத்த வியாபாரிகளின் கையிற்போய்ச் சேருகின்றன. மொத்த

வியாபாரிக்கும் விவசாயிக்கும் இடையில் பல பேர் இருப்பதால், ஆளுக்குக் கொஞ்சமாக அவர்கள் இலாபம் அடைகிறார்கள். ஆதலால், விவசாயிக்கு முழுப்பயனும் இல்லாமற்போய்விடுகிறது.

இது மாத்திரமல்ல. நிறை, அளவு முதலியவைகளில் எவ்வளவோ ஏமாற்றம் காணப்படுகிறது. ஒவ்வொரு விவசாயியும் தன்னிடத்துள்ள கொஞ்சம் விளைபொருளை விற்பதால், மொத்த வியாபாரத்தின் பலன் அவனுக்குக் கிட்டாதாகிறது.

இவ்வாறான பல வகைக் காரணங்களால் விளைபொருள்களைக் கூட்டுறவு முறையில் விற்பனை செய்வதே நலமெனக் காணப்படுகிறது. இதற்காகக் கூட்டுறவுச் சங்கங்கள் ஆங்காங்குத் தோன்றி உள்ளன.

நமது நாட்டிலும் சில கூட்டுறவு விற்பனைச் சங்கங்கள் ஏற்பட்டு, நன்றாக நடைபெறுகின்றன. கூர்ஜரத்திலே பருத்தி வியாபாரத்தை இச்சங்கங்கள் நன்றாக நடத்துகின்றன. ஹூப்ளி, கடாக்கு (Gadag) முதலிய இடங்களில் காபாஸ் (Kapas)வியாபாரம் இச்சங்கங்களால் நடத்தப்படுகிறது. தென்னாற்காடு ஜில்லாவில் கடலூர் முதலிய இடங்களில் கடலை வியாபாரத்திற்காக இச்சங்கங்கள் நிறுவப்பட்டுள்ளன. திருச்சி, மதுரை முதலிய இடங்களில் நெல் வியாபாரத்தை இச்சங்கங்கள் நடத்துகின்றன. திருப்பூரில் பருத்தி வியாபாரம் இச்சங்கத்தால் நன்றாக நடத்தப்படுகிறது. கோயில்பட்டி, திண்டுக்கல், தூத்துக்குடி முதலிய இடங்களிலும் இக்கூட்டுறவு விற்

பனைச் சங்கங்கள் நன்றாக வேலை செய்து வருகின்றன. அங்களப்பள்ளியில் மாம்பழ (Gur) வியாபாரம் இச்சங்கத்தின் கையில் இருக்கிறது.

சாமான்களை விற்பதற்கும் நல்ல சாமர்த்தியம் வேண்டும். அநேக விவசாயிகட்கு அந்தத் திறமை இருப்பது இல்லை. சில விளைபொருள்களின் விலை நாள்தோறும், ஒவ்வொரு மணி நேரமும் மாறிக் கொண்டே இருக்கும். இப்போதுள்ள நிலையில் விவசாயம் அந்த விலை மாறுதல்களையறிந்து, அதனாற் பயன் பெற முடியவில்லை. சில சமயம் விவசாயி விற்க வேண்டிய பொருள்கள் சீக்கிரம் கெட்டுப் போகக் கூடியவைகளாய் இருக்கும். அப்போது விவசாயி அப்பொருள்களை வியாபாரி கேட்ட விலைக்கே கொடுத்துவிட வேண்டி இருக்கிறது. விவசாயிக்குப் போதிய பண வல்லமை இல்லையாதலால், விவசாயி காத்துக்கொண்டிருந்து தன் பண்டங்களை நல்ல சமயத்தில் விற்பதற்கில்லை.

கூட்டுறவு விற்பனை முறையில் விவசாயிகளின் பண்டங்களுக்கு நல்ல விலை கிடைப்பதேயன்றி, வேறு பயன்களும் இருக்கின்றன. வெளி நாட்டுக் கடைகளில் நம் தேச விளை பொருள்கள் சுத்தமானவை என்ற உறுதியான எண்ணம் இருக்குமானால், நல்ல விலைக்கு அவைகளை விற்க முடியும். அந்த முயற்சியில் இச்சங்கங்கள் ஈடுபட்டிருப்பது பாராட்டத் தக்கது.

கூட்டுறவு விற்பனைச் சங்கம், விவசாயிக்கு வேண்டிய பணத்தை முன்னாலேயே கொடுத்து உத

வச் சக்தியற்றிருக்கிறது. சில ஆரம்பச் சங்கங்களே விவசாயியின் சாகுபடிக்குப் பணம் கொடுத்து உதவுகின்றன. ஒரு சில விற்பனைச் சங்கங்களும் விவசாயிக்குப் பணம் கொடுக்க முன் வருகின்றன. உதாரணமாகத் **திருப்பூர்ப் பருத்தி விற்பனைச் சங்கம்,** தனக்கு உதவியாய் இருக்கும்படி **பருத்தி விளைவிப்போர் சங்கம்** ஒன்றை ஏற்படுத்தி, அதன் மூலம் விவசாயிக்குக் கடன் கொடுக்கிறது. விற்பனைச் சங்கங்களும் விவசாயிக்கு முன் பணம் கொடுத்து உதவுதல் அவசியமெனச் சில கூட்டுறவு நிபுணர்கள் எண்ணுகின்றார்கள்.

இப்போது இவ்விற்பனைச் சங்கங்களின் நடைமுதல் பல வகையிற்கிடைக்கிறது, இச்சங்கங்களின் பங்குத் தொகை அதிகமாய் இல்லை. ஆகையால், பங்குத் தொகையின் மூலம் கிடைக்கும் பணமும் கொஞ்சந்தான். ஆனால், ஒவ்வொரு சங்கத்திற்கும் கொடுபட்ட பங்குத் தொகையும் சேம நிதியும் எவ்வளவு இருக்கிறதோ, அதைப்போல் ஐந்து முதல் எட்டு மடங்கு தொகையை இச்சங்கங்கள் கடனைப் பெறக் கூடும். மேலும், இச்சங்கங்களிடத்தில் அடைமானமாக வைத்திருக்கும் சரக்குகளின் பேரிலும் இச்சங்கங்கள் பணம் வாங்கக்கூடும்.

**சில சங்கங்களின் நடை முறை:**—கிராமங்களில் ஆரம்பச் சங்கங்கள் விவசாயிகளுக்குக் கடன் கொடுக்கின்றன. சாகுபடியின் பலன் கிடைத்ததும், கடன் வாங்கிய விவசாயிகள், விற்பனைச் சங்

கத்தின் மூலமாக விளைபொருளை விற்றுக் கடனைக் கொடுத்துத் தீர்க்கிறார்கள்.

விளைபொருள், கூட்டுறவு விற்பனைச் சங்கத்தின் கிடங்குக்கு வந்ததும், அந்தந்த விவசாயியின் எதிரிலேயே நிறுக்கப்படுகிறது. பிறகு அந்த விற்பனைச் சங்கம் வியாபாரிகட்கு மாதிரிச் சரக்குகளைக் காட்டி நல்ல விலைக்கு அப்பொருளை விற்க முயலுகிறது.

விளைபொருள் விற்பனை ஆனதும், அச்சங்கங்கள் அந்த விற்றுமுதலான பணத்தை விவசாயிக்குக் கொடுக்கின்றன. தங்களுடைய முயற்சிக்காக அச்சங்கங்கள் மிகச்சிறு கமிஷன் பெறுகின்றன. அச்சங்கங்கள் கிடங்கு வாடகை, சில்லறைச் செலவுகள் முதலியவைகளுக்காக எதுவும் வாங்குவதில்லை.

இவ்விஷயங்களை விளக்குவதற்காகக் கூடலூரிலுள்ள **தென் ஆற்காடு கூட்டுறவு நிலக்கடலை விற்பனைச் சங்கத்தின்** நடை முறையைக் கவனிப்போம்: இதன் கிடங்குகள் **கூடலூர், விருத்தாசலம், திருக்கோயிலூர்** முதலிய இடங்களில் இருக்கின்றன. எவராவது கடலைச் சரக்கை அடைமானமாக வைத்தால், அதன் விலைமதிப்பில் 100க்கு 60 ரூபாய் வரையில் கடனைக் கொடுக்கலாமென இச்சங்கத்தின் திட்டத்தில் காணப்படுகிறது.

பருத்தி வியாபாரத்திலும் கூட்டுறவுச் சங்கங்கள் நல்ல வேலை செய்கின்றன. இவைகளும் கடலை வியாபாரச் சங்கத்தைப்போலவே, அடகாக

வைக்கும் சரக்கிற்குக் கடனும், விற்பனை செய்யும் சரக்கிற்குக் கமிஷனும் பெறுகின்றன.

சரக்கைச் சங்கத்திற்குக் கொண்டு வந்ததும், சங்கம் அதை நிறுத்து, விவசாயிக்கு ஓர் இரசீது கொடுக்கிறது. பின்பு அந்தச் சரக்கை நல்ல விலைக்கு விற்பதற்கு அச்சங்கம் முயலுகிறது.

சரக்கை ஏல விற்பனை செய்வது நல்லதா, அல்லது வியாபாரிகளிடம் பேரம் பேசி விற்பது நல்லதா என்பதைப்பற்றி ஒருதரப்பட்ட முடிவான பதில் சொல்வது அரிது. ஏனெனில், அஃது இடத்தையும் சந்தர்ப்பத்தையும் பொறுத்தது.

பருத்தி விற்பனையில் மிக முக்கியமான சங்கங்கள் கடாக்கு (Gadag), ஹுப்ளி, திருப்பூர், இராசிபுரம் (சேலம் ஜில்லா) முதலிய இடங்களில் உள்ளவைகளாகும்.

பஞ்சு, கடலைக்கொட்டை ஆகிய இரண்டு விளை பொருள்களும் வெளிநாட்டுப் புரிசம் உடையவை. நெல்லோ, உள்நாட்டு வியாபாரச் சரக்கு. உள்நாட்டுப் புரிசமே நெல்லுக்கு உண்டு. நெல்லில் பல வகை இருக்கின்றன. ஒரே ஜில்லாவில் பல வகை நெல்லும் பயிரிடப்படுகின்றன. எனவே, பெரிய வியாபாரம் செய்வதற்கு ஒரே வகையான நெல் நிரம்பக் கிடைக்காதது கஷ்டமாய் இருக்கிறது. நெல் கனமான வஸ்துவாதலால், ஓர் இடத்திலிருந்து மற்றோரிடத்துக்குக் கொண்டு போவதிலும் கஷ்டம் இருக்கிறது.

நெல் விற்பனைச் சங்கம் எப்படி வேலை செய்கிறதென்பதைப் பார்ப்போம்: நெல்லூர் நெல் விற்பனைச் சங்கம், தன் கிடங்கில் நெல் கட்டி வைப்பதற்கு இடந்தருகிறது. அந்தக் கட்டுச் சரக்கின் பேரில் 100க்கு 60 வீதத்திற்கு மேற்படாத தொகையை அச்சாரமாகவும் கொடுக்கிறது. வியாபாரிகள், சங்கத்திற்கே வந்து சரக்கைப் பார்த்து, வாங்கிக்கொள்ளுகிறார்கள். மதுரை நெல் விற்பனைச் சங்கம், திண்டுக்கல் சங்கம் முதலியவைகளும் கவனிக்கற்பாலன.

அங்கனபள்ளிக் கூட்டுறவு விற்பனைச் சங்கம், வெல்ல (Jaggery) வியாபாரம் செய்கிறது. இந்த ஊரில் ஒரு வெங்காய விற்பனைச் சங்கமும் இருக்கிறது.

இச்சங்கங்கள் இன்னும் பல ஏற்பட்டு, எல்லா விவசாயிகளும் இச்சங்கங்களின் மூலம் விளைபொருள்களை விற்றால், விவசாயிகளின் நிலை மேன்மையுறலாம்.

1935 - 36 - ஆம் ஆண்டில் சென்னையிலே, **சென்னை மாகாணக் கூட்டுறவு விற்பனைச் சங்கம்** ஒன்று ஏற்படுத்தப்பட்டது. இதற்குக் கவர்ன்மெண்டாரும், சென்னை மாகாணக் கூட்டுறவுப் பாங்கினரும் பண உதவி செய்கின்றனர். இதன் உறுப்பினரின் தொகை 68. இதில் 42 சங்கங்கள் உறுப்பாகச் சேர்ந்திருக்கின்றன. இதுவரையில் இவ்விற்பனைச் சங்கம் உருளைக்கிழங்கு, ஆரஞ்சு, வாழைப்பழம், மாம்பழம், வெங்காயம், வெள்ளைப்பூண்டு, முட்டை,

தேன், நெய், கைக்குற்றல் அரிசி, புளி, சர்க்கரை ஆகிய இச்சாமான்களில் வியாபாரம் செய்திருக்கிறது. இது பல பண்டங்களின் வாராந்தர விலையைக்காட்டும் துண்டுப் பிரசுரமொன்றை வெளியிடுகிறது.

---

## 5. கூட்டுறவுப் பயிரிடுஞ் சங்கங்கள்

இட்டாலித் தேசத்திலேதான் பயிரிடுவதில் கூட்டுறவு முறை கையாளப்பட்டிருக்கிறது. விவசாயத்தில் கூட்டுறவுக் கொள்கைகள் புகுத்தப்பட்டதன் காரணம், அநநாட்டின் விவசாய நிலையே ஆகும்.

நிலச்சுவாதந்தரர் பலர், தம்முடைய பண்ணைகளிலே வசிப்பதில்லை. அவர்களுடைய நிலத்தை யாராவது ஒருவர் மொத்தக் குத்தகைக்கு எடுத்துக் கொண்டு, கூலியாட்களை வைத்துச் சாகுபடி செய்து, இலாபத்தை அடைவது வழக்கம.

இப்படித் தனிப்பட்டவர் தங்களுடைய உழைப்பின் பயனை அடைவதைத் தடுப்பதற்காக அந்த விவசாய வேலையாட்கள் முயன்றார்கள். அதன் பயனாக இரு வகைப் பயிரிடும் சங்கங்கள் (Co-operative Farming Societies) உண்டாயின. ஒன்று, தனிப்பட்டவர் சங்கம்; மற்றொன்று, கூட்டுச் சங்கம்.

தனிப்பட்டவர் பயிரிடும் சங்கம் (Indivudualistic Farming Society) ஒரு பெரிய பண்ணையை

மொத்தக் குத்தகைக்கு எடுத்துக்கொள்கிறது. அந்தப் பண்ணையில் நிலத்தைப் பல பங்காகப் பிரித்து, உறுப்பினர் ஒவ்வொருவருக்கும் அவரவர் சாகுபடி செய்யும் சக்திக்கேற்பக் கொடுக்கிறது. ஒவ்வோர் உறுப்பினரும் ஒன்பது முதல் பன்னிரண்டு ஆண்டுகட்கு நிலக் குத்தகை பெறுகின்றனர். ஒவ்வொருவரும் வருஷந்தோறும் சங்கத்துக்குச் சேர வேண்டிய குத்தகைத் தொகையைச் செலுத்தி விட்டு, வரும் இலாபத்தை எடுத்துக்கொள்ளுகின்றனர். ஒவ்வோர் உறுப்பினரும் விவசாயத்துக்கு வேண்டிய கருவிகளைத் தாமே வாங்கிக்கொள்ளுகின்றனர். மிக விலை உயர்ந்த சில இயந்திரங்களை மாத்திரம் சங்கங்கள் வாங்கி வைத்துக்கொண்டு, உறுப்பினருக்கு வாடகைக்குக் கொடுக்கின்றன. வேறு சில பயிரிடுஞ் சங்கங்கள், விவசாயிகட்கு வேண்டிய எரு முதலியவைகளை வாங்குவதற்கும், விவசாய விளை பொருள்களை விற்பனை செய்வதற்கும் உதவி செய்கின்றன.

உறுப்பினருக்கு அவ்வப்போது விவசாய சம்பந்தமான முக்கிய ஆலோசனைகளைச் சொல்வதற்கு ஓர் அறிஞரை ஒவ்வொரு பயிரிடும் சங்கமும் ஏற்படுத்தி வைக்கிறது. எல்லா உறுப்பினரும் தம் பகுதி நிலத்திலுள்ள பயிரை இன்ஷியூர் செய்ய வேண்டுமென்ற கட்டுப்பாடு ஒன்று இருக்கிறது.

கூட்டுப் பயிரிடும் சங்கம், தான் குத்தகைக்கு வாங்கும் பண்ணையை ஒவ்வொருவருக்கும் நீண்ட காலத்துக்குப் பிரித்துக் கொடுப்பதில்லை. ஒவ்

வொரு வருஷத்திலும் ஒவ்வொரு குடும்பத்திற்கும் சாகுபடிக்காக ஓர் அளவு நிலம் பிரித்துத் தரப்படு கிறது. அந்த அந்த நிலத்தில் அவ்வக்குடும்பத்தினர் சாகுபடி செய்கின்றனர். அவர்களுடைய வேலைக் குக் கூலி சங்கத்தால் கொடுக்கப்படுகிறது. விதை, விவசாயக் கருவிகள் முதலியவை சங்கத்தாலேயே தரப்படுகின்றன. நில இலாபமெல்லாம் அவரவர் கூலிக்கேற்பப் பங்கிட்டுக் கொடுக்கப்படுகிறது. ஒவ் வோர் உறுப்பினரும் ரொக்கமாகவோ, வேலை செய்தோ, தம்முடைய பங்குத் தொகையைச் செலுத்துகின்றனர்.

இவ்விருவகைச் சங்கத்தினரும் பங்குத்தொகை யில் கிடைத்த பணம் போக அதற்குமேல் வேண் டிய தொகையைக் கூட்டுறவுப் பாங்குகளிடமிருந்து கடன் வாங்குகின்றனர். இவை அந்நாட்டில் நன் றாகவே நடந்துவருகின்றன. மேலும், இவ்வகைச் சங்கங்கள் விவசாயத்தையும் விருத்தி செய்துள் ளன. இவை தங்களுக்குக் கிடைக்கும் இலாபத் தில் ஒரு பகுதியைப் பொதுக் காரியங்கட்கு உப யோகிக்கின்றன.

இட்டாலித் தேசத்துப் பயிரிடும் சங்கங்களைப் பின்பற்றி **ருமானியாவிலும்**, **பிரான்சிலும்** பயிரிடும் சங்கங்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. பிரான்சு தேசத்தில் முக்கியமாகத் திராக்ஷைச் சாகுபடியில் இவ்வகைச் சங்கங்கள் காணப்படுகின்றன.

இந்தியாவில் வங்காளத்திலேதான் இவ்வகைச் சங்கங்களை ஏற்படுத்த முயற்சி செய்யப்பட்டது. பம்

பாய் மாகாணத்தில் **ஷோலாப்பூர்** ஜில்லாவில் உள்ள **அர்ஜன்சோண்டா** (**Arjunsonda in the Sholapur District**) என்னும் இடத்திலும், **அகமதுநகர்** ஜில்லாவில் **பம்போரா** (Bhambora in the Ahmednagar District) என்னும் இடத்திலும் ஏற்படுத்தப்பட்ட பயிரிடும் சங்கங்கள் விருத்தி அடையவில்லை.

ஆனால், நம் நாட்டில் இவ்வகைச் சங்கங்கள் பல நிறுவப்பட்டு வேலை செய்தால், விவசாயத் தொழிலாளிகள் பெரும்பயனை அடையலாம். இச் சங்கங்கள் பரவுவதற்கு இடையூறாக இருப்பவை, அறியாமையும் முயற்சி இன்மையுமேயாகும்.

---

## 6. நீர்ப்பாசனச் சங்கங்கள்

நமது பழங்கால அரசர்கள் நீர்ப்பாசனத்துக்கான வசதிகள் பல செய்திருந்தார்கள்; பல பெரிய ஏரிகளைச் செம்மையாக வைத்திருந்தார்கள்; ஏரிக் கரைகளையும் ஆற்றங்கரைகளையும் வலுவாகக் கட்டுவித்தார்கள்; குளங்களைத் தோண்டுவித்தார்கள். நாளடைவில் அரசாங்க மாறுதல்களாலும், கவனக் குறைவாலும் குளங்கள் தூர்ந்துவிட்டன; கரைகள் கரைந்துபோய்விட்டன; ஏரிகள் மேடாகிவிட்டன.

மேலும், பல இடங்களில் வாய்க்கால்கள் மேடாகிவிட்டன. சில இடங்களில் வாய்க்கால்களை வெட்ட வேண்டி இருக்கிறது. இதைச் செய்வதற்கும், குளங்கள், ஏரிகள் முதலியவைகளைச் செம்மைப்படுத்துவதற்கும் இப்போது கூட்டுறவு நீர்ப்

பாசனச் சங்கங்கள் ஏற்படுத்தப்படுகின்றன. இவை வங்காளத்திலேதான் மிகுதியாய் நிறுவப்பட்டிருக்கின்றன.

**நோக்கங்கள்** :—நிலங்கட்கு நீர்ப்பாசன வசதியை உண்டாக்கல், நீர் வசதிக்கான எல்லாக் காரியங்களையும் செய்தல், நீர்ப்பாசனத்துக்கான இயந்திரங்கள், கருவிகள் முதலியவைகளை வாங்கல் ஆகிய இவைகள் அச்சங்கங்களின் நோக்கங்களாம்.

**அமைப்பும் நடை முறையும்** :—இந்த சங்கங்களின் அங்கத்தினர், தாம் எவ்வளவு நன்மையை இச்சங்கத்திலிருந்து அடைய விரும்புகின்றனரோ, அவ்வளவுக்கேற்பப் பங்குத் தொகையைக் கொடுத்தல் வேண்டும். பங்குத் தொகையால் வரும் பணம் போதாவிட்டால், இச்சங்கங்கள் கடன் வாங்கியும் வேலை செய்கின்றன. நீர்ப்பாசன ஏற்பாடுகளெல்லாம் முடிவடைந்ததும், ஏதேனும் ஒரு திட்டப்படி ஒவ்வோர் உறுப்பினரிடமிருந்தும் பணம் வசூலிக்கப்படுகிறது. புதியவைகளாக ஏற்படுத்திய வசதிகளை நல்ல நிலைமையில் வைத்திருப்பதற்கும் இச்சங்கங்கள் முயற்சி செய்கின்றன.

---

## 7. கூட்டுறவு விவசாய அபிவிருத்திச் சங்கங்கள்

இச்சங்கங்கள் சென்னை மாகாணத்தில் மிகவும் விரும்பி வளர்க்கப்படுகின்றன. இவைகளின் முக்கிய நோக்கம், நல்ல முறையில் விவசாயத்தை விருத்தி செய்வதற்குத் தேவையான அறிவைச்

சொற்பொழிவுகள், துண்டுப் பிரசுரங்கள் முதலியவைகளின் மூலம் பரப்புவதாகும். சென்னை மாகாணத்திலே இவ்விதச் சங்கங்கள் 87 இருக்கின்றன.

---

## 8. கூட்டுறவு எருச் சங்கங்கள்

பம்பாய் மாகாணத்தில் கரும்பு விசேஷமாக பயிரிடப்பட்ட இடங்களில் இச்சங்கங்கள் அதிகமாய் இருந்தன. ஆனால், இப்போது இவை அவ்வளவு நன்றாக நடக்கவில்லை.

சென்னை மாகாணத்திலே '**தஞ்சை ஜில்லாக் கூட்டுறவுச் சங்கம்**' நல்ல வேலை செய்து வருகிறது.

---

## 9, விதை விற்பனைச் சங்கங்கள்

நல்ல விதைகளை வாங்கி, உறுப்பினருக்கு விற்பதற்காக வங்காளம், பஞ்சாபு, சென்னை, ஐக்கிய மாகாணங்கள், பீஹார் முதலிய இடங்களில் சில சங்கங்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன.

---

## 10 நிலங்களைத் திருத்திச் சாகுபடி செய்யும் சங்கம்

இவ்வகையில் தஞ்சை ஜில்லாவிலே 4 சங்கங்களும், திருச்சியிலே 7 சங்கங்களும், ஆக 11 சங்கங்கள் நமது மாகாணத்தில் இருக்கின்றன.

## 11. விவசாயஞ் செய்து காட்டுஞ் சங்கங்களும் விருத்திச் சங்கங்களும்

சென்னை மாகாணத்தில் இவ்விதச் சங்கங்கள் 24 இருக்கின்றன. அவைகளுள் முக்கியமானவை லால்குடிச் சிவஞானம் விவசாயஞ்செய்து காட்டும் (Demonstration) சங்கமும், விசாகப்பட்டினம் ஜில்லாவிலுள்ள திமிலி விவசாயஞ் செய்து காட்டும் சங்கமும் ஆகும்.

லால்குடிச் சங்கம் (திருச்சி ஜில்லா) 9½ ஏக்கர் நஞ்சை நிலத்தில் நல்ல விவசாய முறைகளின் மேன்மையை அநுஷ்டானத்திற் செய்து காட்டுகிறது. எரு, விதை இவைகளையும் இச்சங்கம் விற்பனை செய்கிறது. திமிலி (Dimili) சங்கம் 2 ஏக்கர் நிலத்தில் சாகுபடி செய்து காட்டுகிறது.

---

## 12. குடி மராமத்துச் சங்கங்களும் நீர்ப்பாசனச் சங்கங்களும்

நமது மாகாணத்திலே இவ்வகைச் சங்கங்கள் 12 இருக்கின்றன. தென் ஆற்காடு, தஞ்சை, திருநெல்வேலி ஜில்லாக்களில் ஜில்லா ஒவ்வொன்றிலும் மூன்று வீதம், மொத்தம் 9 சங்கங்கள் இருக்கின்றன. குண்டூர், கிருஷ்ணை, மலபார் ஜில்லாக்களில் மற்றைய மூன்று சங்கங்களும் இருக்கின்றன.

இவைகளில் 930 உறுப்பினர் இருக்கின்றனர். கொடுபட்ட பங்குத் தொகை 4090 ரூபாய். இவற்

றின் நடை முதல் (Working Capital) தொகை 12578 ரூபாய்.

தென் ஆற்காட்டிலே இச்சங்கங்கள் வெட்டிய கால்வாய்கள், 1522 ஏக்கர் நிலப்பாசனத்துக்கு உதவியாய் இருக்கின்றன. தென்னாற்காட்டுச் சங்கங்கள் மூன்றும், தஞ்சைச் சங்கங்களில் இரண்டும் வாய்க்கால் வெட்டல், கரை கட்டல் முதலிய காரியங்களையும் செய்கின்றன.

---

## 13. நிலங்களை ஒன்று சேர்க்கும் சங்கங்கள்

நமது நாட்டிலே விவசாயிகளிற்பலர் மிகவுங் கொஞ்ச நிலம் உடையவர். அவ்விவசாயிகள் படும் பாட்டிற்குப் போதுமான பயன் அந்த நிலத்திலிருந்து கிடைப்பதில்லை. ஹிந்து சமூக, மகம்மதிய சமூகப் பாக வினைச் சட்டங்களின்படி ஒவ்வொரு தலைமுறையிலும் நிலங்கள் துண்டு துணுக்காகப் பிரிக்கப்படுகின்றன. அதுமாத்திரமன்றி, ஒவ்வொரு நிலச்சுவானுடைய நிலமும் ஒரேயிடத்தில் இருப்பதில்லை; பல இடங்களில் சிதறுண்டு கிடக்கிறது.

ஆதலால், விவசாயி தனக்குள்ள மிகச் சிறிய நிலத்தைக்கூடச் செவ்வையாகப் பயிரிட முடிவதில்லை. அதனால், தனிப்பட்ட விவசாயியின் வருமானமும் குறைந்துவிடுகிறது; சமூகத்தினுடைய செல்வமும் பெருக முடியவில்லை. நமது நாட்டிற்கு விவசாயமே இரத்த நாடியாய் இருப்பதால், அதனை

16

மிகவும் விருத்தி செய்ய வேண்டும். அவ்வாறு விருத்தி செய்வதற்குப் பெரிய இடையூறாய் இருப்பது ஒவ்வொருவருடைய நிலமும் பல இடங்களில் இருப்பதுதான். எனவே, அந்த அசௌகரியத்தை நிவர்த்தி செய்ய வேண்டும்.

ஒவ்வொரு விவசாயியினுடைய நிலமுழுவதும் ஒரே இடத்தில் அடுத்தடுத்து இருக்கும்படி செய்ய முடியுமானால், அதைவிட விவசாயத்துக்குச் செய்யக்கூடிய நன்மை வேறில்லை. அந்த வேலையில் ஈடுபட்டிருப்பவைகளே **நிலத்தை ஒன்றுசேர்க்கும் சங்கங்கள்.**

இச்சங்கம் ஒன்றை ஓர் ஊரில் நிறுவ வேண்டுமானால், அவ்வூரிலுள்ள விவசாயிகள் ஒன்று கூடுவார்கள். அவர்களில் பெரும்பான்மையோர் ஒத்துக்கொண்டால், நிலங்கள் புது முறையில் பங்கிடப்படும். ஒவ்வொரு விவசாயியும் தன் நிலமுழுவதையும் ஒரே இடத்தில் பெறுவான். முதலில் இவ்வேற்பாடு நான்கு வருஷத்திற்கு என நிர்ணயிக்கப்படும். அந்த நான்கு வருஷ காலத்தில் இவ்வித மாறுபாடு தங்கட்குச் சௌகரியமானதென எல்லாரும் எண்ணினுல், அந்த ஏற்பாடு சாசுவதமாக வைக்கப்படும். அல்லாவிட்டால், அந்த நான்காவதாண்டின் கடைசியில் அவரவர் தத்தம் பழைய நிலங்களையே பெறுவர். சாதாரணமாக ஒரு தரம் நிலங்கள் புது முறையில் பங்கிடப்பட்டால், அது சௌகரியமல்லவென்று பழைய முறையை விரும்பும் விவசாயிகள் இந்தியாவில் எங்கும் இதுவரையில் இல்லை.

இந்தச் சங்கத்தின் உறுப்பினர்கள் ஒரு சம்மதப் பத்திரத்தில் கீழ்க்காணும் நிபந்தனைகட்கு உடன்படுவதாகக் கூறிக் கையெழுத்திட வேண்டும்: ஒவ்வொரு விவசாயியும்,

(1) தன் நிலங்களையெல்லாம் ஒருமிக்கப் பெறுவதற்காகச் செய்யப்படும் தீர்மானத்திற்குத் தான் சம்மதிப்பதாகவும்,

(2) அங்கத்தினர் கூட்டத்தில் மூன்றில் இரண்டு பங்கு உறுப்பினர் தீர்மானிப்பதைத் தான் ஒப்புக்கொள்வதாகவும்,

(3) எந்த ஏற்பாட்டின்படியேனும் தன் நிலத்தை வேறு முறையில் அமைப்பதைத் தான் ஒத்துக்கொள்வதாகவும்,

(4) சங்கத்தின் விவகாரங்களில் ஏதாவது தகராறு உண்டானல் அதை 'நடுவர்' தீர்மானத்திற்கு விடுவதாகவும,

(5) புதிதாக ஏற்படுத்தப்பட்ட திட்டத்தில் ஏதேனும் மாறுபாடு செய்ய வேண்டுமென மூன்றில் இரண்டு பங்கு அங்கத்தினர் விரும்பினல் அவ்வாறே செய்யத் தானும் சம்மதிப்பதாகவும் உறுதி கூறிக் கையெழுத்திட வேண்டும்.

இந்தச் சங்கங்களின் ஒவ்வொரு விஷயத்தைப் பற்றிய தீர்மானமான முடிவும், அங்கத்தினருடைய கூட்டத்தின் கையில் உள்ளது. நிலங்களைப் பிரிக்கும் முறை முதலிய எல்லா விவரங்களும் பொதுக் கூட்டத்திலேயே முடிவு செய்யப்படும். அந்த முடிவுகளை நிருவாகக் கமிட்டியார் அமுலுக்குக்

கொண்டுவர வேண்டும் என்னும் ஏற்பாடு செய்யப் பட்டிருக்கிறது.

ஓரூரில் மூன்றில் இரண்டு பங்கு அங்கத்தினர் ஒப்புக்கொள்ளும் ஏற்பாட்டை மற்றவர்களும் ஒப்புக்கொள்ள வேண்டும். இந்தச் சங்கங்கள் தங்கள் முடிவையே ஒவ்வொருவரும் ஆமோதிக்க வேண்டுமென வற்புறுத்துவதில்லை. ஏதாவது தகராறு உண்டானால், அவை மத்தியஸ்தரால் தீர்க்கப்படுகின்றன.

நிலங்களை ஒன்றுசேர்த்துப் புதிய முறையில் பங்கிடும் வேலையை, அரசாங்க அலுவலிலுள்ள ரெவினியூ உத்தியோகத்தினர் ஒருவரின் உதவியால், இச்சங்கங்கள் செய்து முடிக்கின்றன. இச் சங்கங்கள் நிலப்பங்கீடு செய்யும்போது, அரசாங்கத்தினரே ஓர் உத்தியோகத்தினரை இரவல் கொடுக்கின்றனர்.

அநேக இடங்களில் இம்மாதிரியான நில ஒழுங்கு செய்வதால் ஏற்படும் செலவு முழுவதையும், இச்சங்க அங்கத்தினரே கொடுப்பதற்குச் சற்றுப் பின் வாங்குகிறார்கள். ஆதலால், இவ்வேலையால் ஏற்படும் செலவைப் பஞ்சாபு மாகாண அரசாங்கத்தார், தம் மாகாணத்தினருக்குக் கொடுக்க முன் வந்திருக்கின்றனர்.

## நிலங்களை ஒன்று சேர்ப்பதாலுண்டாகும் நன்மைகள்

முதலாவதாக, நிலங்கள் ஒன்றாக இருப்பதால் விவசாயத்தை நன்றாகச் செய்ய முடிகிறது; விவ

சாயமும் பயனுள்ளதாகிறது. ஒருவனுடைய நிலம் ஒரே இடத்தில் இருப்பதால், எவ்வளவோ சௌகரியம் உண்டு. நிலப்பாசனத்திற்குக் கிணறு தோண்டிக்கொள்ளலாம்; பழந்தரும் மரங்களை வளர்க்கலாம்; புதிய சாஸ்திரீயமான விவசாய முறைகளைக் கைக்கொள்ளலாம்; தான் இஷ்டப் பட்ட பயிரைப் பயிர் செய்யலாம்; அக்கம்பக்கத்தி லுள்ளவர்கள் செய்யும் பயிரையே தானும் செய்ய வேண்டுமென்னும் நியதியில்லை.

ஒரு கிராமத்தில் பொதுக் காரியங்களுக்குத் தக்க இடத்தில் நிலத்தை ஒதுக்கி வைப்பதற்கு இத ஞல் சௌகரியம் உண்டாகிறது. மாடுகள் மேய்வ தற்குத் தனியிடம், தோட்டங்கட்கு வேறிடம், பள் ளிக்கூடங்கட்கு ஓர் இடம், விளையாட்டுகட்கு மற்றோ ரிடம் என இம்மாதிரியாக எல்லா வசதிகளும் உண் டாகுமாறு நிலங்களை ஒதுக்கி வைத்துக்கொள்ள ஒரு சந்தர்ப்பம் இதனுல் உண்டாகிறது.

இப்போதுள்ள நிலையில் கிராமங்களில் அடிக் கடி நிலப்பிரிவு தகராறுகளினுல் கோர்ட்டில் வியாச் சியங்கள் பல நடக்கின்றன. அதனுல், அதன் சம் பந்தமுள்ள இருதரப்பாருக்கும் மிகுந்தபண நஷ்டம் உண்டாகிறது. அதுவுமல்லாமல், இதனுல் ஊரிலே சண்டையும், மனக்கசப்பும், பிளவுகளும் அதிகமா கின்றன. இவைகளையெல்லாம் இப்புதிய ஏற்பாடு அறவே ஒழிக்கின்றது.

ஒரு விவசாயியினுடைய நிலம் ஒரே இடத்தில் இருந்தால், அவன் அதற்கு வேலி போட்டுக்

கொண்டு, தன் நிலத்தில் எத்தனையோ புதிய விவசாய முறைகளை அநுஷ்டிக்கக் கூடும். இப்புதிய ஏற்பாட்டால் விவசாயிகளின் வருமானமும் அதிகரிக்கிறது; நிலமும் நன்ருகச் சாகுபடி செய்யப்படுகிறது.

## நிலங்களை ஒன்று சேர்ப்பதிலுள்ள சில கஷ்டங்கள்

ஒரு கிராமத்தில் இப்புதிய ஏற்பாட்டைப் புகுத்த வேண்டுமானல், அவ்வூரார் அனைவரையும் திருப்தி செய்ய வேண்டும். எந்த விவசாயியும் இந்த ஏற்பாட்டால் தனக்கு அசௌகரியம் நேரிட்டு விட்டது என்று எண்ணுவதற்கு இடம் இருத்தலாகாது. ஏழைகள், பணக்காரர்கள், வலியவர்கள், எளியவர்கள் ஆகிய அனைவருக்கும் ஒப்ப அமைந்த ஒரு திட்டத்தை அமுலுக்குக்கொண்டு வர வேண்டும். கிராமங்களில் அறியாமை அதிகம். சில சமயங்களில் சில விவசாயிகள், "என்னுடைய நிலந்தான் பொன் விளையும் பூமி; அதை நான் விடமாட்டேன்," என்று சொல்லக்கூடும். அப்படிப்பட்டவர்களையெல்லாம் சரிப்படுத்த வேண்டும்.

ஓர் ஊரில் மைனர்களுடைய (**Minors**) நிலம் இருந்தால், அந்நிலங்களை ஒன்று சேர்ப்பதில் கஷ்டம் உண்டாகிறது. நிலத்தை அடைமானமாக வைத்துக்கொண்டு பந்தகக் கடன் கொடுத்திருப்பவர்கள், புதிய நிலத்தைப் பெற மறுக்கிருர்கள். அவர்களைத் திருப்திப்படுத்த வேண்டும்.

கிராமச் சிறு அதிகாரிகள் (பட்வாரி-**Patwari**) அநேகமாக இதற்கு விரோதமாகவே இருக்கின்

றார்கள். திருத்தியமைக்கப்பட்ட பிறகு கிராமங்களில் தங்கட்கு முன்போலச் செல்வாக்கும், வரும்படியும் இரா என அவர்கள் எண்ணுகிறார்கள். அதனால், அவர்கள் இவ்வித ஏற்பாடு உண்டாகாதவாறு ஜனங்களின் மனத்தைக் கலைக்கின்றார்கள்.

எனவே, இப்புதிய நிலையை ஸ்தாபிக்க மிகுந்த பிரயாசை எடுத்துக்கொள்ள வேண்டும்; நாளடைவில் விவசாயிகளை வசியப்படுத்த வேண்டும்; அவர்கள் மனத்தைத் திருப்ப வேண்டும். இதற்குப் பொறுமையும் விடா முயற்சியும் விசேஷமாக வேண்டும். ஒரு சிலராவது விடாது முயற்சி செய்து வந்தால், இக்காரியம் எளிதில் கைகூடும்.

ஓர் ஊரில் ஒரு சங்கமானது இக்காரியத்தில் வெற்றியடைந்துவிட்டால், பிறகு பல இடங்களில் சுலபமாக இக்காரியத்தைச் செய்து முடித்துவிடலாம். ஓர் ஊரில் இந்த ஏற்பாட்டாலுண்டான நன்மைகளை மக்கள் கண்டறிந்தால், பல இடங்களில் தாங்களே இவ்வாறு செய்ய முன் வருவார்கள்.

என்றாலும், ஓர் ஊரில் பெரும்பாலார் சம்மதித்தால், அந்த ஏற்பாடு மற்றவர்களையும் கட்டுப்படுத்தும் என்று ஒரு சட்டம் இருக்க வேண்டுமென்னும் பொதுவான ஓர் அபிப்பிராயம் உண்டாயிருக்கிறது. ஏனெனில், எல்லாரும் சம்மதிக்கும்போது முரட்டுச் சுபாவமுள்ள இரண்டொருவரால் ஏற்பாடு முழுதும் அழிந்து போகுமானால், அது மிகவும் வருந்தத்தக்கதல்லவா?

ஓர் ஊரில் புது ஏற்பாட்டைச் செய்த பிறகுங் கூட இச்சங்கங்கள் இருந்துவருகின்றன. பிறகு ஏதாவது தகராறு ஏற்பட்டால், இவை சுலபத்தில் அதைச் சரிப்படுத்திவிடுகின்றன.

இச்சங்கங்கள் நம் நாடு முழுவதும் ஏற்பட்டுத் துண்டுதுணுக்குகளாகச் சிதறிக் கிடக்கும் ஒவ்வொருவருடைய நிலமும் ஒன்று சேர்க்கப்பட்டாற்றான், நம் நாட்டு விவசாயம் சிறப்புறும்.

---

# தொழிலாளர் கூட்டுறவுச் சங்கங்கள்

## 1. தொழிலாளிகளின் சங்கங்கள்

இப்போதுள்ள பொருளாதார முறையில் தொழிலாளிகள் கூலிக்கே வேலை செய்கிறார்கள். தொழிலாளிகள் உற்பத்தி செய்யும் பொருள்களை விற்பதால் வரும் இலாபத்தை முதலாளிகளே அடைகிறார்கள். முதலாளிகள் யாதொரு சிரமமும் இன்றி, பிறருடைய கஷ்டத்தின் பயனை அநுபவித்துச் சுகமாக வாழ்வது இப்போது நாம் உலகில் காணும் காட்சி. அவ்வாறு நிகழாமல், தொழிலாளர் பலர் ஒன்றுசேர்ந்து, தொழிலுக்கு வேண்டிய முதலைப்போட்டு, சாமான்களை உற்பத்தி செய்து, இலாபத்தை அடைவது தொழிலாளிகட்கு மிகவும் நல்லதல்லவா ? அவ்வித முயற்சியில் ஈடுபடுபவைகளே இத்தொழிலாளிகளின் சங்கங்களாகும்.

சாதாரணமாக, குறித்த சாமான்களை உண்டாக்கும் திறமை உடைய தொழிலாளிகள் ஒன்றுசேர்ந்து கூட்டுறவுத் தொழிற்சாலை ஒன்றை ஏற்படுத்தக்கூடும். அத்தொழிற்சாலைக்கு வேண்டிய முதலை ஆளுக்குக் கொஞ்சமாகப் போட்டுத் தொழில்

தொடங்கலாம். அந்த முதலுக்கு ஒரு குறித்த வட்டி தரப்படும். அந்தத் தொழிற்சாலையில், முதல் போட்ட தொழிலாளிகள் வேலை செய்வார்கள்; அவரவர் வேலையின் தகுதிக்கேற்பக் கூலி பெறுவார்கள்.

பிறகு தொழில் நடப்பதாலேற்படும் இலாபத்தில் சேம நிதிக்கென ஒதுக்கி வைப்பது போக, பாக்கியை அவர்களுக்குள் பங்கிட்டுக்கொள்ளுவார்கள்.

இந்தக் கூட்டுறவுத் தொழிற்சாலைகளின் நிருவாகம், தொழிலாளிகள் தங்களுக்குள் சிலரைத் தேர்ந்து எடுத்து அமைக்கும் ஒரு கமிட்டியாரிடம் இருக்கும். சாதாரணமாக நித்தியப்படி வேலைகளைக் கவனிக்கச் சம்பளம் கொடுத்து ஒரு மானேஜரை நியமித்துக்கொள்ளலாம்.

தொழிலாளிகளின் கூட்டுறவுத் தொழிற்சாலைகள் செவ்வனே நடப்பதற்குச் சில இடையூறுகள் உண்டு.

முதலாவதாக, இக்காலத்தில் தொழில் நடத்துவதென்றால் ஏராளமான முதல் வேண்டும். அதிக முதல் போட்டு நடத்தாத தொழிற்சாலை, ஏனைய கம்பெனிகளின் போட்டியால் அழிந்துபோகும். அப்படிப் பெருமுதல் போடுவதென்பது, தொழிலாளிகள் சுலபமாகச் செய்யக்கூடிய காரியமன்று.

இரண்டாவதாக, இந்தத் தொழிற்சாலைகள் தொழிலாளர்களின் ஒற்றுமைக் குறைவாலும், பொறாமையாலும் நன்றாக நடைபெறுவதில்லை.

---

## 2. தொழிலாளிகளுடைய தொழிற்சாலைகளின் வரலாறு

தொழிலாளிகளின் தொழிற்சங்கங்களை மிகவும் பரவும்படி செய்தவர், இங்கிலாந்தில் **ஓவன் (Owen)** என்பவரும், பிரான்சு தேசத்தில் **பௌரியர் (Fourier)** என்பவரும் ஆவர். ஆதி காரணரான இவ்விருவர் முயற்சியாலும் பிரசாரத்தாலுந்தான் பல சங்கங்கள் தோன்றின. இவ்விருவரும் இச்சங்கங்களை ஸ்தாபிப்பதன் மூலம் உலகச் சமுதாய நிலைமையையே முற்றிலும் மாற்றிவிடலாம் எனக் கனவு கண்டனர்; தொழிலாளிகளையெல்லாம் முதலாளிகளாக்கிவிடலாம் என நம்பினர்; அது செய்ய முடியாவிடினும், கூட்டுறவின் மூலம் எல்லோரும தமக்கான பொருள்களை உற்பத்தி செய்து கொள்ள முடியும் என எண்ணினர்.

ஓவனுடைய பிரசாரத்தால் ஸ்காட்லந்து, இங்கிலந்து, அயர்லந்து தேசங்களில் சில தொழிலாளர் சங்கங்கள் ஏற்படுத்தப்பட்டன. அவை சில காலம் நடைபெற்று அழிந்துவிட்டன.

1850-ஆம் வருஷத்தில் சில தொழிலாளர் சங்கங்கள் தோன்றின. அவற்றிற்கு '**விடுதலைச் சங்கங்கள்**' (Redemption Societies) என்பது பெயர். அவைகளின் முக்கிய நோக்கம், தொழிலாளிகளின் **விடுதலை**. அதாவது, தொழிலாளிகள் தங்களுக்கு வேண்டிய முதலைத் தாங்களே போட்டு நடத்துவதால் உண்டாகும் சுயேச்சை நிலை. செருப்புத்

தைத்தல், சால்வைகள் நெய்தல் முதலிய பல தொழில்களிலும் இச்சங்கங்கள் ஈடுபடலாயின.

இவற்றிற்குப் பின் **கிறிஸ்தவ சம உடைமைச் சங்கங்கள் (Christian Socialist Associations)** ஏற்பட்டன. இவற்றிற்கு மூல புருஷராய் இருந்தவர் **ஜே. எம். லட்லோ (J. M. Ludlow)** என்பவர். தையற்காரர்கள், வீடு கட்டுபவர்கள், ரொட்டி சுடுபவர்கள், செருப்புத் தைப்பவர்கள் முதலிய பல தொழிலாளிகளிடையே இச்சங்கங்கள் உண்டாயின. சில தொழிலாளிகளின் ஒற்றுமைக் குறைவாலும், போதிய பண வசதி இல்லாமையாலும், வேறு சில காரணங்களாலும் இவை விருத்தியடையவில்லை.

**பிரான்சு** :—பிரான்சு தேசத்திலே வெற்றியுடன் தொழிலாளிகளின் சங்கத்தை ஏற்படுத்தியவர் **கோடின் (Godin)** என்பவர். 1879 - ஆம் ஆண்டில் **கைஸ் (Guise)** என்னும் இடத்தில் அவர் ஓர் இரும்புத் தொழிற்சாலையை ஏற்படுத்தினர். நாளடைவில் தொழிலாளிகளை அத்தொழிற்சாலையின் சொந்தக்காரர்களாக்க வேண்டும் என்பது அவருடைய ஆசை. தொழிலாளிகட்கு நீண்ட நாளைய பயிற்சியை அளித்தால்தான் அவர்கள் தொழிற்சாலையைத் தாங்களே நடத்தும் திறமையைப் பெறுவார்களென்று அவர் எண்ணினர்.

ஆகையால், அவரவர் பக்குவத்திற்கேற்ப, அவர் தொழிலாளிகளை நான்கு வகையினராகப் பிரித்தார். நால்வகைத் தொழிலாளிகளும், படிப்படியாக, ஒருவரைவிட ஒருவர் விசேஷ சௌகரி

யங்களைப் பெற்றிருந்தனர். ஒவ்வொரு தொழிலாளியும் படிப்படியாக ஒரு நிலையிலிருந்து மேல் நிலைக்கு நாளடைவில் போக வேண்டிய ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

முதல் படியில் இருக்கும் தொழிலாளிகட்கு **உபகாரச் சம்பளமும் (Pension)**, நோய் அல்லது ஏதாவது ஆபத்து நேரிடின் **இன்ஷியூரன்ஸு**ம் அளிக்கப்பட்டன. இரண்டாவது படியில், தொழிலாளிகட்கு இலாபத்தில் ஒரு பங்கு கொடுக்கப்பட்டது. மூன்றாவது நிலையில் முன் கொடுக்கப்பட்டதைவிட 100க்கு 50 பங்கு அதிக இலாபம் கொடுக்கப்பட்டது. நான்காவது நிலையில் அவர்கள் முழு உரிமையும் உடைய அங்கத்தினர்கள் ஆனார்கள். தொழிற்சாலையின் நிருவாகம், எல்லாப் பிரிவுகளின் தலைவர்களும், முழு உரிமையுடைய அங்கத்தினர்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட மூவரும் அடங்கிய கமிட்டியாரிடம் இருந்தது.

பெரும்பாலும் தொழிலாளிக்குச் சேர வேண்டிய இலாபப் பங்கு ரொக்கமாகக் கொடுக்கப்படவில்லை. அந்தத் தொகைக்கு ஓர் உறுதிச் சீட்டே அளிக்கப்பட்டது. அந்தத் தொகைக்கு நூற்றுக்கு ஐந்து வீதம் வட்டி தரப்பட்டது. அங்கத்தினர்கள், நாளடைவில் விட்டுவிட்டுப் போகும் போதுதான் அந்த இலாபப் பணமெல்லாம் கொடுக்கப்பட்டது.

1894-ஆம் வருஷத்தில் அந்தத் தொழிற்சாலை, தொழிலாளிகட்கே உரியதாக மாறிவிட்டது.

பிரான்சு தேசத்தில் அத்தொழிற்சாலை செவ்வனே நடைபெற்றபடியால், மற்றைத் தேசத்தினரும் இம்முறையைப் பின் பற்றலாயினர்.

பாரிஸ் நகரத்திலே 1827-ஆம் வருஷம் லெக்லைர் (Laclaire) என்ற ஒரு வர்ண வேலைக்காரர் மேற்கூறிய தொழிற்சாலையைப் போன்ற ஒன்றை ஆரம்பித்தார். கோடினைப் போலவே (Godin) அவரும் தம் கீழ் வேலை செய்த தொழிலாளிகளை நாளடைவில் படிப்படியாக உயர்த்தி, அந்தத் தொழிற்சாலையின் சொந்தக்காரர்களாக்கினர்.

அவ்விரண்டு தொழிற்சாலைகளும் நன்கு நடைபெற்றதற்குக் காரணம் அவைகளைத் தொடங்கியவர்கள், தொழிலாளர்களை நாளடைவில் தயார் செய்து, கூட்டுறவு முறைகளை அநுஷ்டிக்கும்படி செய்ததேயாகும்.

பின்பு நகை செய்பவர்கள், தொழிலாளர்களின் தொழிற்சாலை ஒன்றை ஏற்படுத்தினர்கள். வேறு சில தொழிற்சங்கங்களும் உண்டாயின. அவைகளிற் பல அழிந்துவிட்டன.

1863-ஆம் வருஷம் மறுபடியும் பல தொழிற்சாலைகள் தோன்றின. 1868-ஆம் வருஷம் கிரடிட் ஆன் டிரவெய்ல் (Credit on Travail) என்ற பாங்கு முறிந்து போன போது, அநேக கூட்டுறவுத் தொழிற்சாலைகளும் அழிந்து போயின.

இன்னும் பிற்காலத்தில் சில சங்கங்கள் தோன்றின; சில அழிந்தன; எஞ்சியுள்ளவை மிகச் சிலவே.

பெல்ஜியத்திலும் இவ்விதக் கூட்டுறவு ஸ்தாபனங்கள் சிற்சில முன் வந்தன. எனினும், விசேஷ முன்னேற்றம் காணப்படவில்லை.

மற்ற நாடுகளிலும் இச்சங்கங்கள் விசேஷமாக உண்டாகவில்லை.

இந்தத் தொழிலாளிகளின் கூட்டுறவுச் சங்கங்கள் (பொருள் உற்பத்திச் சங்கங்கள்) பிரான்சு தேசத்திலேதான் செவ்வையாக நடைபெற்று வருகின்றன. பல வகைத் தொழில்களிலும் இவ்வகைச் சங்கங்கள் பிரான்சு தேசத்தில் காணப்படுகின்றன.

இந்நாட்டிலே இச்சங்கங்கள் நடந்து வருவதற்குச் சில விசேஷ காரணங்கள் காணப்படுகின்றன. முதலாவதாக, 'பொருள் உற்பத்தி செய்யும் தொழிலாளர்களின் கூட்டுறவுச் சங்கங்களின் கூட்டுறவுப் பாங்கு' (Co-operative Bank of French Societies of Working Men Producers) மிகக் குறைந்த வட்டிக்குப் பணங்கொடுத்து உதவுகிறது. இரண்டாவதாக, இச்சங்கங்கட்கு அநேக தர்ம சிந்தனையுடையவர் பணங்கொடுத்து உதவி செய்கின்றனர். அதுவுமல்லாமல், அரசாங்கமும் முனிசிபாலிட்டி முதலியவைகளும் இச்சங்கங்களுக்குப் பல வகை வேலைகளையும் கொடுத்து உதவுகின்றன.

ஏனைய நாடுகளில் இச்சங்கங்கள் அவ்வளவு அதிகமாகக் காணப்படவில்லை. ஓரளவு இட்டாலித் தேசத்தில் இச்சங்கங்கள் காணப்படுகின்றன. 1902-ஆம் ஆண்டில் இட்டாலியில் 25 கூட்டுறவு ரொட்டிக் கிடங்குகளும், 153 அச்சடிப்போர் முத

விய தொழிலாளிகளின் சங்கங்களும், 454 தொழிலாளிகள் பொதுஜன சங்கங்களும் காணப்பட்டன.

இந்திய நாட்டில் இன்றும் பல சிறு குடிசைக் கைத்தொழில்கள் இருக்கின்றன. அத்தொழில்களைச் செய்பவர்கள் பெரும்பாலும் ஏழைத் தொழிலாளிகளே. அவர்களிடம் முதல் இல்லை. அவர்கள் அப்போதைய கடை நிலவரங்களை அறிந்து, அவற்றிற்கேற்பப் பொருள்களை உற்பத்தி செய்ய முடியாத நிலையில் இருக்கிறார்கள். அவர்கள் தொழிலிலோ, மில்களின் போட்டி மிக அதிகம். இக்கைத்தொழில்கள் புனர் ஜன்மம் பெற வேண்டுமானால், இத்தொழிலாளிகளின் கஷ்டம் நிவர்த்தி ஆக வேண்டுமானால், இத்தொழிலாளிகள் கூட்டுறவு முறையை அநுஷ்டிக்க வேண்டும்; கூட்டுறவுத் தொழிற்சங்கங்களை ஏற்படுத்த வேண்டும். இப்போது ஆங்காங்குச் சில தொழிலாளிகளின் சங்கங்கள் ஏற்பட்டு நடைபெறுகின்றன. இச்சங்கங்கள் பல இன்னும் தோன்ற வேண்டும். அப்படித் தோன்றினால், குடிசைக் கைத்தொழில்களும், சிறு கைத்தொழில்களும் மறுபடியும் செழித்து ஓங்க முடியும்.

---

## 3. கூட்டுறவு நெசவாளிகளின் சங்கங்கள்

இந்தியாவில் கால மாறுதலால் மிகவும் கஷ்டப்பட்டு வருந்தும் தொழிலாளிகளில் மிகவும் முக்கியமானவர்கள் கைத்தறி நெசவாளிகளே. இவர்கள்

தங்கள் தொழிலை விருத்தி செய்யச் சக்தியற்றவர்களாய் இருக்கிறார்கள்; அதைவிட்டு வேறு தொழிலுக்குப் போகவும் இயலாதவர்களாய் வருந்துகிறார்கள். மில்களில் நெய்து அனுப்பப்படும் துணிகள் இந்நெசவாளிகளின் துணிகளுடன் போட்டி போடுகின்றன. இந்தப் போட்டியால் சளைத்துப்போய் மன வருத்தம் அடைபவர்கள் நெசவாளிகளே.

இப்போதுள்ள நடை முறையில் ஒவ்வொரு நெசவாளியும் தனித்தனியே காரியங்களைச் செய்கிறான். நெசவுக்கு வேண்டிய நூல், சாயம் முதலியவைகளை வாங்க நெசவாளியிடம் பொருள் இல்லை. ஆதலால், அவன் கடன் வாங்க வேண்டி நேரிடுகிறது. கடனுக்கோ, கடுவட்டி கொடுக்க வேண்டி இருக்கிறது. சில சமயங்களில் அவன் கடன் கொடுத்தவனிடமே தான் நெய்த துணிகளைக் குறைந்த விலைக்குக் கொடுக்க வேண்டி நேரிடுகிறது.

நெசவாளிக்குத் தான் நெய்த துணிகளை விற்பதில் கஷ்டம் அதிகம். ஒவ்வொருவனும் தன் துணிகளை யார் வாங்குவார் என்று அலைய வேண்டி இருக்கிறது; அல்லது எந்தக் கடைக்காரனுக்காவது கேட்ட விலைக்குக் கொடுத்துவிட வேண்டிய முடை உண்டாகிறது.

நெசவாளிகள் தங்கட்கு வேண்டிய முதலைக் கூட்டுறவுச் சங்கத்தை ஏற்படுத்துவதன் மூலம் பெற முடியும். மேலும், அதே கூட்டுறவுச் சங்கத்தைக் கொண்டு, தங்கள் எல்லோருக்கும் வேண்டிய நூல், சாயம் முதலியவைகளை மொத்தமாகச் சரசமான

விலைக்கு அங்கநெசவாளிகள் வாங்கிக்கொள்ளலாம். அதுமாத்திரமன்றி, அவர்கள் எல்லோரும் கூட்டுறவுக் கடை வைத்து, அதன் மூலம் தாங்கள் நெய்த துணிகளை விற்பனை செய்யலாம். இவ்வாறான பல சௌகரியங்களிருப்பதால், கூட்டுறவுச் சங்கங்கள் நெசவாளிகட்குப் பெரிதும் பயனளிக்கக் கூடும்.

ஒவ்வொரு நெசவாளியும் கூட்டுறவுச் சங்கத்தில் சேர்தல் வேண்டும். சேரும்போது ஒவ்வொருவனும் பங்குப் பணம் கொஞ்சம் கொடுக்க வேண்டும். அதுவுமல்லாமல், ஒவ்வொரு விவசாயியும் மாதம் இவ்வளவென்று தன் வருமானத்தில் மிச்சம் பிடித்துச் சங்கத்தில் சேர்க்க வேண்டும்.

ஒரு சங்கமானது ஏற்பட்டதும், அது வேண்டிய கடனை, வேறு கூட்டுறவு ஸ்தாபனங்களிலிருந்தாவது, பாங்குகளிலிருந்தாவது வாங்கிக்கொள்ளும். பின் ஒவ்வோர் அங்கத்தினருக்கும் அவரவர் தகுதிக்கும் அவசியத்துக்கும் ஏற்பக் கடன் கொடுத்து, நாளடைவில் கொஞ்சங் கொஞ்சமாகப் பெற்றுக்கொள்ளும்.

இச்சங்கங்களிற் சில நெசவாளிகட்கு வேண்டிய சாமான்களை மொத்தமாக வாங்கி விற்பதால், இலாபம் உண்டாகிறது. அதுவுமன்றி, இச்சங்கங்கள் தாங்கள் வாங்கும் கடனுக்கும், அங்கத்தினருக்குக் கொடுக்கும் கடனுக்கும், வெவ்வேறான வட்டி முறையை அநுஷ்டித்தலால், இலாபம் கிடைக்கிறது. அதாவது, இவை குறைந்த வட்டிக்கு வாங்கி, அதைவிடக் கொஞ்சம் அதிக வட்டிக்குக் கடன்

கொடுப்பதால், இலாபம் உண்டாகும். இந்த இலாபத் தொகை அங்கத்தினருக்குப் பிரிவினை செய்து கொடுக்கப்படமாட்டாது. இச்சங்கங்கள் நெசவாளிகள் சிறந்த கருவிகளை வாங்கி உபயோகிப்பதற்கும் மிகவும் உதவியாய் இருக்கின்றன.

இம்மாதிரிச் சங்கங்கள் சாதாரணத் துணிகளை நெய்வதைவிட, சிறந்த வேலைப்பாடமைந்த உயர்ந்த துணிகளை நெய்வதில் ஈடுபட்டால் விசேஷ இலாபத்தை அடையலாம். சாதாரணத் துணிகளில் மில்களின் போட்டி உண்டு. வேலைத் திறம் அமைந்த துணிகளிலோ, அவ்விதப் போட்டி இல்லை. எனவே, இச்சங்கங்கள் அம்முறையையே கைக்கொள்ள வேண்டும்.

### நமது மாகாண நெசவாளிகளின் சங்கங்கள்

1936—37-ஆம் வருஷக் கணக்கின்படி 80 சங்கங்கள் நமது மாகாணத்தில் இருக்கின்றன. இவைகளின் நடை முதல் சுமார் $1\frac{1}{2}$ லக்ஷம் ரூபாய். இச்சங்கங்கள் பலவற்றிற்கும் உதவியாகச் சென்னைக் கைத்தறி நெசவாளர்களின் மாகாணக் கூட்டுறவுச் சங்கம் ஏற்பட்டிருக்கிறது.

மாகாணச் சங்கமானது பல நெசவாளிகளின் சங்கங்கட்கும் கடன் கூடக் கொடுத்து உதவுகிறது. இச்சங்கத்தின் விற்பனை ஸ்தலங்கள் மதுரை பெல்லாரி, கள்ளிக்கோட்டை, பெஜவாடா, சென்னை முதலிய இடங்களில் இருக்கின்றன.

பம்பாய் மாகாணத்திலே 46 நெசவுச் சங்கங்கள் இருக்கின்றன. இவை, மில்களின் போட்டியால், கஷ்டத்துடன் வேலை செய்ய வேண்டி இருக்கிறது.

---

## 4. சென்னையில் வேலை செய்வோரின் சங்கம்

சென்னை ஜில்லாத் தொழிலாளர் சங்கம் **(Madras District Labour Society)** நல்ல வேலை செய்கிறது. இதன் உறுப்பினரின் தொகை 89. அவர்களில் வேலை செய்யும் தொழிலாளர் 78 பேர். 1938-ஆம் ஆண்டின் முற்பகுதியில் இச்சங்கம் 35,433 ரூபாய் வேலை செய்து முடித்துள்ளது. அங்கத்தினர்கட்குக் கிடைத்த கூலி 3,738 ரூபாய். மற்றவர்கட்குக் கிடைத்தது 4,076 ரூபாய். மொத்தம் கட்டிய வீட்டின் எண் 47.

---

*

# பல திறப்பட்ட சங்கங்கள்

## 1. மலேரியா ஒழிப்புச் சங்கம்

ஒரு பிரதேசத்திலே மலேரியா போன்ற தடுக்கக்கூடிய நோய் காணப்பட்டால், அதை முழுவதும் ஒழிப்பதற்குத் தனிப்பட்டவர்கள் முயற்சி செய்தல் மட்டும் போதாது; பலர் ஒன்று சேர்ந்து வேலை செய்ய வேண்டும். அப்படிப் பலர் சேர்ந்து செய்யும் வேலையைக் கூட்டுறவுச் சங்கங்களின் மூலம் நன்ருகச் செய்யலாம்.

வங்காளத்திலே மலேரியாவின் தொல்லை அதிகம். ஆகையால், அங்குள்ளோர் ஒன்று சேர்ந்து அந்தக் கஷ்டத்தை நீக்கிக்கொள்ள, டாக்டர் சாட்டர்ஜீ என்பவர் முயற்சியால் கூட்டுறவுச் சங்கங்கள் ஸ்தாபிக்கப்பட்டன. அவரே கல்கத்தாவில் 1919-ஆம் வருஷத்தில் 'மத்திய கூட்டுறவு மலேரியா ஒழிப்புச் சங்கம்' என்னும் ஒன்றை ஏற்படுத்தினர். அதில் பல கூட்டுறவு மலேரியா ஒழிப்புச் சங்கங்களும் தனிப்பட்டவர்களும் உறுப்பினர்களாய் இருக்கிருர்கள்.

கிராமங்களிலுள்ள மலேரியா ஒழிப்புச் சங்கங்கள் மலேரியா உண்டாகாதிருப்பதற்கு வேண்டிய எல்லா முறைகளையும் கையாளுகின்றன. ஒரு கிராமத்தில் இச்சங்கம் தொடங்கப்பட்டால், அவ்வூரார்

இதில் சேர ஆரம்பிக்கின்றனர். ஒவ்வொருவரும் நான்கு அணு முதல் ஒரு ரூபாய் வரையில் மாதச் சந்தா கட்டுகின்றனர். அந்தப் பணத்தை அந்த ஊரில் தங்க இஷ்டப்படும் ஒரு டாக்டருக்கு உதவிப் பணமாக அச்சங்கம் கொடுத்து, அவரை ஆதரிக்கிறது. அந்த மருத்துவர் வேறு வியாதியஸ்தருக்குச் சிகிச்சை செய்வதாலும் பொருள் சம்பாதித்துக்கொள்ளலாம். ஆனல், சங்க உறுப்பினரில் எவருக்காவது உடம்பு அசௌகரியமானல், இலவசமாகவே வைத்தியம் செய்ய வேண்டும்.

இம்மாதிரியான கிராமச் சங்கங்கள் பல சேர்ந்து ஒரு மத்திய சங்கத்தையும் ஏற்படுத்திக்கொள்வதுண்டு. அந்த மத்திய சங்கம் ஒரு பெரிய வைத்தியரை ஏற்படுத்திக்கொண்டு, அப்பல சங்கங்களுள்ள ஊர்களையும் பொதுவாகக் கவனித்துக்கொள்ளுமாறு செய்யும்.

நோய் வராமல் தடுப்பதும், வந்த நோயை நீக்குவதும் அல்லாமல், எல்லோருக்கும் பொதுவான சுகாதார வசதிகளையும் இச்சங்கங்கள் செய்து கொடுக்கின்றன.

---

## 2. கூட்டுறவுப் பதிப்பகங்கள்
## (Co-operative Printing and Publishing Societies)

இந்தியாவில் ஆங்காங்குச் சில கூட்டுறவு அச்சாலைகள் நிறுவப்பட்டிருக்கின்றன. இவைகளிற் சில கூட்டுறவு ஸ்தாபனங்களால் ஏற்படுத்தப்பட்டவை; வேறு சில, தனிப்பட்டவர்களால் தொடங்

கப்பட்டவை. இந்தப் பதிப்பகங்கள் தொழிலாளர் கட்கு உரியவை அல்ல.

எல்லாக் கூட்டுறவு ஸ்தாபனங்களும் தங்கட்கு வேண்டிய வேலைகளையெல்லாம் செய்யும்படி இப் பதிப்பகங்களுக்கு உதவியளித்தால் இப்போதுள் ளவை மாத்திரமன்றி, இன்னும் பல கூட்டுறவுப் பதிப்பகங்கள் ஏற்படலாம். ஆனால், நடை முறை யில் அப்படி இல்லை. ஏனெனில், தனிப்பட்டவர் கள் நடத்தும் அச்சாலைகளைவிட இக்கூட்டுறவுப் பதிப்பகங்களில் வாங்கும் அச்சுக்கூலி சற்று அதிக மாய் இருக்கிறது.

ஆனால், அதற்கும் காரணம் உண்டு. கூட்டுற வுப் பதிப்பகங்கள் தங்கள் வேலைக்காரர்கட்கு நல்ல சம்பளம் கொடுக்கின்றன; நன்றாக அவர்களை நடத்துகின்றன. அதோடு வேலைக்காரர்கட்குத் தெய்வீக நிதி ஏற்பாட்டையும் (Provident Fund) செய்து வைத்திருக்கின்றன.

1917—18-ஆம் வருஷத்திலே தென் கன்ன டத்தில் புத்தூர் (Puttur) என்னும் இடத்தில் '**சதா னந்தா கூட்டுறவுப் பதிப்பகம்**' என்பது முதன்முதல் நிறுவப்பட்டது.

சென்னை மாகாணத்திலே கோயமுத்தூர், தஞ் சை, சென்னை என்னும் மூன்று ஜில்லாக்களிலும் ஜில்லா ஒன்றுக்கு ஒரு கூட்டுறவுப் பதிப்பகம் வீதம் மூன்று பதிப்பகங்கள் இருக்கின்றன. இவை கள் எல்லாம் 1936—37-ஆம் வருஷத்தில் இலாபத் திற்கே வேலை செய்துள்ளன.

## 3. கூட்டுறவு வீட்டுச் சங்கங்கள்

வாடகை வீட்டில் இருப்பவர்கள், அநேக அசௌகரியங்களால், சொந்த வீடு இருந்தால் மிகவும் நல்லது என்று விரும்புவது இயற்கையே. வீட்டுச் சொந்தக்காரர்கள் வாடகைக்கு வீடு வேண்டுமானாலும், வேண்டிய சௌகரியங்களைச் செய்து கொடுப்பதில்லை. அப்படிச் செய்தாலும், வீடுகளுக்குக் கிராக்கி இருக்கும் இடங்களில், எவ்வளவு இலாபத்தைப் பெறலாமோ அவ்வளவையும் அடைய வீட்டுச் சொந்தக்காரர்கள் விரும்புகிறார்கள். அதிலும், முக்கியமாக நகரங்களிலே வீடுகளுக்கு முடை அதிகமாய் இருக்கிறது. அநேக பட்டினங்களிலே மக்களின் எண் அதிகரிக்கும் அவ்வளவு வேகமாக, அவர்களுக்கான இட வசதி அதிகரிப்பதில்லை. நகரங்களில் மற்றவர்களைவிடத் தொழிலாளிகளே வீடுகளுக்கு மிகவும் முட்டுப்படுபவர்கள். அவர்கள் தங்களுடைய சொற்ப வருமானத்தில் தக்க வீட்டு வசதி பெற முடியாது தவிக்கின்றார்கள்.

முக்கியமாக அவர்களுடைய வீட்டுக் கஷ்டத்தை நிவர்த்தி செய்வதற்காகவே இவ்வீட்டுச் சங்கங்கள் எழுந்துள்ளன. இச்சங்கங்கள் பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலே இங்கிலாந்தில் முதன்முதல் ஆரம்பிக்கப்பட்டன. நாளடைவில் அவை எங்கும் பரவியுள்ளன.

## தனிப்பட்டவர்கட்குச் சொந்தமான வீடு கட்டும் சங்கங்கள் (The Individual Ownership Socities)

இச்சங்கங்கள் கூட்டுறவுப் பாங்குகளைப் போலக் கடன் தருகின்றன. ஆனால், அப்பணம் வீடு கட்டுவதற்கு மாத்திரமே கொடுக்கப்படும். இந்தச் சங்கங்கள் நான்கு வகைப்படும்.

### (1) முடிவுறும் கட்டடச் சங்கம் (The Terminating Building Society)

தமக்குச் சொந்த வீடு வேண்டுமென விரும்பும் சிலர் ஒன்று சேர்ந்து இச்சங்கத்தை ஏற்படுத்துகின்றனர். ஆரம்பத்தில் எத்தனை பேர் சேருகின்றனரோ, அத்தனை பேர்தான் எப்போதும் அங்கத்தினராய் இருக்கின்றனர்; இடையில் புதியவராக யாரையும் இச்சங்கம் சேர்ப்பதில்லை. ஒவ்வோர் அங்கத்தினரும் வாராவாரம் அல்லது மாதாமாதம் இவ்வளவு பணம் கட்டுவதென ஏற்பாடு செய்யப்படுகிறது. பணம் சேரச்சேர, ஒவ்வோர் அங்கத்தினருக்கும் வீடு கட்டக் கடன் கொடுக்கப்படுகிறது. அடுத்தடுத்து யார் பணம் எடுத்துக்கொள்வதென்பது, சீட்டுக்குலுக்கிப் போட்டாவது அல்லது ஒரு வித உடன்பாட்டினலாவது நிர்ணயிக்கப்படுகிறது.

கடன் வாங்கும் உறுப்பினர், தம் வீட்டை அடைமானம் வைக்கிறார்; மாதந்தோறும் பணம் கட்டி வருகிறார். வாங்கின முதலும் வட்டியும் கொடுபடும் வரையில் அவர் பணம் கட்ட வேண்டும்.

இப்படியே அடுத்தடுத்து ஒவ்வோர் அங்கத்தினரும் வீடு கட்டப் பணம் பெறுகிறார்.

இந்தக் கட்டடச் சங்கம், எல்லா அங்கத்தினரும் தாம் வாங்கிய கடனைக்கொடுத்து முடிக்கிறவரையில் வேலை செய்கிறது. எல்லாரும் பணம் கட்டி விட்டால், அங்கத்தினர்கள் கணக்கை முடித்து, இலாபம் இருந்தால் தங்களுக்குள் பங்கிட்டுக் கொண்டு, சங்கத்தைக் கலைத்துவிடுகிறார்கள்.

## (2) நிரந்தரக் கட்டடச் சங்கம்

## (The Permanent Building Society)

இது எத்தனை அங்கத்தினரை வேண்டுமானாலும் சேர்த்துக்கொள்ளுகின்றது. முதலில் சேரும்போது ஒவ்வோர் அங்கத்தினரும் பங்குகளை வாங்க வேண்டும். இச்சங்கத்தில் பணம் சேர்த்து வைக்க விரும்புபவர் சேர்த்து வைக்கலாம்.

அங்கத்தினர்கட்கு வீடு கட்ட இச்சங்கம் பணத்தைக் கடனாகக் கொடுக்கின்றது. ஒவ்வொருவருக்கும் கொடுக்கப்படும் கடன், அவரவருடைய தேவைக்கு ஏற்றதாய் இருக்கிறது. வாங்குங் கடனை இருபது வருஷத்திற்குள் கொடுத்தல் வேண்டும். கட்டடத்தின் முழு மதிப்பில் நான்கில் மூன்று பங்கு, அல்லது ஐந்தில் நான்கு பங்குத் தொகை தான் கடனாகக் கொடுக்கப்படுகிறது. வீடு கட்டக் கொடுக்கப்படும் கடன், வீடு கட்டக் கட்டக் கொஞ்சங் கொஞ்சமாகக் கொடுக்கப்படும்.

## (3) வாடகை விற்பனைத் திட்டம்
## (The Hire Purchase System)

இத்திட்டத்தின்படி சங்கங்கள் கட்டடங்களைக் கட்டிக் குடியிருக்க வாடகைக்கு விடுகின்றன. வாடகை வாங்கும்போதே, அக்கட்டட விலையின் ஒரு சிறு பகுதியையும், இச்சங்கங்கள் வாங்கிக் கொண்டே வருகின்றன. நாளடைவில் வீட்டில் குடியிருப்பவர் வாடகை கொடுத்துக்கொண்டே வந்தால், அவருக்கு அவ்வீடு சொந்தமாகி விடும்.

## (4) குடியிருப்பவர்-சொந்தக்காரர் முறை
## (The Tenant Ownership System)

இந்தத் திட்டப்படி கட்டடச் சங்கமானது வீடுகள் கட்டக்கூடிய பெரிய இடத்தை விலைக்காவது, நீண்ட நாளைய அநுபவத்திற்காவது வாங்குகிறது. அந்த இடத்தை இச்சங்கம் பல பகுதியாகப் பிரித்துச் சாலைகள் முதலியவைகளை ஏற்படுத்தும். பின்பு வீடு கட்ட விரும்புபவர் அவரவருக்கு வேண்டிய மனையை எடுத்துக்கொள்ளலாம். அந்த இடம் சங்கத்திற்குச் சொந்தமாய் இருந்தால், வீடு கட்டுபவரும் அந்த இடத்தை விலைக்கு வாங்கிக்கொள்ளலாம்; அல்லாவிட்டால், நீண்ட கால அநுபவத்திற்கு வாங்கிக்கொள்ளலாம். வீடு கட்டும்போது அநேகமாக இச்சங்கங்கள் கவர்ன்மெண்டாரிடமிருந்து கடன் வாங்கக் கூடும்.

இந்தச் சங்கங்கள் அங்கத்தினருக்காகக் கட்டடங்களைக் கட்டிக்கொடுப்பதும் உண்டு; அல்லது அவரவரையே கட்டிக்கொள்ளும்படி சொல்லிவிடுவதும் உண்டு. குறித்த இடத்தில் வீடுகளைக் கட்டி முடித்த பிறகும் இச்சங்கங்கள் பொதுக் காரியங்களைக் கவனித்து வருகின்றன.

## கூட்டு உரிமை அல்லது கூட்டுப் பங்குச் சங்கம்
## (Co-ownership or Co-partnership Society)

இந்த ஏற்பாட்டில் சங்கமானது ஒரு குறித்த இடத்தில் வீடு கட்ட ஏற்பாடு செய்கிறது. அந்த இடத்தில் வசிக்க விரும்புவோர் மொத்தக் கட்டடச் செலவுகட்கு எவ்வளவு ஆகுமோ, அதில் $\frac{1}{5}$ பங்கு அல்லது $\frac{1}{3}$ பங்குத் தொகையைக் கொடுக்கின்றனர். ஒவ்வொருவரும் கொடுக்கும் வீதாசாரப் பணம் அவரவருக்கு எவ்வளவு இடம் தேவையாக இருக்கிறதோ அதைப் பொறுத்தது. பிறகு அச்சங்கம் மேலும் தேவையான பணத்தைக் கடனாகப் பெறும்; வீடுகளைக் கட்டும் உறுப்பினர்களைக் குடியிருக்கச் செய்யும்.

குடியிருக்கும் ஒவ்வொருவரும் வீட்டுக்கு வாடகை கொடுத்துவிட வேண்டும். அவரவர் போட்ட பணத்துக்கு நூற்றுக்கு 4 அல்லது 5 வீதத்திற்கு மேற்படாத வட்டி கொடுக்கப்படும்.

வீடு சங்கத்திற்குச் சொந்தம்; சங்கம் அங்கத்தினருக்குச் சொந்தம். எனவே, எல்லா வீடுகளும்

எல்லா அங்கத்தினருக்கும் சொந்தம். ஆனால், ஒரு வருக்கும் தனிப்பட்ட முறையில் எதுவும் சொந்த மானதன்று.

ஒவ்வொருவரும் வீட்டில் இருக்கும் வரையில் வாடகை கொடுத்துவர வேண்டும். வீட்டை விட்டுப் போக வேண்டுமானால், முன்னமே நோட்டீஸ் கொடுத்துவிட்டு, தாம் போட்டுள்ள முதல் பணத்தை வாங்கிக்கொண்டு, காலி செய்துவிடலாம்; ஆனால், தாமே வேறு ஓர் ஆசாமியைத் தமக்குப் பதிலாக வைக்க முடியாது.

இந்தத் திட்டத்தில் எவ்வளவு காலத்துக்கு வாடகைப் பணம் கட்டி வந்தாலும், குடி இருப்பவருக்கு வீடு சொந்தமானதாக முடியாது.

இதிலுள்ள முக்கிய சௌகரியம், ஓர் அங்கத்தினர் எப்போது வேண்டுமானாலும், தம் சௌகரிய அசௌகரியப்படி வீட்டை விட்டுப் போகவும் முடியும்; இருக்கவும் முடியும்.

### வீடுகளைப் புனருத்தாரணம் செய்யும் சங்கங்கள் (House Reconstruction Societies)

சில இடங்களில் வெள்ளம், தீ, பூமியின் அசைவு முதலியவைகளால் வீடுகள் சேதமாகிவிட்டால், அவைகளைப் புதுப்பிக்க இச்சங்கங்களை ஏற்படுத்தலாம். கூர்ஜரம், சிந்து முதலிய இடங்களில் வெள்ளப் பாழான வீடுகளை இம்மாதிரிச் சங்கங்களைக் கொண்டுதான் மீண்டும் அங்குள்ள மக்கள் கட்டிக் கொண்டிருக்கின்றார்கள். இதற்கு அரசினர் உதவி மிகுதியாகக் கிடைக்கும்.

நமது மாகாணத்திலே 119 கட்டடச் சங்கங்கள் இருக்கின்றன. இவைகளில் 1936-37-ஆம் ஆண்டில் 4207 உறுப்பினர் இருந்தனர். இவைகளின் கொடுபட்ட பங்குத் தொகை சுமார் 9 லக்ஷம் ரூபாய்.

பம்பாய் மாகாணத்திலே 1936-ஆம் வருஷத்தில் 80 கட்டடச் சங்கங்கள் இருந்தன. இவைகளின் உறுப்பினர் தொகை, 5617. கொடுபட்ட பங்குத் தொகை, சுமார் 20 லக்ஷம் ரூபாய்.

---

## 4. கூட்டுறவு இன்ஷியூரன்ஸ் கம்பெனிகள்

உலகத்திலே எல்லாத் தேசங்களிலும் ஒவ்வோர் ஆடவரும் பெண்டிரும் தத்தம் உயிரை இன்ஷியூர் செய்துகொள்வது சாதாரண வழக்கமாகிவிட்டது. எல்லா நாட்டிலும் ஒவ்வொருவரும் தத்தம் உயிரை இன்ஷியூர் செய்துகொள்ள வேண்டிய அவசியத்தை நன்றாக அறிந்துள்ளனர். சமீப காலத்தில் நமது நாட்டிலும் இன்ஷியூர் செய்துகொள்பவர்களின் எண் அதிகரித்துக்கொண்டே இருக்கிறது.

நம் நாட்டிலும், பிற நாடுகளிலும் ஏற்பட்டுள்ள இன்ஷியூரன்ஸ் கம்பெனிகளெல்லாம் சாதாரணக் கம்பெனி முறையிலேதான் அமைக்கப்பட்டவை. இந்த இன்ஷியூரன்ஸ் கம்பெனிகளின் பங்காளர்களுடைய நோக்கமும், டைரக்டர்களின் முயற்சியும் தங்கட்கு எவ்வளவு இலாபத்தைத் தேடிக்கொள்ளலாமோ அவ்வளவையும் தேடிக்கொள்வதேயாகும்.

இந்த இன்ஷியூரன்ஸ் கம்பெனிகளில் தங்கள் உயிரை இன்ஷியூர் செய்து, அதற்காகப் பணம் கட்டுகின்ற பாலிஸிதாருக்கு விசேஷ அதிகாரம் இல்லை. நிருவாகத்தில் அவர்கள் விசேஷ மாறுதல்களைச் செய்ய முடியாது.

கூட்டுறவு இன்ஷியூரன்ஸ் கம்பெனியின் நிருவாகம் முழுவதும் இன்ஷியூரன்ஸ் பாலிசியை எடுத்தவர்கள் கையிலேயே இருக்கிறது. சாதாரண இன்ஷியூரன்ஸ் கம்பெனிகளிலோ, அப்படி அன்றி அதிகாரம் முழுவதும் பங்காளர் கையிலேயே இருக்கிறது.

நமது சென்னை மாகாணத்திலே இரண்டு கூட்டுறவு இன்ஷியூரன்ஸ் சங்கங்கள் இருக்கின்றன. ஒன்று, சென்னையிலுள்ள **தென்னிந்திய கூட்டுறவு இன்ஷியூரன்ஸ் சங்கம்**; மற்றொன்று, **தபால், ஆர். எம். எஸ். கூட்டுறவு பெனிபிட்டு பண்டு.**

தென்னிந்திய கூட்டுறவு இன்ஷியூரன்ஸ் சங்கம் ஏற்பட்டு ஏழாண்டுகள் ஆயின. 1936—37-ஆம் ஆண்டின் கடைசியில் 4672 அங்கத்தினர் இதில் சேர்ந்திருந்தனர்; அவர்களில் 35 சங்கங்களாகும். அந்த ஆண்டில் சுமார் 16 இலட்சம் ரூபாய் பெறுமானமுள்ள பாலிசிகளை ஜனங்கள் வாங்கி இருந்தார்கள். மொத்தம் சுமார் 45 இலட்சம் ரூபாய்க்கு இந்த இன்ஷியூரன்ஸ் கம்பெனியில் பாலிசிகளை நம்மவர் வாங்கி இருக்கின்றனர்.

**பம்பாய்க் கூட்டுறவு இன்ஷியூரன்ஸ் சங்கம்** ஆரம்பித்து எட்டு வருஷங்களே ஆகின்றன. இந்தக்

குறுகிய காலத்திலேயே அது நன்றாக வேலை செய்துள்ளது. அதன் மொத்த உறுப்பினர், 3876 பேர். அதன் பாலிசித் தொகை 28,23,753 ரூபாய். பாலிசிதாரின் எண் 3,876 ஆகும்.

## 5. கல்விச் சங்கங்கள்

பஞ்சாபிலே சில காலத்திற்குமுன் 'கட்டாயக் கல்விச் சங்கங்கள்' ஏற்படுத்தப்பட்டன. பெற்றோர்களின் ஊக்கக் குறைவால் அவை சில காலத்திற்குள் அழிந்துவிட்டன.

பம்பாய் மாகாணத்திலே சூரத்து, பூனா, தர்வார் முதலிய இடங்களிலே கூட்டுறவுப் பள்ளிக்கூடங்கள் நிறுவப்பட்டிருக்கின்றன. கூட்டுறவு நிலையங்களில் வேலை பார்க்க விரும்புபவர்களுக்கான கல்வி இப்பள்ளிக்கூடங்களில் கற்பிக்கப்படுகிறது.

## 6. பெண்களின் சங்கங்கள்

பம்பாய் நகரத்திலே துணி வேலை, பூ தைத்தல், குழந்தைகளின் உடைகளைத் தயாரித்தல் முதலிய வேலைகளைச் செய்யும் பெண்களின் சங்கம் ஒன்று இருக்கிறது. அப்பெண்கள் வேலை செய்வதற்கு வேண்டிய சாமான்களைக் கொடுக்கவும், வேலை ஆனபிறகு அப்பொருள்களை விற்கவும் அச்சங்கங்கள் பயன்படுகின்றன. வங்காளத்திலே சில பெண்களின் கூட்டுறவுச் சங்கங்கள் இருக்கின்றன. அவை தையல் வேலை முதலியவைகளை அங்கத்தினருக்குக் கற்றுக்கொடுக்கின்றன.

---

# முடிவுரை



இதுகாறும் கூறியவற்றால், கூட்டுறவு முறையானது மனித வாழ்க்கையின் எல்லா அமிசங்களையும் சிறப்பிக்கச் செய்யும் சக்தி வாய்ந்தது என்பதை நன்கு அறிந்துகொண்டோம். மனிதன் தன் வாழ்க்கையை மேன்மைப்படுத்துவதற்கும், வாழ்க்கையின் முழுப் பயனையும் பெறுவதற்கும், தனக்கென வாழாது பிறர்க்கும் பயனுள்ளதாகத் தன் வாழ்க்கையை நடத்துவதற்கும் இன்றியமையாத சாதனமாய் உள்ளது கூட்டுறவு இயக்கமாகும்.

முதலாளித்துவத்தின் ஆதிக்கம் பெருகி உள்ள இக்காலத்திலே கூட்டுறவு இயக்கமானது இன்னும் உலக முழுதும் முற்றிலும் பரவவில்லை. உலகத்தில் ஒவ்வொரு தேசத்திலும் ஒவ்வொரு விதமான கூட்டுறவுச் சங்கங்களே மிகவும் பரவியுள்ளன. எல்லாத் தேசங்களிலும் வாழ்க்கையின் எல்லாக் காரியங்கட்கும் பயன் தரும் எல்லா விதமான கூட்டுறவுச் சங்கங்களும் உண்டானால், மனிதன் தன் வாழ்க்கையில் எல்லாக் காரியங்களையும் கூட்டுறவு முறைகளைக் கையாண்டே செய்துகொள்வானால், உலக நிலையே முற்றிலும் மாறிவிடும்; உல

கம் மிகுந்த சந்தோஷத்தைத் தரும் இடமாக மாறும். சுருங்கச் சொன்னால், பூவுலகமே சுவர்க்கமாக மாறிவிடும். அப்போது எவ்விதமான சண்டை சச்சரவுகட்கும் இடம் இராது; பல வகையில் மிகுந்த நஷ்டத்தைத் தரும் அநாவசியப் போட்டி ஒழிந்துவிடும்; தனக்கென வாழும் முறை ஒழியுமாதலால், எல்லோருக்கும் சுகம் உண்டாகும்; தொழிலாளி முதலாளி பூசல்கள் மறையும்; சுகம் பெருகும்.

உலகில் எல்லா நாடுகளையும்விட டென்மார்க்குத் தேசத்திலேதான் கூட்டுறவு இயக்கமானது தலை தூக்கி நிற்கின்றது. டென்மார்க்கிலேதான் அந்நாட்டினர் கூட்டுறவு முறைகளை வாழ்க்கையில் மிகவும் பயன்படுத்திக்கொள்ளுகின்றனர். டென்மார்க்குத் தேச மக்களில் 100க்கு 90 பேர் கூட்டுறவு ஸ்தாபனங்களின் உறுப்பினராய் இருக்கின்றனர்.

டென்மார்க்கு ஒரு விவசாய நாடு. அங்கே விவசாயம், விவசாயப் பொருள் விற்பனை ஆகிய இவற்றுக்கெல்லாம் கூட்டுறவுச் சங்கங்களே பயன்படுகின்றன. டென்மார்க்கில் கிடைக்கும் பாலில் 100க்கு 90 பங்கு கூட்டுறவுப் பாற்பண்ணைகளின் மூலமே விற்கப்படுகின்றது. அங்கு 1400 பாற்பண்ணைகள் உண்டு. நூற்றுக்கு 85 பங்கு பன்றி மாமிசம், கூட்டுறவுச் சங்கங்களின் மூலமே வெளி

நாடுகட்கு அனுப்பப்படுகிறது. மிருகங்களின் உண வில் நூற்றுக்கு 67 பங்கு உணவு, கூட்டுறவுச் சங்கங்களின் மூலமே வாங்கப்படுகிறது. விதை வியாபாரத்தில் நூற்றுக்கு 40 பங்கு, கூட்டுறவுச் சங்கங்களின் கையில் இருக்கிறது. முட்டை விற் பனையில் 100க்கு 25 பங்கு கூட்டுறவுச் சங்கங்களால் நடத்தப்படுகிறது. அந்நாட்டினர் தம் வீட்டுக்கு வேண்டிய சாமான்களில் 100க்கு 20 பங்கைக் கூட்டுறவுப் பண்டசாலைகளின் மூலமே வாங்குகின் றனர். அங்கு அந்தப் பண்டசாலைகள் 1750 இருக் கின்றன. நல்ல பால் தருவனவா அல்லவா என் பதைச் சோதித்து விவசாயிகள் நல்ல பசுக்களைப் பெறும்படி செய்யும் 1300 பசுச் சோதனைச் சங்கங் கள் அந்த நாட்டில் உண்டு. *

டென்மார்க்குக்கு அடுத்தபடியாக அயர்லந் திலே விவசாயிகள் கூட்டுறவு முறைகளைப் பெரிதும் கையாளுகின்றார்கள். முன்னே கூறியுள்ளபடி ஒவ்வொரு தேசத்திலும் ஒவ்வொரு விதக் கூட்டுறவு ஸ்தாபனங்கள் உண்டு. உலகில் கூட்டுறவு இயக் கத்தின் நிலைமை எப்படி இருக்கிறதென்பதைக் காட்டச் சில புள்ளி விவரங்களைக் கீழே தருவோம் :

பின்லந்து தேசத்திலே வியாபாரத்தில் 100க்கு 50 பங்கு, கூட்டுறவுச் சங்கங்களின் கையில் இருக் கிறது. ஹாலந்திலே வெண்ணெய், பாலேட்டுக்

* **Denmark by E. Jensen.**

கட்டிகளில் 100க்கு 50 பங்கு, கூட்டுறவுச் சங்கங்களால் செய்யப்படுகிறது. ஸ்விட்ஜர்லந்தில் 100க்கு 90 பங்கு பால் பண்டங்கள், கூட்டுறவு ஸ்தாபனங்களால் உண்டாக்கப்படுகின்றன. அமெரிக்க ஐக்கிய நாடுகளிலே தானியங்களில் 100க்கு 60 பங்கும், புகையிலையில் 60 பங்கும், பழங்கள் காய்கறிகளில் 40 பங்கும், பால் பண்டங்களில் 28 பங்கும் கூட்டுறவு ஸ்தாபனங்களின் மூலம் விற்கப்படுகின்றன. கலிபோர்னியா என்னும் நாட்டில் மாத்திரம் 100க்கு 100 பங்கு வியாபாரம், கூட்டுறவு நிலையங்களின் மூலமே நடைபெறுகிறது. கனடாவிலே வெளி நாட்டிற்கு அனுப்பப்படும் கோதுமையில் 100க்கு 66 பங்கு, கூட்டுறவு ஸ்தாபனங்களின் மூலம் அனுப்பப்படுகிறது.

1937ல் சர்வ தேச சங்கத்தினரால் எடுக்கப்பட்ட கணக்கின்படி, * 57 தேசங்களில் 6,81,767 கூட்டமைப்புச் சங்கங்கள் காணப்பட்டன. அக்கூட்டமைப்புச் சங்கங்களின் அங்கத்தினரின் தொகை 147,533,194 ஆகும். அச்சங்கங்களின் மொத்த வியாபாரத்தின் மதிப்பு (உறுப்பினருக்கு விற்பனை, உறுப்பினரின் பண்டங்களின் விற்பனை) 92,940,245,000 சுவிஸ் பிராங்குகள்.

---

* Co-operative Information, Geneva.

| விவரம் | ருஷியாவைத் தவிர மற்றைய ஐரோப்பிய நாடுகளில் | ருஷியாவில் | ஏனைய நாடுகளில் | மொத்தம் |
|---|---|---|---|---|
| கூட்டமைப்புச் சங்கங்களின் எண் | 227791 | 345515 | 108461 | 681767 |
| கூட்டமைப்புச் சங்கங்களின் உறுப்பினரின் எண் | 41079270 | 93566081 | 12887843 | 147533194 |
| கூட்டமைப்புச் சங்கங்களின் மொத்த வியாபாரம் (சுவிஸ்பிராங்கு நாணயத்தில் இலட்சக் கணக்கில்) | 135845350 | 761078700 | 3247840 | 929402450 |

1. கூட்டுறவு விற்பனைச் சங்கங்களின் மொத்த வியாபாரச் சங்கங்களும், கூட்டமைப்புச் சங்கங்களும் செய்த வியாபாரத்தின் மதிப்பு (1937ல்) 3,819,710,000 சுவிஸ் பிராங்குகள். அவைகளில் ஐரோப்பிய நாட்டுச் சங்கங்களின் வியாபார மதிப்பு, 3,504,337,000 சுவிஸ் பிராங்குகள்.

ஐரோப்பிய நாட்டு மொத்த வியாபாரச் சங்கங்கள் உற்பத்தி செய்த சாமான்களின் மதிப்பு, 868,124,000 சுவிஸ் பிராங்குகள். பொருள் விற்பனைச் சங்கங்கள் நடத்தும் பாங்குகளின் மொத்தப் பணப் புழக்கத்தின் மதிப்பு, 1,550,665,000 சுவிஸ் பிராங்குகளாகும்.

2. கூட்டுறவு விவசாயிகளின் சங்கங்களின் மொத்த வியாபாரத்தின் மதிப்பு, 5,096,441,000 சுவிஸ் பிராங்குகள். அதில் 2,873,385,000 சுவிஸ் பிராங்குகள் மதிப்புள்ள வியாபாரம், ஐரோப்பாவில் நடைபெற்றதாகும். மற்ற நாடுகளில் 2,226,056,000 சுவிஸ் பிராங்குகள் மதிப்புள்ள வியாபாரம், விவசாயிகளின் சங்கங்களால் நடத்தப் பட்டுள்ளது.

3. விவசாயச் சங்கங்களின் மத்திய கூட்டமைப்புச் சங்கங்களின் மூலம் விற்பனை செய்யப் பட்ட சாமான்களின் மதிப்பு, 2,886,093,000 சுவிஸ் பிராங்குகள். அவைகளில் ஐரோப்பிய நாடுகளல்லாத மற்றைய நாடுகளின் விற்பனையின் மதிப்பு 1,792,993,000 சுவிஸ் பிராங்குகள். விவசாயத்

துக்கு வேண்டிய சாமான்களும், உணவுப் பொருள் களும் இக்கூட்டமைப்புகளின்மூலம், 1,606,765,000 சுவிஸ் பிராங்குகளின் மதிப்புள்ளவை, வாங்கப் பெற்றுள்ளன. இப்பொருள்களில் 1,332,711,000 சுவிஸ் பிராங்கு மதிப்புள்ளவை, ஐரோப்பிய நாடு களில் வாங்கப்பட்டவை.

4. விவசாயமல்லாத மற்றத் தொழிற்சங்கங் களின் வியாபாரத்தின் மதிப்பு, 548,524,000 சுவிஸ் பிராங்குகள். இதில் மூலப் பொருள்களும், கருவி களும் 544,691,000 பிராங்குகள் மதிப்புள்ளவை.

5. கிராமப் பாங்குகளின் மத்திய ஐக்கியங் களில் (Central Unions of Rural Credit Societies) ஐந்தொகைக் குறிப்பில் (Balance sheet) காணப் படும் தொகை 3,963,784,000 சுவிஸ் பிராங்குகள். அம்மத்திய ஐக்கியங்களின் மொத்தக் கொடுக்கல் வாங்கல்களின் மதிப்பு, 47,074,041,000 சுவிஸ் பிராங்குகள். அவைகளில் ஐரோப்பிய மத்திய ஐக்கியங்களின் ஐந்தொகைக் குறிப்பில் காணப் படும் தொகை, 3,495,428,000 சுவிஸ் பிராங்குகள். ஐரோப்பிய மத்திய ஐக்கியங்களின் கொடுக்கல் வாங்கல் தொகை, 47,003,481,000 சுவிஸ் பிராங்கு கள்.

6. நகரப் பாங்குகளின் மத்திய ஐக்கியச் சங் கங்களின் ஐந்தொகைக் குறிப்பில் காணப்படும் தொகை, 511,593,008 சுவிஸ் பிராங்குகள். கொடுக் கல் வாங்கல்களின் மதிப்பு, 24,730,150,000 சுவிஸ் பிராங்குகள்.

ரஷியாவில் நகரங்களில் விற்பனைக் கூட்டுறவுச் சங்கங்கள் 1935-ஆம் வருஷம் செப்டம்பர் மாத முதல் இல்லை. ரஷியாவிலே 241,451 கூட்டுப் பண்ணைகள் இருக்கின்றன. தொழிற்சங்கங்களோ, 14,900 இருக்கின்றன. அத்தொழிற்சங்கங்களின் உறுப்பினரின் எண், 1,493,800. அவற்றின் மொத்த வியாபாரத்தின் மதிப்பு, 18,360,000,000 சுவிஸ் பிராங்குகள். இவைகளல்லாமல் மற்றத் தேசங்களில் இல்லாத வேட்டையாடுவோர் சங்கங்கள் இத்தேசத்தில் இருக்கின்றன. இப்புள்ளி விவரங்களிலிருந்து பல தேசங்களிலும் கூட்டுறவு ஸ்தாபனங்கள் வேலை செய்கின்றன என்பதும், பல விதத் துறைகளிலும் அவை பயனுள்ளவை என்பதும் நன்கு விளங்கும். எனினும், கூட்டுறவு இயக்கமானது எல்லா நாடுகளிலும் எல்லா மக்களையும் இன்னும் தன்னிடம் அடக்கவில்லையென்பது கவனிக்கற்பாலது. கூட்டுறவு ஸ்தாபனங்கள் மிகவும் பரவுவதற்கு இன்னும் பல கஷ்டங்கள் இருக்கின்றன. முதலாளித்துவம் மிகவும் முனைந்து நிற்கும் நாடுகளில் கூட்டுறவு இயக்கம் வலுப்பெறுவதற்குப் பல இடையூறுகள் இன்னும் இருக்கின்றன. பல அரசாங்கங்கள் கூட்டுறவு இயக்கத்திற்கு இன்னும் பேராதரவை அளிக்கவில்லை.

நம் நாட்டுக் கூட்டுறவு இயக்கத்தின் நிலையை ஆராய்வோம் :

நமது தேசத்தில் உள்ள விவசாயிகள் சங்கங்களின் எண், 90,000. இவற்றில் சுதேச மன்னரின்

நாடுகளில் உள்ளவை 14,000. இவற்றில் 30 இலட்சம் அங்கத்தினர் இருக்கின்றனர். இவற்றின் முதல் தொகை (கொடுபட்ட பங்குத் தொகை), 4 கோடியே 50 இலட்சம் ரூபாய். சேம நிதி, 8 கோடியே 60 இலட்சம் ரூபாய். நடை முதல் தொகை, 34 கோடி ரூபாய்.

மத்திய பாங்குகளின் தொகை, 600. அவற்றில் நூறு பாங்குகள் சுதேச மன்னர் நாடுகளில் இருப்பவை. இவற்றின் கொடுபட்ட பங்குத் தொகை, 2 கோடியே 90 இலட்சம் ரூபாய்; சேம நிதி, 3 கோடி ; நடைமுதல் தொகை, 30 கோடி.

மாகாணக் கூட்டுறவுப் பாங்குகளின் எண், 10. அவைகளின் கொடுபட்ட பங்குத் தொகை, 6 கோடியே 80 இலட்ச ரூபாய். சேம நிதி, 6 கோடியே 20 இலட்ச ரூபாய். நடை முதல் தொகை, 11 கோடி ரூபாய்.

இம்மூவகைக் கூட்டுறவு ஸ்தாபனங்களையும் சேர்த்துப் பார்த்தால், இவற்றின் கொடுபட்ட முதல் தொகை, 13 கோடி ; சேம நிதி, 14 கோடி ; நடை முதல் தொகை, 95 கோடி.

இந்தத் தொகைகளைப் பார்க்கும்போது இந்திய கூட்டுறவு இயக்கம் மிகப் பெரியதாகவே காணப்படுகிறது. ஆனால், இந்தியாவோ, மிகப் பெரிய தேசம். இந்த நாட்டில் பரவியுள்ள இவ்வியக்கம் இன்னும் நன்றாக வேரூன்றவில்லை என்றுகூடச் சொல்லலாம். ஏனெனில், கூட்டுறவு இயக்கத்தில் சேர்ந்திருப்பவரின் தொகை, 40 லக்ஷத்து 400

ஆயிரந்தான். இந்திய நாட்டில் 35 கோடி மக்கள் இருக்கும்போது, 40 இலட்சத்துச் சொச்சம் மக்களே உறுப்பினர்களாக இருப்பார்களானல், இவ்வியக்கம் நம் நாட்டிலே வலுவடைந்துவிட்டதெனக் கூற முடியுமா ?

பஞ்சாபிலே 100க்கு 48 கிராமங்களிலேதான் கிராமக் கூட்டுறவுச் சங்கங்கள் இருக்கின்றன. வங்காளத்திலே நூற்றுக்கு 23 கிராமங்களிலே தான் கூட்டுறவுச் சங்கங்கள் உண்டு. சென்னையிலே 100க்கு 22 கிராமங்களிலேதான் சங்கங்கள் ஏற்பட்டுள்ளன. ஐக்கிய மாகாணங்களிலோ நூற்றுக்கு 5 கிராமங்களிலேதான் சங்கங்கள் காணப்படுகின்றன.

இச்சங்கங்களுங்கூட 1929 - 30-ஆம் வருஷத்திலிருந்து செவ்வையாக நடைபெறவில்லையென்றே கூறலாம்.

நமது நாட்டிலே பல வகைக் காரணங்களால் கூட்டுறவு இயக்கமானது சரியாக வலுப்பெறவில்லை என்று கூற வேண்டி இருக்கிறது. அக்காரணங்களில் சிலவற்றைக் கவனிப்போம் :

ஒரு நாட்டில் கூட்டுறவு இயக்கமானது செவ்வையாக நடைபெற வேண்டுமானல், அந்நாட்டு மக்கள் தாங்களாகவே கூட்டுறவின் உண்மையை அறிந்து, அவசியத்தைக் கண்டு, ஆர்வத்துடன் கூட்டுறவு ஸ்தாபனங்களை ஏற்படுத்தி, உற்சாகத்துடன் அவைகளை நடத்தி வர வேண்டும். நம் நாட்டிலோ, அப்படி இல்லை. கூட்டுறவு இயக்

கத்தை இந்தியாவில் தொடங்கியவர், அரசாங்கத்தினர். அதை இன்றும் பாதுகாப்பவர் அரசாங்கத்தினர். அதில் அக்கறை உள்ளவரும் அரசாங்கத்தினர். எனவே, அரசாங்கத்தினரின் முயற்சியாலும் ஆதரவாலுந்தான் கூட்டுறவு இயக்கம் நம் நாட்டிலே தோன்றி நடைபெறுகிறது. கூட்டுறவு இயக்கத்தின் மேன்மையையும் அவசியத்தையும் அவ்வியக்கம் தொடங்கி 35 ஆண்டுகள் ஆனபோதிலும், அவ்வியக்கத்திற் சேர்ந்தவர்களிற் பலர் இன்னுங்கூட அறிந்துகொள்ளவில்லை. மக்கள் தாங்களாகவே தொடங்கி நடத்தாத இயக்கமாதலால், இது இந்நாட்டிலே நல்ல சக்தியைப் பெறவில்லை.

இன்றும் இவ்வியக்கமானது அரசினர் கையிலேதான் இருக்கிறது. ஒவ்வொரு மாகாணத்திலும் ரெஜிஸ்தராரே கூட்டுறவு இயக்கத்தின் தந்தையாராய் இருக்கிறார். ஒரு குறித்த இடத்தில் கூட்டுறவுச் சங்கத்தை ஏற்படுத்த வேண்டுமா வேண்டாவா என்பதை ரெஜிஸ்தராரே தீர்மானிக்க வேண்டி இருக்கிறது. அந்த முடிபு ஓரிடத்திலுள்ள மக்களின் தீர்மானத்தைப் பொறுத்ததன்று. 'ஆரம்பிக்கப்பட்ட சங்கங்களில் எவையெவை நன்றாக நடைபெறுகின்றன? எவ்வெவற்றை ஒழித்துவிட வேண்டும்?' என்ற தீர்மானங்கள் ரெஜிஸ்தராரின் கீழுள்ள உத்தியோகத்தினரே செய்ய வேண்டுவனவாகும். 1904, 1912-ஆம் வருஷங்களில் மத்திய அரசினர் ஏற்படுத்திய கூட்டுறவுச் சட்டங்களில் ரெஜிஸ்தராருக்கு அளிக்கப்பட்டுள்ள அதிகாரத்

தைவிட, 1919-ஆம் ஆண்டுக்குப்பின் சில மாகாணங்களில் ஏற்படுத்தப்பட்ட கூட்டுறவுச் சட்டங்கள், அதிக அதிகாரத்தையே கொடுத்திருக்கின்றன. அதனால் கூட்டுறவு இயக்கமானது மக்களின் இயக்கமாக இல்லாது, அரசாங்க அதிகார வர்க்கத்தினரின் இயக்கமாகவே இந்நாட்டில் இருக்கிறது. எனவே, சில இடங்களில் கூட்டுறவுப் பாங்குகளைச் '**சர்க்கார் பாங்குகள்**' என்றுகூட மக்கள் வழங்குகின்றார்கள். இதிலிருந்தே நம் நாட்டினருக்குக் கூட்டுறவு இயக்கத்தைப்பற்றிய அறிவு எவ்வளவு இருக்கின்றதென்பதை அறிந்துகொள்ளலாமல்லவா ?

இவ்வித அறியாமைக்கு மக்களைக் குறை கூறுவதிற் பயனில்லை. ஏழ்மையும், அறியாமையும் மிகுந்துள்ள இந்நாட்டிலே கூட்டுறவைப்பற்றிய எல்லா விஷயங்களையும் நன்கு எடுத்துக் காட்டினாலல்லவோ நம் மக்கள் கூட்டுறவு இயக்கத்தில் ஆர்வங்கொண்டு கூட்டுறவு இயக்கத்தை நன்றாக நடத்த முடியும்? கூட்டுறவு இலாக்காவில் உள்ள அதிகாரிகளிற் பலருக்கே போதிய பயிற்சியும் விஷய ஞானமும் இல்லையெனப் பலர் எண்ணுகின்றனர். ரெஜிஸ்தராராக நியமிக்கப்படுபவர்களில் பலர் அதற்கென விசேஷப் பயிற்சி பெறாதவராய் இருப்பதால், அவர்கள் கூட்டுறவு இயக்கம் மக்களிடையே பரவுவதற்குப் பெரிதும் பயன் உடையவர்களாக இருக்க இயலவில்லை எனச் சிலர் கூறுகின்றனர். அநேக கூட்டுறவுச் சங்கங்களில் நிருவாகஸ்தர்க

ளாய் இருப்பவர்களிலேயே பலருக்குப் போதிய விஷய ஞானமும், கூட்டுறவில் விசேஷப் பற்றும் இல்லையெனப் பலரும் சொல்லுகின்றனர். அஃது அங்ஙனமாக, உறுப்பினர்களில் அநேகமாக எல்லோருக்கும் கூட்டுறவைப்பற்றிய முழு ஞானமும் இல்லையென்பதைக் கூறவும் வேண்டுமோ? கூட்டுறவு இயக்கத்தைச் சார்ந்த, சேர்ந்த ஒவ்வோர் உறுப்பினரும் கூட்டுறவைப் பற்றி நன்கு அறிந்து கொண்டால்தான் கூட்டுறவு இயக்கம் செவ்வையாக நடக்க முடியும். கூட்டுறவு இயக்க அறிவு பரவ வேண்டுமென்பதை **மேக்லாகன் கமிட்டியாரும்,** சென்னைக் கூட்டுறவுக் விசாரணைக் கமிட்டியாரும், விவசாய விசாரணைக் கமிஷனர்களும், அஸ்ஸாம் கூட்டுறவு விசாரணைக் கமிட்டியாரும், வங்காள ரெஜிஸ்தராரும், வேறு பல கமிட்டியாரும், தனிப் பட்டவர்களும் மிக வற்புறுத்திக் கூறி இருக்கின்றார்கள். ஆகவே, கூட்டுறவைப் பற்றிய உண்மையான அறிவு பரவினால்தான் கூட்டுறவு வெற்றி பெற முடியும். அவ்வறிவு மிகவும் பரவுவதற்கான எல்லா முயற்சியையும் செய்ய வேண்டுவது நம்மனோர் கடமையாகும்.

இந்நாட்டில் கூட்டுறவு இயக்கத்தைத் தொடங்கிய அரசினர், கூட்டுறவானது மனித வாழ்வின் சகல அம்சங்களையும் ஒட்டி நடக்க வேண்டுவதென்பதை மறந்துவிட்டனர். இந்திய விவசாயியின் கடன் பளுவைக் குறைக்க வேண்டும் என்ற ஒரே குறிக்கோளைக் கொண்ட இந்திய அரசினர்,

கூட்டுறவுப் பாங்குகளையே தோற்றுவித்துப் போற்றி வளர்ப்பாராயினர். அதனால் இந்திய மக்கள், கூட்டுறவானது வாழ்க்கைக்கு எல்லா வகையாலும் பயன்படக்கூடியது என்பதை முற்றிலும் உணர முடியாதவர்களானார்கள். 1912-ஆம் ஆண்டு சட்டத்தில் பல விதக் கூட்டுறவு ஸ்தாபனங்களையும் ஏற்படுத்திக்கொள்ளலாமென்ற வசதி ஏற்படுத்தப் பட்ட போதிலும், அரசினர் கூட்டுறவுப் பாங்குகளின் பெருக்கத்திலேயே தமது முழுக் கவனத்தையும் செலுத்துவாராயினர். நாடு முழுதும் பல கூட்டுறவுப் பாங்குகளையே ஏற்படுத்துவாராயினர்.

கூட்டுறவுப் பாங்குகள் தோன்றிய போதுங் கூட அவைகளால் ஏற்படக்கூடிய இரண்டு வகை நன்மைகளும் நம் நாட்டு மக்களுக்கு உண்டாகவில்லை. அந்நன்மைகளுள் முதலாவது, கூட்டுறவுப் பாங்குகளின் உறுப்பினர்கள் தங்கட்குப் பணமுடை ஏற்பட்ட சமயத்தில் கடன் பணம் பெறும் வசதி உண்டாவது. இரண்டாவது, உறுப்பினர் சிக்கன வாழ்வு நடத்திப் பணத்தைச் சேர்க்கும் அவசியத்தையும் சௌகரியத்தையும் உண்டாக்குவது. இவை இரண்டனுள் நம் நாட்டினர் முதலாவதான நன்மையை அடைந்தனரே அன்றிப் பிந்தியதைப் பெறவில்லை. மூன்று மாகாணத்திலே அங்கத்தினரின் போடு முதல் சராசரி 35 ரூபாய்க்கு மேல் இல்லை. ஏனைய மாகாணங்களிலே போடு முதல் சராசரி 20 முதல் 35 ரூபாயே இருக்கிறது. கூட்டுறவு ஸ்தாபனங்களில் அங்கத்தினர் சேர்த்து

வைத்துள்ள பணம் 30 கோடி ரூபாய்தான் இருக்கிறது. எனவே, கூட்டுறவுப் பாங்குகள் அங்கத்தினர்கள் விசேஷமாகச் சிக்கன முறையில் சேர்த்துவைப்பதற்கு வேண்டிய ஊக்கத்தைத் தரவில்லை என்றே கூற வேண்டி இருக்கிறது.

கூட்டுறவுப் பாங்குத் திட்டத்தின் முக்கிய நோக்கம், ஓர் இடத்திலுள்ள பலர் ஒரு கூட்டுறவுச் சங்கத்தை உண்டாக்கினல், அங்கத்தினரெல்லாம் சிக்கனமாக இருந்து பணத்தைச் சேர்த்து, முடைப்படுபவருக்குப் பயன்படும்படி செய்வது என்பதாம். எனவே, ஒவ்வோர் இடத்திலும் இருக்கும் கூட்டுறவுச் சங்க உறுப்பினர் வேண்டும் கடன் பணம், கூடுமானவரையில் அந்தச் சங்கத்தின் ஏனைய அங்கத்தினர் தமது சிக்கனத்தால் சேர்த்து வைக்கும் தொகையிலிருந்தே கொடுபட வேண்டும். அவ்விதச் சிறந்த முறை நம்நாட்டில் ஏற்படவில்லை. எல்லாக் கூட்டுறவுச் சங்கங்களிலும் உறுப்பினருக்குத் தேவையான பணம் வெளியிலிருந்தே (மாகாணப் பாங்கிலிருந்தோ, மத்திய பாங்கிலிருந்தோ) பெறப்படுகிறது. எனவே, பல கூட்டுறவுச் சங்கங்களின் நிருவாகிகள், அச்சங்கத்தின் காரியங்களில் அவ்வளவு அக்கறை செலுத்துவதில்லை. ஒரு கூட்டுறவு சங்கத்தின் உறுப்பினர்களுள் சிலருடைய பணம், வேறு சில அங்கத்தினருக்குக் கொடுபட்டால், அப்பணம் சரியான காலத்தில் முழுவதும் திரும்பி வர வேண்டுமென்பதில் பணம் போட்டுள்ள சிலருக்காவது சிரத்தை இருக்கும். ஆகவே, சரியான ஆட்களுக்

குத்தான் கடன் கொடுக்கப்படும்; பணமும் திரும்பி வந்துவிடும். இப்போதுள்ள நிலைமையோ, அப்படி இல்லை. ஏதோ "ஆற்றில் வருகிறது; மணலில் செருகுகிறது," என்றே எல்லா உறுப்பினரும் அசிரத்தையாய் இருக்கின்றனர். ஏனெனில் பணம் பெரும்பாலும் வெளியிலிருந்தே வருகிறது.

"வரையறுக்கப்பட்ட பொறுப்பு இல்லையாதலால், உறுப்பினர் பண விஷயத்தில் மிகுந்த கருத்துடையவராய் இருப்பர்," என்று சிலர் எண்ணலாம். நடை முறையில் அப்படி ஒன்றும் காணப்படவில்லை. ஏதாவது ஒரு சங்கம் நஷ்டப்பட்டு, அந்த நஷ்டம் உறுப்பினரின் சொத்திலிருந்து ஈடு செய்யப்பட்டதென்பது இதுவரையில் காணவில்லை. ஏனெனில் உறுப்பினர்களில் பெரும்பாலோர்-ஏன்? எல்லோருமே—வெற்றாட்கள். அவர்கட்கெனச் சொத்து விசேஷமாக இருந்தாலல்லவோ அதிலிருந்து நஷ்ட ஈடு செய்ய முடியும்! வரையறுக்கப்படாத பொறுப்பு இப்போதிருப்பதால், கொஞ்சம் சொத்துள்ள விவசாயிகளும் கூட்டுறவு ஸ்தாபனங்களில் சேருவதற்குப் பயப்படுகிறார்கள்.

மேலும், பலர் கூட்டுறவு பாங்கில் சேரும் போது எப்படியாவது கடன் வாங்க வேண்டும் என்றுதான் சேருகின்றனர். அவர்கள் கடன் வாங்கும் நோக்கத்தோடு இருக்கும்போது, தங்கள் பொறுப்பையும், தங்கள் கடமைகளையும் உணருவதில்லை; அவற்றைப்பற்றிச் சிந்திப்பதும் இல்லை. அதுவுமன்றி விவசாயிகளிற் பலர், கடன் வாங்கு

வது பயனில்லாத செலவுக்காகத்தான். பயனுடைய செலவுக்கு வாங்கி அப்பணத்தைக் கொண்டு பணம் சம்பாதித்தாலல்லவோ கடனைத் திருப்பிக் கொடுக்க முடியும்? அப்படிக்கின்றி, வீண் செலவுக்கென வாங்கும் கடனைத் திருப்பிக் கொடுப்பது எப்படி?

1929-30-ஆம் வருஷத்திற்குப் பிறகு இக் கூட்டுறவுப் பாங்குகள் புதிதாகக் கடன் கொடுக்கும் சக்தியையும் இழந்துவிட்டன. கொடுபட்ட கடன் எல்லாம் அப்படியப்படியே திரும்பி வராமல் நின்றுவிட்டன. கொடுபட்ட பணம் அவ்வப்போது திரும்பி வராவிட்டால், மேலும் மேலும் பணப் புழக்கம் எப்படி இருக்க முடியும்? சில ஆண்டுகளாக உறுப்பினர் கொடுக்க வேண்டிய வட்டி முதல் பாக்கித் தொகைகள் குவிந்துகொண்டே வருகின்றன. கொடுத்த கடனை எப்படி வசூலிப்பதென்பதே பெரிய பிரச்சினையாகிவிட்டது.

இப்படிப் பணப் பாக்கி அதிகமாய் விழுந்துவிட்டதன் காரணங்கள் பலவெனக் கூறப்படுகின்றன. அவைகளிற் சிலவற்றைக் கூறுவோம்:

ஐக்கிய மாகாணக் கூட்டுறவு விசாரணைக் கமிட்டியார் கூறியுள்ளவை, சரியான மேற்பார்வை இன்மை, நிருவாகக் கமிட்டியினரின் சிரத்தையின்மை, காலக்கேடுகளாலுண்டான பயிர்ச் சேதம், பழங்கடன் பளு, இயற்கையாகவே காரியங்களை ஒழுங்குபடச் செய்யாக் குறை முதலியவை.

சென்னை மாகாணக் கூட்டுறவு விசாரணைக் கமிட்டியார் இன்னும் விவரமாகக் காரணங்களைக் கூறியிருக்கின்றனர். அவை வருமாறு:—

(1) சரியான விளைவின்மை, பயிர்ச்சேதம் முதலியவை.

(2) படிப்பின்மையாலும், அறியாமையாலும் பல உறுப்பினருக்குக் கூட்டுறவின் உண்மைகள் நன்றாகத் தெரியவில்லை. பஞ்சாயத்தினராயும், நிருவாகத்தினராயும் இருப்பவரிற் பலரே பாக்கி வைத்திருப்பதால், மற்றவர்களை நெருக்கிப் பாக்கியை வசூலிக்க முடியாத ஒரு நிலை.

(3) உத்தியோகத்தினரல்லாத மற்றையோர் போதிய அறிவும், வசதியும், ஊதியமும் பெறாமையால், சரியாகக் கூட்டுறவு ஸ்தாபனங்களை மேல் பார்க்காத குறைபாடு.

(4) திடீரென அரசினரின் மேற்பார்வை நிறுத்தப்பட்டது.

(5) மத்திய சங்கங்கள் தங்கள் பொறுப்பை முற்றிலும் உணர்ந்து காரியங்களைச் செய்யாமை.

(6) வரையறுக்கப்படாத பொறுப்பு உண்மையால், எல்லாம் சரியாக இருக்கும் என, இக் கூட்டுறவுக் கிராமப் பாங்குகட்குப் பணம் கொடுத்த ஸ்தாபனங்கள் கனவு கண்டுகொண்டிருந்தமை.

(7) புதுச்சங்கங்கள் உண்டானபோது அவைகள் அவசியமா அல்லவா என்பதை அவ்வப்போது ஆராய்ச்சி செய்யாமல் இருந்தது.

(8) 'எதற்காகக் கடன் வாங்கப்படுகிறது? குறித்த உறுப்பினரின் நிலைமை என்ன? எவ்வளவு கடனை அவர் திருப்பிக் கொடுக்க முடியும்?' என்பன போன்ற விஷயங்கள் சரியாகப் பரிசீலனை செய்யப்படாமை.

(9) 'பைனமி' (பொய்க்கணக்கான) கொடுக்கல் வாங்கல்கள்.

(10) கூட்டுறவுப் பாங்குகள் தண்ட வட்டி விதித்தாற்கூட (அபராத வட்டி) அந்த வட்டி வெளியில் கடன் வாங்கினால் கொடுக்கும் வட்டியைவிடக் குறைவாய் இருப்பதால் உறுப்பினர் கூட்டுறவுப் பாங்குக்குக் கொடுக்க வேண்டிய கடனைக் கொடுக்கும் சிரத்தை எடுப்பதில்லை. கோர்ட்டில் நிறைவேற்றப் பட்டு டிகிரி ஆனால் கூட, அந்த வட்டி வெளியாரின் வட்டியைவிடக் குறைவாகவே இருக்கிறது. எனவே, கூட்டுறவுப் பாங்குகளில் பாக்கி வைக்கப்படுகிறது.

(11) சங்கங்களின் பொறுப்பாளிகள் கடன் பாக்கி வைத்திருப்பவர்களிடம் அதைக் காலத்தில் வாங்கிவிட வேண்டுமென்ற சிரத்தை எடுத்துக் கொள்ளாமையும், பணத்தை வசூலிப்பதற்கான காரியங்களைச் செய்யாமையும்.

இவ்வாறான பல காரணங்களால் இக்கூட்டுறவுச் சங்கங்களில் விவசாயிகள் அதிகமாகப் பாக்கியை வைத்துக்கொண்டிருக்கிறார்கள். மேலும், சில வருஷங்களாக விலை வாசி மிகவும் குறைந்து போனபடியால், பல விவசாயிகளின் வருமானம் குறைந்துவிட்டது. நல்ல காலத்திலேயே வாங்கின

கடனை உரிய காலத்தில் செலுத்தத் தவறுபவர்கள் இப்போது பாக்கி வைத்துக்கொள்வதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது ?

அநேக இடங்களில் இச்சங்கங்களின் பொறுப்பாளிகள் தங்கள் சங்க உறுப்பினரையே நெருக்கிப் பணம் வசூலிக்க விரும்புகிறார்களில்லை. பணப் பாக்கியை அவசியமானால் வழக்குத் தொடர்ந்து வசூலிப்பதில்லை. எனவே, சங்கப் பொறுப்பாளிகள் பண வசூல் செய்வதில் தங்கள் கடமையை வேண்டுமென்றே செய்யாதிருந்தால், அல்லது கடமையைச் செய்யத் தவறினால், அவர்கட்கு ஏதானும் தண்டனை இருக்க வேண்டுமென வங்காளப் பாங்கு விசாரணைக் கமிட்டியார் கூறி இருக்கின்றனர். மத்திய பாங்குகளும் மாகாணப் பாங்குகளுங்கூடத் தங்கட்குச் சேர வேண்டிய பணத்தை வசூலிப்பதில் போதிய சிரத்தையைக் காட்டாததால், கிராமப் பாங்குகளும் சிரத்தை காட்டுவதில்லையோ எனச் சிலர் எண்ணுகின்றனர்.

சில இடங்களில் பழைய கடன் கொடுபட்டது போலவும், புதிதாகக் கடன் கொடுக்கப்பட்டது போலவும் பொய்க் கணக்குகள் தயாரிக்கப்படுகின்றன. சில இடங்களில் நிருவாகத்தினருட்சிலர் பொய்யாக ஒருவனுக்குக் கடன் கொடுத்தது போலக் கணக்கைத் தயாரித்துத் தாங்களே பணத்தை எடுத்துக்கொள்ளுகின்றனர். வேறு சில இடங்களில் கூட்டுறவு ஸ்தாபனங்களின் பணம் களவாடப் பட்டுவிடுகிறது. இக்கோளாறுகட்கெல்லாம் முக்

கிய காரணம், கூட்டுறவு அறிவு இன்மையும், நாணயமின்மையுமேயாகும். இக்குறைகளெல்லாம் நிவர்த்திக்கப்பட்டாற்றான் கூட்டுறவு இயக்கம் தூய்மையதாகும்; நன்றாகவும் நடக்கும்.

இந்தியாவில் கூட்டுறவுப் பண்டசாலைகளில் உறுப்பினர்களாய் இருப்பவர்கள், சமூகத்தில் மத்திய வகுப்பைச் சேர்ந்தவர்கள். கூட்டுறவுப் பண்டசாலைகள் தொழிலாளர்களிடையே இன்னும் சரியாக வலுவடையவில்லை. இங்கிலாந்திலோ, அநேகமாக எல்லாத் தொழிலாளிகளும் கூட்டுறவுப் பண்டசாலைகளின் உறுப்பினர்களாக இருக்கின்றார்கள். அங்கே தொழிலாளர் சங்கங்கட்கும் கூட்டுறவுச் சங்கங்கட்கும் நெருங்கிய தொடர்பு ஏற்பட்டிருக்கிறது. அவையிரண்டும் ஒன்றுக்கொன்று ஆதரவாய் இருக்கின்றன. அதனால், இரண்டு இயக்கத்திற்கும் விசேஷ பலம் உண்டாகிறது. இந்தியாவிலுங்கூடக் கூட்டுறவு இயக்கமானது தொழிலாளர்களிடையேயும் பரவ வேண்டும்.

மேலும், கூட்டுறவுப் பண்டசாலைகள் சில நகரங்களிலே மாதச் சம்பளம் பெறும் மத்திய வகுப்பினர்களாலேதான் நடத்தப்பெறுகின்றன. கிராமங்களிலோ, அவை காணப்படுவதேயில்லை. நகர்ப்புறங்களிலேயன்றி நாட்டுப்புறங்களிலும் இப்பண்டசாலைகள் பல உண்டானால்தான் சில்லறைக் கடைக்காரரின் கொள்ளை ஒழியும்.

விவசாயிகளிடையேயும் கூட்டுறவுப் பாங்குகளல்லாத மற்றைக் கூட்டுறவு ஸ்தாபனங்கள் அதிக

மாக ஏற்படவில்லை. விவசாயிகளின் பொருள் உற்பத்தி, விற்பனை முதலிய பல காரியங்கட்கும் கூட்டுறவு ஸ்தாபனங்கள் ஏற்பட்டு, விவசாயியின் வாழ்க்கையின் தன்மையும் நிலைமையுமே முற்றிலும் மாறுபட்டாற்றான் கூட்டுறவு முறைகளாலான பயனை முற்றிலும் பெறலாம்.

தொழிலாளர் சங்கங்களும் நம் நாட்டில் அதிகமாக ஏற்படவில்லை. ஆங்காங்கே மிகச் சில தொழிலாளர் சங்கங்களே உள்ளன. குடிசைக் கைத்தொழில்கள் பெரிதும் விருத்தியடைய வேண்டுமென நம் நாட்டில் பலர் விரும்பும்போது, கூட்டுறவு ஸ்தாபனங்கள் பெருகாவிட்டால், அக்குடிசைக் கைத்தொழில்கள் எவ்வாறு செவ்வையாக நடைபெறக்கூடும்? அவை எவ்வாறு நம் நாட்டு மக்களுக்கு நன்மை பயக்க முடியும்? நம் நாட்டினரின் பொருளாதார நிலைமை எப்படி விருத்தியடையும்?

கூட்டுறவு இன்ஷியூரன்ஸ் சங்கங்களும் விசேஷமாகப் பெருக வேண்டும். கூட்டுறவு இன்ஷியூரன்ஸ் சங்கங்களின் சிறப்பை நம்மவர்கள் இன்னும் அறிந்துகொள்ளவில்லை. அதை அறிந்த பிறகு எவரும் சாதாரண இன்ஷியூரன்ஸ் கம்பெனிகளிடம் போகமாட்டார்களென்பது உறுதி!

## இந்திய கூட்டுறவு விருத்திக்கான சில யோசனைகள்

'இந்தியாவில் கூட்டுறவு இயக்கமானது மிகுந்த பயனைத் தர வேண்டுமானால், அதற்கெனச் செய்ய வேண்டுவன இவை,' எனப் பலர் பலவற்றைக்

கூறியுள்ளனர். அவைகளிற் சிலவற்றை ஆராய்வோம் :

இந்திய கூட்டுறவு இயக்கம் பயனுள்ளதாய் இருக்க வேண்டுமானால், கூட்டுறவுப் பாங்குகளை மாத்திரம் ஏற்படுத்துதல் போதாது; வேறு பல வகைக் கூட்டுறவு ஸ்தாபனங்களும் ஏற்பட வேண்டும். ஒவ்வோர் ஆசாமியும் தனக்கு வேண்டிய முடைக்குப் பணம் பெறுவது மாத்திரம் போதாது; வாழ்வில் வருவாயும் சுகமும் அதிகமாக இருப்பதற்கான வசதிகளையுண்டாக்கும் கூட்டுறவுச் சங்கங்களும் உண்டாதல் வேண்டும் என்று சொல்லப்படுகிறது. இஃது எல்லோருக்கும் ஒப்ப முடிந்த ஓர் உண்மையாகும். எல்லா வகைக் கூட்டுறவு ஸ்தாபனங்களையும் ஏற்படுத்தாது கூட்டுறவுப் பாங்குகளை மாத்திரம் ஏற்படுத்தியதுதான் இவ்வியக்கத்தின் பலவீனத்திற்குக் காரணம் என்பதை எல்லாரும் உணருகின்றனர்.

எல்லா வகையிலும் கூட்டுறவு இயக்கத்தை எப்படி உபயோகமாகும்படி செய்வதென்பதிலேதான் சில மாறுபட்ட கருத்துகள் காணப்படுகின்றன. ஒரு சாரார், "கூட்டுறவுப் பாங்கே, மற்ற எல்லா விதக் கூட்டுறவுக் காரிய நிலையங்களுமாதல் வேண்டும். அப்பாங்குகளைக் கொண்டே நம்மவர் எல்லா காரியங்களையும் கூட்டுறவு முறையாற் செய்துகொள்ள வேண்டும்," என்று கூறுகின்றனர்; பல வகைக் காரியக் கூட்டுறவுச் சங்கங்கள் ஏற்பட வேண்டுமென்று வற்புறுத்திக் கூறுகின்றனர். வேறு

சிலர், 'கூட்டுறவுப் பாங்குகளுடன் ஏனைய காரியங்களைப் பிணைப்பது சரியல்ல; கூடுமானால், ஒவ்வொரு தனிக் காரியத்துக்கும் ஒவ்வொரு கூட்டுறவுச் சங்கம் இருத்தல் நன்று. இல்லையேல், கூட்டுறவுப் பாங்காவது மற்றச் சங்கங்களினின்று வேறுபட்டிருக்க வேண்டும்,' எனச் சொல்லுகின்றனர்.

மேக்லாகன் கமிட்டியார், பல காரியக் கூட்டுறவுச் சங்கங்கள் ஏற்படுத்துவதை ஆதரித்திருக்கின்றனர். ரிசர்வ் பாங்கு நிருவாகத்தினரும், பல காரியக் கூட்டுறவுச் சங்கங்கள் உண்டாவதைப் பெரிதும் விரும்புகின்றனர். வேறு சிலரும், கூட்டுறவுப் பாங்குகளே மற்றைக் காரியங்களையும் கவனிக்கும் முறையைப் பாராட்டுகின்றனர். பல காரியக் கூட்டுறவுச் சங்கம் உண்டாக்கப்படுவதன் முக்கிய காரணம், விவசாயி தன் வாழ்க்கையில் அச்சங்கம் எல்லா வகையிலும் பயனுள்ளதாக இருக்கிறதென அறிந்து, அதனால் அதைப் பெரிதும் ஆதரிப்பானென்பதாம். அக்கருத்து உண்மையாயிருப்பினும் இருக்கலாம். ஆனால், நடைமுறையில் பல கஷ்டங்கள் இருக்கின்றன. பல காரியச் சங்கங்களை நடத்துவதென்பது சற்றுக் கஷ்டமான காரியமே. கணக்கு வழக்குகளைச் செவ்வையாக வைத்துக்கொள்ளும் திறமை நிருவாகத்தினருக்கு இருக்க வேண்டும். அப்படிப்பட்ட திறமையாளர் கிடைப்பார்களா என்பதுதான் சந்தேகம்.

" திறமைசாலிகள் பலர் கிடைப்பார்களானால், ஒவ்வொரு காரியத்திற்கும் ஒவ்வொரு சங்கத்தை

ஏற்படுத்தலாம். ஆனால், இப்போதுள்ள ஆள் பஞ்சத்தில் ஒவ்வொரு சங்க நிருவாகத்திற்கும் திறமைசாலிகள் கிடைப்பது கஷ்டம். ஆதலால், பல காரியச் சங்கங்களை அமைப்பதே நல்லது,'' என்று சிலர் கூறுகின்றனர். பல காரியச் சங்கங்களை ஏற்படுத்துவதென்றால், பலர் அதில் சேர விரும்பமாட்டார். ஏனெனில், ஒவ்வொருவரும் ஒரு குறித்த காரியத்துக்காக மாத்திரமே கூட்டுறவு இயக்கத்தில் சேர விரும்பலாம். அப்படிப்பட்டவர்கட்குப் பல காரியச் சங்கங்களை ஏற்படுத்துவது அசௌகரியமாகத் தோன்றும். மேலும், ஒரு வகைக் காரியத்தில் வரும் நஷ்டம், எல்லோரையும் எல்லாக் காரியத்தையும் பாதிக்கும். ஆனால், ஒவ்வொரு காரியத்துக்கும் தனித்தனி சங்கமானால், அக்கஷ்டம் இல்லை. ஒரு துறையில் நஷ்டம் வந்தால், அது ஒரு சங்கத்தின் தலையோடு போகும். மேலும், காரிய நிருவாகங்களில் போதிய திறமையும் தேர்ச்சியும் நம்மவர்கட்கு இன்னும் உண்டாகாத போது பல காரியச் சங்கத்தால் நடைமுறையில் பல அசௌகரியங்கள் உண்டாகக்கூடும். பல வகைச் சங்கங்கள் ஏற்படும்போது ஒவ்வொன்றிற்கும் நிருவாகத்திற்குத் திறமைசாலிகள் கிடைக்கவில்லையென வைத்துக்கொண்டாலும், ஒரு சிலரே எல்லாச் சங்க நிருவாக சபைகளிலுங்கூட இருக்கலாம்.

சிலர், ''ஜெர்மனியில் ரெய்பசின் சங்கங்கள் விவசாயிக்கான சில காரியங்களையும் கவனித்

தனவே! நமது நாட்டில் ஏன் அவ்வாறு செய்ய லாகாது?" எனக் கேட்கலாம். ரெய்பசின் சங்கங் கள் தங்களுடைய முக்கிய காரியமான விவசாயி களின் பொருளுதவியால் மிகவும் வெற்றிபெற்றன. பின்புதான் வேறு துறைகளிலும் புகுந்தன. அப் போதுகூடப் பல காரியங்களில் ஈடுபட்ட கூட்டுறவு வுப் பாங்குகட்குக் கஷ்டங்கள் நேரிட்டன என் பதைக் கண்டிருக்கிறோம். எனவே, ஜெர்மானிய அநுபவம் கூட்டுறவுப் பாங்குகள் பல காரியங்களை யும் கவனிக்க வேண்டும் என்னும் கருத்தை ஆதரிப்ப தாகக் காண முடியவில்லை.

திருவாளர் **வி. ராமதாஸ் பந்துலு** அவர்கள், எந் தக் கூட்டுறவுப் பாங்கும் மற்றக் காரியங்களில் தலை யிடுவதை விரும்பவில்லை எனக் கூறி இருக்கிறார் கள். சாமான்களின் விற்பனை, வாங்குதல் இவை களுக்காகப் பெரிய மத்திய சங்கங்களையாவது, மாகாணச் சங்கத்தையாவது ஏற்படுத்துவதே நன்று என அவர் அபிப்பிராயப்படுகிறார்.

சென்னைச் சர்வ கலாசாலைப் பொருளாதார ஆசிரியரான திருவாளர் **கே. ஜி. இராமகிருஷ்ண ஐயர்** அவர்கள் கூட்டுறவுப் பாங்குகள் வேறு எவ்வகை வேலையிலும் புகுதல் நல்லதன்று என்றும், கூட்டு றவுப் பாங்குகளைப் பணம் கொடுக்கல் வாங்கலுக்கே விட்டுவிட்டு, மற்ற எல்லாக் காரியங்கட்குமென வேறு சங்கத்தை ஆக்கலே பயன் தரத்தக்கது என் றும் எடுத்துக்காட்டி இருக்கிறார்கள்.

கூட்டுறவு நிபுணரான ஸ்ட்ரிக்லந்து (Strickland) என்பவர், "ஒரு குறித்த காரியத்துக்கென ஏற்படாது, பொதுவாகப் பல காரியங்கட்கென உண்டாகும் கூட்டுறவுச் சங்க அமைப்பானது, எளியதாய் இராது; மிகுந்த சிக்கலுடையதாய் அமையும். சாதாரண உறுப்பினர் அந்த அமைப்பின் திருகல்களை - சிக்கல்களை - உணர்ந்துகொண்டு, அவைகளின் நடப்பில் பங்கு எடுத்துக்கொள்ள முடியாது. அந்தச் சிக்கலான அமைப்புள்ள ஸ்தாபனங்கள் படித்தவர்களின் கையிலும் அறிவாளிகளின் கையிலுமே போய்ச்சேரும். அப்போது கூட்டுறவு இயக்கத்தின் ஜன நாயகத்துவம் இல்லாமற்போகும்," என்று குறிப்பிட்டிருக்கிறார்.

எனவே, ஒவ்வோர் இடத்திலும் கூட்டுறவுப் பாங்கு தனிப்பட இருத்தல் வேண்டும். மற்றக் காரியங்களுக்காக வேறு கூட்டுறவு ஸ்தாபனம் அமைக்கப் பெறல் வேண்டும்.

சென்னைச் சர்வ கலாசாலைப் பொருளாதாரப் பேராசிரியரான திருவாளர் P. J. தாமஸ் அவர்களும், திருவாளர் ஆஸ்டின் I.C.S. அவர்களும் கூறி இருப்பதே போல மூவகைக் கூட்டுறவு ஸ்தாபனங்கள் ஏற்பட்டு, அவை ஒன்றுக்கொன்று ஆதாரமாகவும் உதவியாகவும் இருக்க வேண்டும். அம்மூவகை ஸ்தாபனங்களாவன (1) கூட்டுறவு கிராமப் பாங்குகள், (2) நில அடைமானப் பாங்குகள், (3) கடன், விற்பனைச் சங்கங்கள் என்பன.

இவைகளில் கூட்டுறவுக் கிராமப் பாங்குகள் விவசாயியின் சாகுபடிச் செலவுக்காகக் குறுகிய

காலக்கடனைக் கொடுத்தல் வேண்டும். அந்தக் கடன் அந்த வருஷ மாசூலிலிருந்தே கொடுக்கப்படல் வேண்டும். இவை விவசாயமல்லாத வேறெவ்விதக் காரியத்துக்கும் பணம் கொடுக்கக்கூடாது.

நில அடைமானப் பாங்குகளோ, விவசாயியைப் பழங்கடனாகிய வலைச் சிக்கலிலிருந்து விடுவிக்க நீண்ட காலக் கடனைக் கொடுத்து, நாளடைவில் கொடுத்து அடைக்கும்படி செய்வன. இப்பாங்குகள் பழங்கடனைக் கொடுத்து உதவுவது விவசாயவிருத்தியாகிய பயனைத் தரவில்லையானால், இப்பாங்குகளின் முயற்சி விழலுக்கிறைத்த நீரே போல வீணாகும்.

கடன், விற்பனைச் சங்கங்கள் தானியத்தையோ விளை பொருளையோ வைத்துக்கொண்டு அதன் மேல் கடன் கொடுத்து, நல்ல விலை விற்கும்போது அப்பண்டத்தை விற்று, கடன் கொடுத்த தொகையை எடுத்துக்கொண்டு எஞ்சியதைப் பொருள் கொடுத்தவரிடம் சேர்ப்பிக்கும் சங்கங்களாகும்.

இவை மூன்றும் ஒன்றுபட வேலை செய்ய வேண்டும். ஒரு விவசாயி தன் பழங்கடனை நில அடைமானப் பாங்கின் உதவியால் கொடுத்துத் தீர்த்துவிட்டு, செவ்வையாகப் பயிரிடுவதற்கு வேண்டிய செலவு தொகையை கிராமக் கூட்டுறவுப் பாங்கில் வாங்கிக்கொண்டு, நன்றாகச் சாகுபடி செய்து, விளையும் பொருள்களைக் கூட்டுறவு விற்பனைச் சங்கங்களின் மூலம் விற்க வேண்டும். விற்பனைச் சங்கம் அப்பொருள்களை நல்ல விலைக்கு விற்று நில அடைமானப் பாங்குக்கும் கிராமப் பாங்குக்கும் சேர

வேண்டிய தொகையைப் பிடித்துக்கொண்டு, மிகுதி யையே அந்த விவசாயிக்குக் கொடுத்தல் வேண்டும். கூட்டுறவுச் சங்க உறுப்பினர், கூட்டுறவு விற்பனைச் சங்கத்தின் மூலந்தான் தம் பொருள்களை விற்க வேண்டுமென்னும் நிர்ப்பந்தம் இருக்க வேண்டும். அப்படிச் செய்யாவிட்டால், தண்டனைகூட இருத்தல் வேண்டும். உறுப்பினரின் பண்டங்களைச் சில காலமாவது வைத்திருக்க வேண்டுமானால், அதற்குத் தக்க கிடங்குகள் பல கட்டப்பட வேண்டும்.

கூட்டுறவுக் கிராமப் பாங்குகள் கடன் கொடுக்கும்போது மனிதனது சக்தி, தகுதி, கடன் வாங்கும் காரியம் இவைகளை நன்கு கவனிக்க வேண்டும். புதியவராகச் சேர்க்கும் உறுப்பினரை அவர் நல்ல தகுதியுடையவரா எனப் பார்த்தே சேர்க்க வேண்டும். சங்கத்திற்கு வர வேண்டிய பணத்தைக் கண்டிப்பாய் வசூலித்தாக வேண்டும்.

இதற்கு முன் கடன் கொடுத்துள்ள சங்கங்கள் பாக்கிகளைச் சீக்கிரம் வசூலிக்க வேண்டும்; அப்படி வசூலிப்பதற்கான சகல நடவடிக்கைகளையும் விரைவில் எடுத்துக்கொள்ள வேண்டும். வசூல் செய்ய முடியாதெனக் கைவிட வேண்டிய கடன்களைக் கணக்கில் விடாது எழுதி வைத்துக்கொண்டிருப்பதில் பயனில்லை. வராதென உறுதியாகத் தெரியும் கடன் தொகையை நஷ்டத்தில் எழுதிக்கொள்ள வேண்டுவதுதான். ஒரு சங்கம் சரியாக நடவாதென்பது நிச்சயமானால், அதை மூடிவிட வேண்டும். ஒவ்வோர் உறுப்பினரும் சிறு தொகையையாவது

சேர்க்க வேண்டுமென்ற நியதியை ஏற்படுத்த வேண்டும்.

கூட்டுறவுப் பாங்குகளில் விவசாயிகள் தங்கட்கு முடையானபோது சீக்கிரத்தில் கடன் வாங்க முடியவில்லை. பீஹார் ஒரிஸ்ஸா முதலிய இடங்களில் ஒரு கடனை வாங்க ஆறு வாரங்களாகின்றன எனக் கூறப்படுகின்றது. சென்னை மாகாணத்தில் சுமார் இரண்டு மாதங்கள் கூட ஆகின்றன என மாகாணப் பாங்கு விசாரணைக் கமிட்டியார் கூறி இருக்கின்றனர். வானம் மழை பெய்ததும் பூமி காய்வதன் முன்பு பணம் வேண்டுகிற விவசாயி இவ்வளவு காலம் காத்திருப்பதெனில் எப்படி முடியும்? எனவே, இச்சங்கங்களில் சீக்கிரம் கடன் பெறக் கூடிய முறைகள் அநுஷ்டிக்கப்படல் வேண்டும். இப்பாங்குகளின் பொறுப்பு வரையறுக்கப்பட்டதாகவே இருத்தல் வேண்டும். C. R. பே என்னும் நிபுணரின் கருத்தும் இதுவே.

விற்பனைச் சங்கங்கள் உறுப்பினர்களின் பண்டங்களை நல்ல விலைக்கு விற்றுக்கொடுத்துக்கமிஷன் பெறும் முறையையே பலர் ஆதரிக்கின்றார்கள். அதையன்றிச் சரக்குகளை வரும்போது வாங்கி வைத்திருந்து, நல்ல விலை இருக்கும்போது விற்பதென்பதில் நஷ்டமேற்படவும் கூடுமென எண்ணுகிறார்கள். ரிசர்வ் பாங்கு நிருவாகிகளும் வாங்கிவைத்திருந்து விற்கும் முறையை ஆதரிக்கிறார்களில்லை.

ஆனால், இக்கடன், விற்பனைச் சங்கங்கள் பண்டத்தை வைத்துக்கொண்டு கடன் கொடுக்க

லாம். சில சமயங்களில் அவசியமானால் வயலிலுள்ள பயிரின்பேரில் ஏக்கருக்கு இவ்வளவு ரூபாய்க்கு மேல் கடன் கொடுக்கக் கூடாதென வரையறை செய்துகொண்டு, கடன் கொடுத்து, பிறகு பண்ட விற்பனை செய்யும்போது அப்பணத்தை எடுத்துக் கொள்ளலாம்.

இந்திய கூட்டுறவு ஸ்தாபனங்களின் நிருவாகத்திலும் சில மாறுதல்கள் ஏற்பட வேண்டும். முக்கியமாகக் கூட்டுறவு இலாக்கா உத்தியோகத்தினர் அனைவருக்கும் கூட்டுறவு முறைகளில் நல்ல தேர்ச்சி அளிக்கப்பட வேண்டும். கூட்டுறவு இயக்கத்தில் சேரும் ஒவ்வோர் உறுப்பினருக்கும் கூட்டுறவைப் பற்றிய விஷயம் அனைத்தும் நன்றாகத் தெரியும்படி செய்தல்வேண்டும். இஃது அவசியத்திலும் அவசியம்.

கூட்டுறவு ஸ்தாபனங்களின் மேல் கண்காணிப்பு, அவைகளின் கணக்குச் சோதனை ஆகிய இரண்டும் இப்போது கூட்டுறவு இலாக்காவின் கையிலேயே இருக்கின்றன. அது பாராட்டத்தக்கதன்று. கணக்குச் சோதனை தனிப்பட்ட ஒரு குழுவினரால், அல்லது தனிப்பட அதற்கென ஏற்படுத்தப்படும் ஓர் இலாக்காவால் நடத்தப்படல் வேண்டும். அல்லது தகுதிவாய்ந்த கணக்குப்பரிசோதகர் இவரிவரென அரசினர் சிலருடைய பெயரை வெளியிட்டு, அவர்களில் எவரையேனும் கொண்டு கூட்டுறவு ஸ்தாபனங்கள் கணக்குச் சோதனை நடைபெறுமாறு செய்ய வேண்டும். எப்படியாயினும் இப்போதுள்ள முறை மாற்றப்படல் வேண்டும்.

கூட்டுறவு இயக்கத்தை நாளடைவில் அரசினர் மக்களிடத்திலேயே ஒப்புவித்தல் வேண்டும். அரசாங்கத்தினரின் ஆதிக்கம் நாளடைவில் குறைவுபட வேண்டும். கூட்டுறவு இயக்கம் மக்களின் நன்மைக்காக அரசினரால் நடத்தப்படுவதாக இருத்தல் ஆகாது. எவருடைய நன்மைக்காக அவ்வியக்கம் இருக்கிறதோ, அவராலேயே அவ்வியக்கம் நடத்தப்படல் வேண்டும். கூட்டுறவு இயக்கத்திலே ரெஜிஸ்தராரின் முக்கிய ஸ்தானம் மறைய வேண்டும்; கூட்டுறவு இயக்கத்தில் கூட்டுறவுச் சங்கமே பிரதான இடம் பெற வேண்டும். அப்போதுதான் இவ்வியக்கம் மக்களின் இயக்கமாகத் தழைத்து ஓங்கி வேரூன்றி வன்மையாய் நிற்கும்.

கூட்டுறவு இயக்கம் இன்னும் அதிகமாகப் பரவாத நிலையிலேயே நம் நாட்டில் அது பெரிதும் நன்மைகளை விளைத்துள்ளது.

கூட்டுறவு இயக்கம் குறைந்த வட்டிக்குக் கடன் கொடுக்க ஆரம்பித்ததால், பலர் பயன் பெற்றனர். கூட்டுறவுச் சங்கங்கள் குறைந்த வட்டிக்குக் கடன் கொடுக்க ஆரம்பித்ததும், லேவாதேவிக்காரர்களும் வட்டியை மிகவும் குறைக்க நேரிட்டுவிட்டது. அதனால் கூட்டுறவு இயக்கத்தைச் சேராதவர்களுங் கூடக் குறைந்த வட்டிக்குப் பணம் பெறும் வசதி உண்டாயிற்று.

பல சங்கங்கள் தங்கள் உறுப்பினரிடையே சிக்கன முறைகளைப் புகுத்தியுள்ளன. பொதுக் காரியங்கட்கும், தரும காரியங்கட்கும் அநேக சங்கங்

கள் பணம் கொடுத்து உதவியுள்ளன; உதவுகின்றன. வங்காளத்தில் சில கூட்டுறவு ஸ்தாபனங்கள், தரும வைத்தியசாலையையும், மிருக வைத்தியசாலையையும் வைத்து நடத்துகின்றன. வேறு பல இடங்களில் பல வகைச் சங்கங்கள் பல வகையிற் பயன்படுகின்றன.

கூட்டுறவு இயக்கத்தால் இந்தியா இதுவரை அடைந்துள்ள நன்மைகளைத் திரு. ஆஸ்டின் I. C. S. என்பவர் சுருக்கமாகவும் விளக்கமாகவும் கூறி இருக்கிறார் :—

(1) மாகாண முழுதும் வட்டி மிகவும் குறைந்ததற்குக் கூட்டுறவு இயக்கமே முக்கிய காரணம்.

(2) எல்லா ஜாதியினரும், எல்லாச் சமூகத்தினரும் சமத்துவமாகக் கூடி, சமத்துவ நிலையில் நின்று, சமத்துவமாகப் பழகிக் காரியங்களை நடத்துவதன்மூலம், ஆட்சிமுறையிற் பயிற்சி ஏற்படுகிறது.

(3) தேசப் பொருள் விருத்திக்கு அடிப்படையானது **சிக்கனம்** என்பதை எல்லோருக்கும் படும்படியாக இவ்வியக்கம் எடுத்துக் காட்டியுள்ளது.

(4) கிராமத்தை எப்படிப் பொருளாதார முறையில் சீர்படுத்திப் புதுப்பிப்பது என்பதற்கு இவ்வியக்கம் பெரிதும் பயன் உள்ளதாக இருக்கிறது.

(5) ஆங்காங்குச் சிற்சில விவரங்களை இனி அமைத்து வழக்கிற்குக் கொண்டுவர வேண்டி இருப்பினும், கிராமச் சீர்திருத்தமானது எவ்வாறு செய்யப்பட வேண்டும் என்பதை இது வரையறை செய்

துள்ளது. கிராமச் சீர்திருத்தத்திற்கு இவ்வியக்கம் அடி கோலி இருக்கிறது.

இப்போதுள்ள நிலையிலேயே இத்துணைப்பயன் உண்டாகுமானால், கூட்டுறவால் நம் நாடு எவ்வளவு பயன்பெறக்கூடும் என்பதைக் கூறவும் வேண்டுமோ? நம் நாட்டின் பிற்கால வாழ்வு கூட்டுறவாலேயேதான் ஆக வேண்டும். கூட்டுறவு விருத்தியானால்தான் நம் வாழ்வு சிறக்கும். நமது தேசத்து **வைஸ்ராய்** துரையும், "கூட்டுறவாலேதான் கிராம இந்தியா உய்ய வேண்டும்," எனக் கூறி இருக்கிறார்.

கூட்டுறவின் தத்துவங்களும் இலட்சியங்களும் நம் மக்களின் மனப்பாங்கிற்கேற்றவை. "எல்லாரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே, அல்லாமல் வேறொன்று அறியேன்," என்று கூறிய பெரியோர்களின் வழியில் வந்தவர்கள் நாம். இந்தியர் அனைவரும் சுகம்பெற்று இன்புடன் வாழ வேண்டுமென்பதே நமது குறிக்கோள். அதுவே நம் வாழ்க்கைப் பேறு. ஆதலால், நாம் கூட்டுறவு முறைகளை அறிந்து, பிறர்க்கும் எடுத்துக்கூறி, எல்லோரும் ஒன்று சேர்ந்து கூட்டுறவு முறையில் வாழ்க்கையை நடத்தி இன்புற்றிருப்போமாக!

"ஒன்றுபட் டாலுண்டு வாழ்வே—நம்மில்
ஒற்றுமை நீங்கில் அனைவர்க்கும் தாழ்வே!
நன்றிது தேர்ந்திடல் வேண்டும்—இந்த
ஞானம்வந் தாற்பின் நமக்கெது வேண்டும்?"

—பாரதியார்.

The Liberty Press, G. T., Madras.

## Acknowledgment

I am very much indebted to numerous writers on Co-operation whose works were of immense help to me in the preparation of this small work in Tamil. I have to make special mention of the remarkable and valuable works of C. R. Fay, Matthai and Gide. In the list given below I have mentioned the other books, Reports and Journals, which I made a good use of.

*Gide*—Consumers' Cooperative Societies.
*Fay*—Cooperation at Home and Abroad.
*Wolff*—Peoples' Banks.
*Wolff*—Cooperation in India.
*Herrick*—Rural Credits.
*Ogata*—Cooperative Movement in Japan.
*Walter*—Cooperation in Changing Italy.
*Smith Gordon and Obrien*—Cooperation in Many Lands.
*Smith Gordon and Obrien*—Cooperation in Ireland.
*Smith Gordon*—Cooperation for Farmers.
*Mukerjee*—Cooperative Movement in India.
*Kaji*—Cooperation in India.
*Matthai*—Agricultural Cooperation in India.
*Rider Haggar*—Rural Denmark and its lessons.
*Strickland*—Studies in European Cooperation.
*Raina*—Cooperative Movement in India.
*Ramakrishna Aiyer*—Consumers' Cooperation.
*E. M. Hough*—The Cooperative Movement in India.
*Theodor Cassau*—The Consumers' Cooperative Movement in Germany.
The Cooperative Manual.
The Indian Central Banking Enquiry Committee Report.
The Madras Provincial Banking Committee Report.
The Indian Cooperative Review.
The Madras Cooperative Manual.

## இந்நூலாசிரியர் எழுதிய வேறு நூல்கள்

1. விவசாயிகளின் கடன் தொல்லையும்
புதிய சட்டமும் .... விலை அணா 8
(கனம். திரு. இராமநாதன் அவர்கள் முகவுரையுடன்)

2. கடன் நிவாரணச் சட்டமும் அதைப்
பற்றிய முழு விவரங்களும் விலை அணா 12
(வண்ணப் படங்களுடன்)

3. அயல் நாடுகளில் கடன் ஒழிப்பு
விலை அணா 12

4. கிராமச் சீர்திருத்தம் .... விலை ரூபா 1
(கனம். டாக்டர் சுப்பராயன் அவர்கள் முகவுரையுடன்)